கிறது. ஒவ்வொரு அங்கஹாரத்திற்கும் உரிய தாளமும் அதற்கான சொல்லுக்கட்டும் நாட்டிய சாஸ்திரத்தில் சொல்லப்படவில்லை. ஆனால் அதிர்ஷ்டவசமாக ஸரஸ்வதி மஹாலில் உள்ள 'சங்கீத முக்தாவளி' என்னும் நூலில் இவை காணப்படுகின்றன. இந்த நூல் தேவேந்திராசாரியார் என்பவரால் இயற்றப்பட்டதாகத் தெரிகிறது [2].

பரதார்ணவத்தில் சொல்லப்பட்டிருக்கும் அங்கஹாரங்கள் இவைகளினின்றும் முற்றிலும் வேறுபட்டவை. முதலாவதாக, இவை நர்த்தன கரணங்களால் தொகுக்கப்பட்டவைகளல்ல. இரண்டாவதாக இவை ஒவ்வொன்றும் ஒவ்வொருவகை ரஸபாவத்தைப் போஷிக்கக்கூடியதாகவும் அமைக்கப்பட்டவை. இவ்விரு அங்கஹாரங்களும் சிவபிரானாலேயே ஆடப்பட்டவையாக இரு நூல்களும் கூறியபோதிலும் நாட்டிய சாஸ்திரத்தில் சொல்லப்பட்டிருக்கும் அங்கஹாரங்கள் சிவபார்வதி நர்த்தனத்தில் சிவபிரானால் ஆடப்பட்ட பகுதியாகவும், பரதார்ணவத்தில் சொல்லப்பட்டிருக்கும் அங்கஹாரங்கள் பார்வதிதேவியின் ஆடற்பகுதியாகவும் இருக்கலாமோ என்று சந்தேகிக்க இடமிருக்கிறது.

10வது அத்தியாயத்தில் நானார்த்த ஹஸ்தங்கள் அதாவது ஒரே முத்திரையைப் பல பொருள்களைக் குறிப்பிட உபயோகிக்கும் முறை விவரிக்கப்பட்டுள்ளது. 11வது அத்தியாயத்தில் ஏற்கெனவே 9வது அத்தியாயத்தில் விவரிக்கப்பட்ட அங்கஹாரங்களுடன் வேறு நர்த்தனப் பகுதி

---

2. 'சங்கீத முக்தாவளி' என்ற பெயரில் இரண்டு நூல்கள் இருக்கின்றன. இரண்டின் ஆசிரியர் பெயரும் ஒன்றாகவே இருக்கிறது. ஒன்று ஓலைச்சுவடி. அதில் அக்கால சம்பிரதாயத்திலுள்ள நாட்டிய நர்த்தன சாஸ்திரம் தெளிவாக எழுதப்பட்டிருக்கிறது. இரண்டாவது காகிதச் சுவடி. இதில் சம்பிரதாயம் விரிவாகக் கூறப்பட்டிருக்கிறது. இரண்டாவதாகக் கூறப்பட்ட நூலிலேயே ஒவ்வொரு அங்கஹாரத்திற்கும் உரிய தாளமும் சொல்லுக்கட்டும் காணப்படுகின்றது.

களையும் சேர்த்து ஆடும் முறை சொல்லப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு அங்கஹாரத்தோடும் ஓர் ஸ்தானகம் இணைக்கப் பட்டு இவ்விணைப்புக்கு முன்பு ஓர் ஸ்தானகத்தோடுகூடிய ஆகாசசாரியும், பின்பு மற்றொரு ஸ்தானகத்தோடுகூடிய பூமி சாரியும் சேர்த்துத் தொகுக்கப்பட்டுள்ளது. இவ்வித மாக ஒவ்வொரு தொகுப்பிலும் ஆறு உறுப்புக்கள் இருக் கின்றன. இந்தத் தொகுப்புக்கு 'ச்ருங்கநாட்டியம்' என்று பெயர். பரமசிவன் கைலாசகிரியில் உத்தியான வனத்தை எதிர்நோக்கிய சிகரத்தில் இந்த நர்த்தனத்தை ஆடிக்காட் டியதால் இதற்கு இப்பெயர் ஏற்பட்டது. இந்த அத்தி யாயத்தில் 9 வகை ச்ருங்க நாட்டியங்கள் விவரிக்கப்பட்டு இருக்கின்றன.

12-வது அத்தியாயத்தில் ச்ருங்க நாட்டியம் வஸந் தோற்சவத்தில் பார்வதி தேவியின் விருப்பப்படி எவ்வாறு கைலயங்கிரியின் சிகரத்தில் நடைபெற்றது என்பது விவ ரிக்கப்பட்டிருக்கிறது. பிறகு ஸ்தானகங்களை உண்டாக் கிய தேவர்களைப்பற்றிய விவரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. ஸ்தானகங்களோடு சேரக்கூடிய முத்திரைகளைப்பற்றிய விவரத்தோடு இந்த அத்தியாயம் முடிகிறது.

13-வது அத்தியாயத்தில் 'ஸப்த லாஸ்யம்' என்ற பெயருடைய ஏழு வகை நர்த்தனங்களும் விவரிக்கப்படு கின்றன. சுத்த நாட்டியம், தேசீ நாட்டியம், பேருணி, ப்ரேங்கணி, குண்டலி, தண்டிகா, கலசம் என்பவை அந்த ஏழு நாட்டியங்களாகும். இவற்றுள் முதலாவதான சுத்த நாட்டியம் ஏழு வகை ப்ரமண தாண்டவங்களாகப் பிரிக் கப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு தாண்டவத்தோடும் ஒரு கதி, ஒரு கரணம், ஒரு சாரி இவை சேர்க்கப்படுகின்றன. கதி அல்லது நடை என்பது ஓர் ஸ்தானகமும், ஓர் நடை யும், ஓர் முத்திரையும் சேர்ந்தது. இவை ஒவ்வொன்றுக் கும் தாளங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. ஒவ்வொரு தாளத்திற்கும் அதற்குரிய சொல்லுக்கட்டு ஏற்பட்டிருக்

கிறது. இரண்டாவதான தேசீ நாட்டியம் ஐந்து வகைத் தாண்டவங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. ஒவ்வொன்ரூடும் ஒரு கதி, கரணம், சாரி சேர்க்கப்பட்டிருக்கின்றன. ஒவ்வொன்றுக்கும் அதற்கான தாளமும் சொல்லுக்கட்டும் கொடுக்கப்பட்டிருக்கிறது. சுத்த நாட்டியம் பரமசிவனுலும், தேசீ நாட்டியம் பார்வதிதேவியாலும் ஆடிக்காட்டப் பட்டதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இதை விவரிக்கையில் தாண்டவம் லாஸ்யம் என்னும் சொற்கள் ஆடவர் நர்த்தனம், மகளிர் நர்த்தனம் இரண்டிற்கும் வித்தியாசமின்றிப் பொதுவாக உபயோகப்படுத்தப்பட்டிருக்கின்றன. ஏழு வகை ஆடலுக்கும் 'ஸப்த லாஸ்யம்' என்ற பெயர் ஏற்பட்டிருந்தபோதிலும் அதன் முதல் இரண்டு வகையிலுமுள்ள உறுப்புகளுக்குத் தாண்டவங்கள் என்ற பெயர் ஏற்பட்டிருக்கிறது.

மற்ற ஐந்து வகை நர்த்தனங்களில் பேருணி, ப்ரேங்கணி, குண்டலி என்பவை ஆதியில் முறையே ப்ரும்மா, ஸரஸ்வதி, மஹாவிஷ்ணு இவர்களால் ஆடிக் காட்டப் பட்டன. தண்டிகா, கலசம் இரண்டையும் மஹாலக்ஷ்மியே ஆடிக்காட்டினுர். இவை ஒவ்வொன்ரூடும் அதற்குரிய கரணமும், சாரியும் சேர்க்கப்பட்டிருக்கிறது. இவைகள் வரிசைக்கிரமமாகவும் விஸ்தாரமாகவும் 14-வது அத்தியாயத்தில் விவரிக்கப்படுகின்றன.

கடைசி அத்தியாயமாகிய 15-வது அத்தியாயத்தில் புஷ்பாஞ்சலி என்னும் அலாரிப்பு நர்த்தனத்தின் விதிகள் கூறப்படுகின்றன. தேவசபை, அரச சபை, மக்கள் சபை இவை ஒவ்வொன்றுக்கும் விதிகள் வெவ்வேருக ஏற்பட்டிருக்கின்றன.

அபிநயத்திற்குப் பரதர் 'நாட்டிய சாஸ்திரம்' எவ்வாறு ஆதார நூலாக விளங்குகிறதோ அவ்வாறே பரதார்ணவம் நர்த்தனத்திற்கு ஆதார நூலாக உள்ளது. இந்த

நூலைக் கவனமாகக் கற்று அதைச் சம்பிரதாயத்தில் சேர்த்துக்கொண்டால் நமது நர்த்தனக் கலையில் பல புதிய அம்சங்கள் சேர்ந்து பூரணமாக விளங்கும்.

பண்டார்க்கர் கீழ்த்திசை ஆராய்ச்சி ஸ்தாபனத்தி லிருந்து கிடைத்த சுவடியில் உள்ள அதிகமான பாகங் களில் பெரும்பாலும் அபிநயமே அடங்கியிருக்கிறது. ஆகையால் அதை நமது நூலில் உள்ள பகுதிகளோடு சேர்க்க முடியவில்லை. ஆகையால் அது அனுபந்தமாகக் கொடுக்கப்படுகிறது. பரதார்ணவம் என்னும் நூல் 4000 ச்லோகங்கள் கொண்டதாகச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் அதன் இதர பகுதிகளைத் தேடிச் சேர்க்கவேண் டியது அவசியம். அவ்விதப் பகுதி கிடைக்குமாயின் அது அடுத்த பதிப்பில் சேர்த்துக்கொள்ளப்படும்.

ஸரஸ்வதி மஹால்,
தஞ்சாவூர்.
17—10—'56

கே. வாஸுதேவ சாஸ்திரிகள்

# எமது வெளியீடுகள்

| | ரூ-பை. |
|---|---|
| 1. தமிழ் எண்ணும் எழுத்தும் | 150-00 |
| 2. நட்சத்திர சிந்தாமணி பாகம்-1 | 310-00 |
| 3. நட்சத்திர சிந்தாமணி பாகம்-2 | 200-00 |
| 4. நட்சத்திர சிந்தாமணி பாகம்-3 | 250-00 |
| 5. மாடு, குதிரை வைத்தியம் | 180-00 |
| 6. கொங்கணர் சரக்கு வைப்பு (நூறு) | 100-00 |
| 7. சதாசிவத்தியானம் | 90-00 |
| 8. கொடுந்தமிழ் | 250-00 |
| 9. பாண்டு, காமாலை சிகிட்சை | 150-00 |
| 10. ஞானக் குறவஞ்சி | 70-00 |
| 11. ஜ்வர ரோக சிகிட்சை | 185-00 |
| 12. குன்மரோக சிகிட்சை | 240-00 |
| 13. திருப்பெருந்துறைப் புராணம் | 320-00 |
| 14. தொல்காப்பியம் | 270-00 |
| 15. திருமுருகாற்றுப்படை உரை | 320-00 |
| 16. சித்திர புத்திர அம்மானை | 120-00 |
| 17. இலக்கண விளக்கம்-செய்யுளியல் | 230-00 |
| 18. இலக்கண விளக்கம்-பாட்டியியல் | 500-00 |
| 19. இலக்கண விளக்கம்-அணியியல் | 310-00 |
| 20. ஆசிரிய நிகண்டு பாகம்-1 | 600-00 |
| 21. ஆசிரிய நிகண்டு பாகம்-2 | 40-00 |
| 22. அழகரந்தாதி | 100-00 |

## ॥ अनुक्रमणिका ॥

## Table of Contents.

## अष्टमोऽध्यायः — चारीलक्षणम् 263—289

## CHAPTER VIII—DESCRIPTION OF CĀRIS OR MOVEMENTS OF LIMBS BELOW THE HIP

## எட்டாவது அத்தியாயம்—'சாரிகள்' அல்லது இடுப்பு, துடை, முழங்கால், பாதம் இவைகள் சேர்ந்த அசைவுகள்.

अनुबन्धः १.

APPENDIX 1

அனுபந்தம் 1.

## मुद्राणां विशिष्य प्रयोगाः

SPECIAL USES OF MUDRAS

**முத்திரைகளின் விசேஷ உபயோகங்கள்**

॥ श्रीः ॥

# भरतार्णवः

नन्दिकेश्वरविरचितः ।

---

## प्रथमोऽध्यायः ।

### असंयुतहस्ताः — २७.

पताकस्त्रिपताकोऽर्धपताकः कर्तरीमुखः ।
मयूराख्योऽर्धचन्द्रश्च अरालशुकतुण्डकौ ॥ १ ॥
मुष्टिश्च शिखराख्यश्च कपित्थः खटकामुखः ।
सूच्यास्यः पद्मकोशश्च बाणः सर्पशिरस्तथा ॥ २ ॥
मृगशीर्षः सिंहमुखः काङ्गूलश्चालपल्लवः ।
चतुरो भ्रमरश्चैव हंसास्यो हंसपक्षकः ॥ ३ ॥
संदंशो मुकुलश्चैव ताम्रचूडस्ततः परम् ।
इत्यसंयुतहस्तानां नामलक्षणमिष्यते ॥ ४ ॥

# BHARATĀRṆAVA

OF

# NANDIKĒŚVARA

## CHAPTER I.

### SINGLE-HANDED GESTURES—27.

(1-4) Single-handed gestures are the following :—

1. Pataka (banner) 2. Tripatāka (threefold banner) 3. Ardha Patāka (half-banner) 4. Kartarīmukha

(scissor-mouth) 5. Mayūra (pea-cock) 6. Ardhachandra (half-moon) 7. Arāla (curved) 8. S'ukatuṇḍa (parrot-bill) 9. Muṣṭi (fist) 10. S'ikhara (peak) 11. Kapittha (monkey-grasp) 12. Khaṭakāmukha (boxer's fist-face) 13. Sūcyāsya (needle-pointed) 14. Padmakōs'a (closed lotus) 15. Bāṇa (arrow) 16. Sarpas'iras (serpent's hood) 17. Mṛgas'īrṣa (deer's head) 18. Simhamukha (the lion's face) 19. Kāngūla (corn-plucking) 20. Alapallava (lotus in bloom) 21. Catura (smart) 22. Bhramara (the bee) 23. Hamsāsya (swan-mouth) 24. Hamsa-pakṣa (swan-wing) 25. Sandams'a (close bite) 26. Mukula (the bud) 27. Tāmracūḍa (the cock).

# பரதார்ணவம்

**நந்திகேசுவரர் அருளியது.**

*அத்தியாயம் 1.*

## அஸம்யுத ஹஸ்தங்கள்—27.

*(1–4) ஒற்றைக்கை முத்திரைகள் வருமாறு :—*

*1. பதாகம் (கொடி) 2. த்ரிபதாகம் (முப்பிரிவுக் கொடி) 3. அர்த்தபதாகம் (கொடியின் பாதி) 4. கர்த்தரீ முகம் (கத்தரிக்கோல் வாய்) 5. மயூரம் (மயில்) 6. அர்த்த சந்திரம் (அரைச் சந்திரன்) 7. அராளம் (வளைவு) 8. சுக துண்டம் (கிளி மூக்கு) 9. முஷ்டி (முஷ்டி) 10. சிகரம் (உச்சி) 11. கபித்தம் (குரங்குப்பிடி) 12. கடகா முகம் (குத்துக்கட்டையின் முகம்) 13. ஸூச்யாஸ்யம் (ஊசி முனை) 14. பத்மகோசம் (குவிந்த தாமரை) 15. பாணம் (அம்பு) 16. ஸர்ப்பசிரஸ் (பாம்பின் தலை) 17. ம்ருகசீர்ஷம் (மான் தலை) 18. ஸிம்ஹ முகம் (சிங்க முகம்) 19. காங் கூலம் (தினைக்கதிர் பிடுங்குதல்) 20. அலபல்லவம் (அலர்ந்த*

தாமரை) 21. சதுரம் (சாதுரியம்) 22. ப்ரமரம் (வண்டு) 23. ஹம்ஸாஸ்யம் (அன்னத்தின் வாய்) 24. ஹம்ஸ பக்ஷம் (அன்னத்தின் சிறகு) 25. ஸந்தம்சம் (இறுகப் பிடித்தல்) 26. முகுளம் (மொக்கு) 27. தாம்ரசூடம் (சேவல்)

## १. पताकः ।

प्रसारणाच्चाङ्गुलीनामङ्गुष्ठस्य च कुञ्चनात् ।
पताकाख्यः करः प्रोक्तः करटीकाविचक्षणैः ॥ ५ ॥
नाट्यारम्भे वारिवाहे वने वस्तुनिषेधने ।
कुचस्थले निशायाञ्च नद्याममरमण्डले ॥ ६ ॥
तुरगे खण्डने वायौ शयने गमनोद्यते ।
प्रतापे च प्रसादे च चन्द्रिकायां घनातपे ॥ ७ ॥
कवाटबन्धने सप्तविभक्त्यर्थे तरङ्गके ।
एवमर्थेषु युज्यन्ते पताकाहस्तभावनाः ॥ ८ ॥

### 1. PATĀKA (banner)

(5-8) When the fingers are well stretched and the thumb is shortened, the gesture is called 'Patāka'.

*Uses:*—It is used in the beginning of a dance, to denote a cloud, to indicate a forest, in forbidding an act, to denote the region of the bosom, to indicate the night, and in 'manḍala' dance. It is also used to denote a river, to indicate an assembly of celestial beings, to denote a horse, to express condemnation, to indicate the blowing of winds, to show the act of lying down, in giving leave to go, to denote heroism, good humour, moonlight and severe heat of the sun, in

closing the door, to express the meaning of the seven cases and to denote waves.

### 1. பதாகம் (கொடி).

(5–8) எல்லா விரல்களையும் நீட்டிக் கட்டை விரலைக் குறுக்கினால் அந்த முத்திரை 'பதாகம்' எனப்படும்.

உபயோகம்:—இந்த முத்திரை நாட்டிய ஆரம்பத்திலும், மேகம், காடு, இவைகளைக் குறிப்பிடுவதற்கும், ஒரு செய்கையைத் தடுப்பதிலும், மார்பகத்தைக் குறிப்பிடுவதிலும், இரவைக் குறிப்பிடவும், நதியைக் குறிப்பிடுவதற்கும், மண்டல நாட்டியத்திலும், தேவர்களின் கூட்டத்தைக் குறிப்பிடவும், குதிரையைக் குறிப்பிடவும், கண்டனத்தைத் தெரிவிப்பதிலும், காற்று வீசுவதைக் காட்டவும், படுத்திருப்பதையும், கிளம்பிப்போக உத்தரவு கொடுப்பதற்கும், பிரதாபத்தைக் குறிப்பிடவும், சந்தோஷத்தையும், நிலாவையும், கடும் வெயிலையும் குறிப்பிடவும், கதவைச்சாத்துவதிலும், ஏழு வேற்றுமைகளின் பொருள்களை உணர்த்துவதிலும், அலைகளைக் குறிப்பிடுவதற்கும் உபயோகப்படுகிறது.

### २. त्रिपताकः ।

पताकेऽनामिका वक्रा यद्यसौ त्रिपताककः ।
मकुटे वृक्षभावेषु वज्रे तद्धरवासवे ॥ ९ ॥
केतकीकुसुमे दीपे वह्निज्वालाविजृम्भणे ।
बाणार्थे युज्यते सोऽयं त्रिपताकाभिधः करः ॥ १० ॥

### 2. TRIPATĀKA (three-fold banner)

(9–10) If in Patāka, the ring finger is bent, the 'mudra' is called Tripatāka.

*Uses:*—It is used to denote a coronet, to show a tree, to indicate the Vajrāyudha (the electrified rod) of

Indra, and Indra himself, to denote the flower of *Aloe Indica* (தாழம்பூ), a lamp, and flames of fire, and to denote an arrow.

2. த்ரிபதாகம் (முப்பிரிவுக்கொடி).

(9–10) பதாக முத்திரையில் மோதிர விரல் வளைக்கப் பட்டால் அதற்கு 'த்ரிபதாகம்' என்று பெயர்.

உபயோகம்:—இந்த முத்திரை மகுடத்தைக் குறிப்பிடவும், மரத்தைக் குறிப்பிடவும், வஜ்ராயுதத்தையும், அதை ஆயுதமாகக் கொண்ட இந்திரனையும் குறிப்பிடவும், தாழம்பூ, விளக்கு, அக்னிஜ்வாலை இவைகளைக் குறிப்பிடவும், அம்பைக் குறிப்பிடவும் உபயோகப்படுகிறது.

३. अर्धपताकः ।

त्रिपताकाकनिष्ठा चेद्वक्रिताऽर्धपताकिकः ।
पल्लवे फलके तीरे उभयोरिति वाचके ॥ ११ ॥
क्रकचे छुरिकायां च ध्वजे गोपुरशृङ्गयोः ।
युज्यतेऽर्धपताकोऽयं तत्तत्कर्मप्रयोजकैः ॥ १२ ॥

3. ARDHA PATĀKA (half-banner)

(11-12) If in Tripatāka, the little-finger is also bent, we get 'Ardha Patāka'.

*Uses*:—It is used to denote a tender leaf, a plank, or the bank of a river, to express the idea of 'both', to denote a saw, a knife, a banner, a tower or a pair of horns.

3. அர்த்தபதாகம் (கொடியின்பாதி).

(11–12) த்ரிபதாக முத்திரையில் சுண்டுவிரலும் மடக்கப்பட்டால் 'அர்த்த பதாக' முத்திரையாகும்.

உபயோகம் :—இந்த முத்திரை துளிர் இலை, பலகை இவைகளைக் குறிப்பிடவும், ஒரு நதியின் கரையைக் காட்டுவதற்கும், 'இரண்டும்' என்ற பொருளை உணர்த்துவதற்கும் ரம்பம், கத்தி, கொடி, கோபுரம், இரு கொம்புகள் ஆகியவைகளைக் குறிப்பிடுவதற்கும், உபயோகிக்கத் தகுந்தது.

## ४. कर्तरीमुखः ।

तर्जनीमध्यमे चाऽत्र बहिस्तिर्यङ्मुखे यदि ।
कर्तरीहस्त एवायं तस्य रूपणमुच्यते ॥ १३ ॥
स्त्रीपुंसयोस्तु विश्लेषे विपर्यासपदेऽपि च ।
विद्युदर्थे एकशय्याविरहे कर्तरी भवेत् ॥ १४ ॥

## 4. KARTARĪMUKHA HASTA (Scissor-mouth)

(13–14) When the first finger and the middle finger in 'Ardha Patāka' cross one over the other facing each other sideways, then the hand is called 'Kartarīmukha Hasta'.

*Uses* :— This is used to denote the separation of lovers, to express the idea of 'turning upside down', to denote lightning and to indicate pining alone in the same bed.

**4. கர்த்தரீமுக ஹஸ்தம்** *(கத்தரிக்கோல் வாய்).*

*(13–14)* 'அர்த்தபதாக' முத்திரையில் ஆள்காட்டி விரல், நடுவிரல் இரண்டையும் ஒன்றின்மேலொன்று குறுக்காகச் செல்லும்படி வைத்துக்கொண்டால் அந்த முத்திரைக்கு 'கர்த்தரீமுகம்' என்று பெயர்.

உபயோகம் :—இந்த முத்திரை காதலர்களின் பிரிவையும், தலைகீழாக மாறிய நிலையைக் காட்டுவதற்கும் மின்னலைக் காட்டுவதற்கும், ஒரே படுக்கையில் தனியே வருந்துவதைக் குறிப்பிடவும் உபயோகப்படுகிறது.

### ५. मयूरहस्तः ।

अस्मिन् अनामिकाङ्गुष्ठौ श्लिष्टौ चान्याः प्रसारिताः ।
मयूरहस्तः कथितस्तस्य रूपणमुच्यते ॥ १५ ॥
मयूरास्ये लतायां च हाराणां धारणक्रमे ।
मयूरो युज्यते तत्तदुचितार्थविशारदैः ॥ १६ ॥

5. MAYŪRA HASTA (the pea-cock hand)

(15–16) If in Kartarī Hasta, the ring-finger and the thumb are joined together and the other fingers are stretched out, the hand is called 'Mayūra Hasta'.

*Uses*:—It is used to denote the pea-cock's mouth, to show the growth of creepers, and in showing the wearing of necklaces.

5. மயூர ஹஸ்தம் *(மயில்).*

*(15–16) கர்த்தரீமுக முத்திரையில் சுண்டுவிரலையும் கட்டைவிரலையும் சேர்த்து, மற்ற விரல்களை நீட்டினால் 'மயூர ஹஸ்தம்' என்று பெயர்.*

*உபயோகம்:—இந்த முத்திரை மயிலின் வாயைக் குறிப்பதற்கும், கொடிகளைக் குறிப்பதற்கும், கழுத்தில் முத்துமாலை போன்ற ஆபரணங்களை அணிவதைக் குறிப்பதற்கும் உபயோகப்படுகிறது.*

### ६. अर्धचन्द्रहस्तः ।

अर्धचन्द्रकरस्सोऽयं पताकेऽङ्गुष्ठसारणात् ।
चन्द्रे कृष्णाष्टमीभाजि गलहस्तार्थकेऽपि च ॥ १७ ॥
भल्लायुधे देवतानां अभिषेचनकर्मणि ।
प्राकृतानां नमस्कारेऽप्यर्धचन्द्रो नियुज्यते ॥ १८ ॥

## 6. ARDHACANDRA HASTA (half-moon)

(17–18) If in the Patāka Hasta, the thumb is stretched out (so as to form a semi-circle) it is called 'Ardhacandra Hasta'.

*Uses* :—It is used to denote a waning half-moon, to denote the weapon called 'bhalla' (crescent-faced spear), to show the necking-out of a person, to indicate the bathing and anointing of deities, and in salutations among common folk.

## 6. அர்த்தசந்த்ர ஹஸ்தம் (அரைச்சந்திரன்).

*(17–18) பதாக முத்திரையில் கட்டை விரலை (ஒரு அரை வட்டம் உண்டாகும்படி) நீட்டினுல் அதற்கு 'அர்த்த சந்த்ர ஹஸ்தம்' என்று பெயர்.*

*உபயோகம் :—இது தேய்பிறை அஷ்டமி சந்திரனைக் குறிப்பிடவும், ஒருவரைக் கழுத்தைப்பிடித்துத் தள்ளுவதை குறிப்பிடவும், 'பல்லம்' என்ற ஆயுதத்தைக் குறிப்பிடுவ தற்கும், தேவதைகளுக்கு அபிஷேகம் செய்வதைக் குறிக்க வும், சாதாரண மக்கள் ஒருவருக்கொருவர் வணக்கம் தெரிவித்துக்கொள்வதற்கும் உபயோகப்படுகிறது.*

## ७. अरालहस्तः ।

पताके तर्जनी वक्रा नाम्ना सोऽयं अरालकः ।
विषाद्यमृतपानेषु प्रचण्डपवनेऽपिच ॥ १९ ॥
शौर्यगाम्भीर्यधैर्येषु विनियोगोऽस्य दृश्यते ।

## 7. ARĀLA HASTA (curved hand)

(19) If in Patāka Hasta the first finger is slightly curved, the hand is called 'Arāla Hasta'.

*Uses :*— Its use is in showing the taking in of poison or nectar (or draught of purifying water). It is also used to denote a storm and in indicating valour, majesty and courage.

### 7. அராள ஹஸ்தம்.

*(19) பதாக முத்திரையில் ஆள்காட்டிவிரலைக் கொஞ்சமாக வளைத்தால் 'அராள ஹஸ்த'மாகும்.*

*உபயோகம் :—அம்ருதம் பருகுவதையும், விஷம் குடிப்பதையும் காட்டுவதற்கு இந்த முத்திரை உபயோகப்படுகிறது. மேலும் புயலைக்குறிப்பிடவும் பராக்கிரமம், கம்பீரம், தைரியம் முதலியவைகளைக் குறிப்பிடவும் இது உபயோகிக்கத்தகுந்தது.*

### ८. शुकतुण्डहस्तः ।

अस्मिन्ननामिका वक्रा शुकतुण्डः करो भवेत् ॥ २८ ॥
बाणप्रयोगे कुन्तार्थे चालयस्य नृतिक्रमे ।
मर्मोक्त्यामुग्रभावेऽपि शुकतुण्डो नियुज्यते ॥ २१ ॥

### 8. S'UKATUṆḌA HASTA (the parrot bill)

(20-21) If in 'Arāla Hasta' the ring finger is bent we get 'S'ukatuṇḍa Hasta'.

*Uses :*— It is used in showing the discharge of an arrow, to denote a lance or spear, in the dance called 'Mukha Chālı' or 'initial poses', to indicate words with a hidden meaning, and to indicate fury.

### 8. சுகதுண்ட ஹஸ்தம்.

*(20–21) அராள ஹஸ்தத்தில் மோதிர விரல் வளைக்கப்பட்டால் 'சுகதுண்ட ஹஸ்த'மாகும்.*

உபயோகம்:—இது அம்பு விடுவதைக் குறிப்பிடுவதற்கும், ஈட்டியைக் குறிப்பிடுவதற்கும், 'முகசாலி' என்னும் ஆரம்ப நர்த்தனத்திலும், மறைபொருளாக ஒன்றை உணர்த்தவும், உக்ரமான தன்மையை உணர்த்துவதற்கும் உபயோகிக்கப்படுகிறது.

## ९. मुष्टिहस्तः ।

मेलनादङ्गुलीनां च कुञ्चितानां तलान्तरे ।
अङ्गुष्ठेनोपरियुतो मुष्टिहस्तोऽयमिष्यते ॥ २२ ॥

स्थिरे कचग्रहार्थे च मल्लानां युद्धभावने ।
आन्दोलिकादिनाळेषु मुष्टिहस्तः प्रयुज्यते ॥ २३ ॥

## 9. MUSṬI HASTA (Closed-fist-hand)

(22–23) If the fingers are all well bent and pressed against the palm and the thumb is pressed over the first finger, we get the 'Musṭi Hasta'.

*Uses*:— It is used to denote stability, to indicate holding by the locks and in personating the boxer. It is also used in holding the chains of a swing.

## 9. முஷ்டி ஹஸ்தம்

*(22–23)* விரல்களைச் சேர்த்து மடக்கி நுனிகள் உள்ளங்கையில் படும்படி வைத்துக் கட்டைவிரலை அவற்றின் மேலே வைத்தால் 'முஷ்டி ஹஸ்த' மாகும்.

உபயோகம்;—அசையாத்தன்மையைக் காட்டுவதற்கும், தலைமயிரைப் பிடிப்பதற்கும், மல்லர்கள் குஸ்திபோடுவதிலும், ஊஞ்சலாடும்போது சங்கிலியைப் பிடிப்பதைக் குறிப்பதற்கும் இந்த முத்திரை உபயோகப்படுகிறது.

## १०. शिखरहस्तः ।

चेन्मुष्टिरुन्नताङ्गुष्ठस्स एव शिखरः करः ।
स्वयमर्थे निश्चयेऽपि विना रूपोदयेऽपि च ॥ २४ ॥
मदने कार्मुके स्तंभ स्थायित्वे शिखरः स्मृतः ।

## 10. S'IKHARA HASTA (peak)

(24) If in Musṭi Hasta the thumb is held up we get 'S'ikhara Hasta'.

*Uses :*— It is used in denoting oneself, to express certainty, to express the idea of 'without', to denote the rising up of a form, to denote the cupid, to indicate a bow, to denote sudden motionlessness and to denote permanence.

## 10. சிகர ஹஸ்தம்

*(24) முஷ்டி ஹஸ்தத்தில் கட்டைவிரலை மேலே தூக்கினால் 'சிகர ஹஸ்த'மாகும்.*

*உபயோகம் :—தன்னைக் குறிப்பிடுவதற்கும், நிச்சயத்தைக் குறிப்பதற்கும், 'இல்லாமல்' என்னும் பொருளை உணர்த்துவதற்கும், ஒரு உருவம் உண்டாவதைக் குறிக்கவும், மன்மதனைக் குறிப்பிடுவதற்கும், வில்லைக் காட்டுவதற்கும், ஸ்தம்பித்த நிலையைக் காட்டுவதற்கும், நிலையான தன்மையைக் காட்டுவதற்கும் இந்த முத்திரை உபயோகப்படுகிறது.*

## ११. कपित्थहस्तः ।

अङ्गुल्यः कुञ्चिताः पृष्ठदर्शिन्यः क्रमशस्तथा ॥ २५ ॥
अङ्गुष्ठस्तर्जनीमध्यमाश्रितश्चेत्कपित्थकः ।
लक्ष्मीदेव्यां सरस्वत्यां नटानां ताळधारणे ॥ २६ ॥

धूपदीपार्चने चाऽपि कपित्थः संप्रयुज्यते ।

11. KAPITTHA HASTA (monkey-grasp)

(25–26) If the fingers are bent and their backs are shown out in order and the thumb is placed over the middle of the first finger, then it is called 'Kapittha Hasta'.

*Uses*:— It is used in personating Lakshmi, and Saraswathi, for holding the cymbal and in showing the offering of incense and the lighted lamp.

11. கபித்த ஹஸ்தம்

*(25–26) விரல்களை மடக்கி, அவற்றின் பின் புறங்களை வரிசையாக வெளிக்காட்டிக் கட்டைவிரலை ஆள்காட்டி விரலின் மத்தியில் வைத்தால் 'கபித்த ஹஸ்த' மாகும்.*

*உபயோகம்;—லக்ஷ்மி, ஸரஸ்வதி இவர்களைக் குறிப்பிடுவதற்கும், கைத்தாளத்தைப் பிடிப்பதிலும், தூப தீபங்கள் காட்டும்பொழுதும் இந்த முத்திரை உபயோகப்படுகிறது.*

१२. खटकामुखहस्तः ।

कपित्थे तर्जनी चैव वक्रिताऽङ्गुष्ठमध्यमा ॥ २७ ॥
खटकामुखहस्तोऽयं कीर्तितो भरतागमे ।
खलिनो वाहनार्थेऽपि पादचार्यास्तु लक्षणे ॥ २८ ॥
वर्णयित्वा प्रयोक्तव्यः खटकामुखहस्तकः ।

12. KHAṬAKĀMUKHA (boxer's fist face)

(27–28) If in Kapittha Hasta the thumb is bent and the first finger is placed at its middle part then

it is called 'Khaṭakāmukha'.[1]

*Uses*:— It is used to denote the holding of reins, riding and in the Nartana with a variety of foot-movements (pādachāris).

12 கடகாமுக ஹஸ்தம்

*(27–28) கபித்த ஹஸ்தத்தில் கட்டை விரலை மடக்கி, ஆள்காட்டி விரலை அதன் மத்தியில் வைத்தால் 'கடகாமுக ஹஸ்த'மாகும்.*

*உபயோகம்:—இது கடிவாளத்தைப் பிடிப்பதையும், குதிரை சவாரி செய்வதையும் காட்டுவதற்கும், பாதசாரி நர்த்தனத்திலும் உபயோகப்படுகிறது.*

१३. सूचीहस्तः ।

मध्यमाद्यास्त्रयोऽङ्गुल्यः [2] शिरस्यङ्गुष्ठपीडिताः ॥ २९ ॥
तर्जनी प्रसृता सोऽयं सूचीहस्तः प्रकीर्तितः ।
एकार्थेऽपि परब्रह्मभावनायां शतेऽपि च ॥ ३० ॥
रवौ नगर्यां लोकार्थे तथेतिवचनेऽपि [3] च ।
यच्छब्देऽपि च तच्छब्दे व्यञ्जनार्थेऽपि तर्जने ।
कार्श्ये शलाकिकायां च नलिनीनालभावने ॥ ३१ ॥
विवेचने नियुज्येत सूचीहस्तः पुरातनैः ।

---

1. In Natya Sastra, Khatakamukha Hasta is shown as follows:–
उत्क्षिप्तवक्रा तु यदाऽनामिका सकनीयसी ।
अस्यैव तु कपित्थस्य तदासौ खटकामुखः ॥ Adhyaya 9, Sl. 60.
If in Kapittha mudra, the ring finger and the little finger are raised in their bent condition then we get Khatakamukha.

2. कुञ्चित is the reading in B. O. R. Manuscript No. 346 of Volume 12.

3. वेत्रधारणभावने (holding the cane) is the reading in the above B. O. R. Manuscript.

## 13. SŪCĪ HASTA (Needle-like)

(29–31) If the middle finger, ring-finger and the little finger are bent and pressed by the thumb and the first finger stretched, then we get 'Sūcī Hasta'.

*Uses* :— It is used to denote the numeral 'one', in denoting Parabrahma (the All-pervading one), in expressing the numeral 'hundred', in denoting the sun or a city, or the world, and in saying 'in that manner'. It is also used for the relative and the correlative—'he who', or 'that which', for indicating a distinguishing mark, for administering a reprimand, to indicate thinness of body, to denote a probe, to denote the stalk of a lotus and in distinguishing one from another.

## 13. ஸூசி ஹஸ்தம்

(29–31) நடுவிரல், மோதிர விரல், சுண்டு விரல் இவைகளை மடக்கிக் கட்டைவிரலை இவைகளின் மேல் வைத்து அழுத்தி ஆள் காட்டிவிரலை நீட்டினால் ஸூசீஹஸ்தமாகும்.

உபயோகம் :—இந்த முத்திரை 'ஒன்று' என்ற எண்ணைக் குறிப்பதற்கும், பரப்ரும்மத்தைக் குறிப்பதற்கும் 100 என்ற எண்ணைக்குறிப்பதற்கும், சூரியனையோ அல்லது ஒரு நகரத்தையோ,அல்லது உலகம் என்பதைக் குறிக்கவும், 'அப்படித்தான்' என்று சொல்லும்பொழுதும் உபயோகப் படுகிறது. 'எதுவோ அது', 'யாரோ அவர்' என்று சொல்வதற்கும், ஒரு சிறப்பான அறிகுறியை உணர்த்துவதற்கும், அதட்டுவதிலும், ஒற்றை நாடி சரீரத்தைக் காட்டுவதற்கும் சலாகையைக் குறிப்பதற்கும், தாமரைத்தண்டைக் குறிப்பிடுவதற்கும், ஒன்றிலிருந்து மற்றொன்றைப் பிரித்துக் காட்டுவதற்கும் இது உபயோகப்படுகிறது.

## १४. पद्मकोशहस्तः ।

अङ्गुल्यो विरलाः किञ्चित्कुञ्चितास्तलनिम्नगाः ॥ ३२ ॥
पद्मकोशाभिधो हस्तः तन्निरूपणमुच्यते ।
कमलेऽपि च वल्मीके घण्टायां कन्दुकेऽपि च ॥ ३३ ॥
वृत्तके दर्पणे चूतफलाद्ये पुष्पकोशके ।
कर्णिकारे पुष्पवर्षे शाखाया नमनेऽपि च ॥ ३४ ॥
अण्डेऽपि पद्मकोशस्य विनियोगो विधीयते ।

## 14. PADMAKŌS'A HASTA (closed lotus)

(32–34) If the fingers are all bent towards one another and kept slightly apart so as to form a cavity in the interior, then it is called 'Padmakōs'a' or the 'lotus form'.

*Uses:*— It is used for denoting a lotus, an ant-hill, a bell, a ball, a circle, a mirror, a mango fruit or the like, a bunch of flowers, a flower of the karṇikāra tree, or to denote the raining of flowers or the bending of a branch, and to denote an egg.

## 14. பத்மகோச ஹஸ்தம்

*(32–34) விரல்களைச் சற்றுப் பிரித்துக் குவித்து நடுவே குழி விழும்படி செய்தால் பத்மகோச ஹஸ்தமாகும்.*

*உபயோகம்:—இந்த முத்திரை தாமரையைக் குறிப்பதற்கும், கரையான் புற்றைக் குறிப்பதற்கும், மணி, பந்து, சக்கிரம், முகம் பார்க்கும் கண்ணாடி, மாம்பழம், பூங் கொத்து, கோங்கு மலர், பூமாரி பொழிதல், கிளையை வளைத் தல், முட்டை இவைகளை குறிப்பிடுவதற்கும் உபயோகிக்கப் படுகிறது.*

## १५. बाणहस्तः ।

तर्जन्याद्यास्त्रयोऽङ्गुल्यः शिरस्यङ्गुष्ठपीडिताः ॥ ३५ ॥
कनिष्ठिका च प्रसृता स बाणः कथितः करः ।
षट्संख्यायां सन्धिनृत्ये बाणहस्तो नियुज्यते ॥ ३६ ॥

## 15. BĀṆA HASTA.

(35–36) If the first finger, middle finger and the ring finger are pressed down at their tops by the thumb and the little finger is stretched out, then it is called Bāṇa Hasta (the arrow-like hand).

*Uses*:— It is used for indicating the numeral '6' and in the dance called 'Sandhi Nṛtya'.

## 15. பாண ஹஸ்தம்

*(35–36) ஆள் காட்டிவிரல், நடுவிரல், மோதிரவிரல் இவைகளை வளைத்துக் கட்டைவிரலால் அமுக்கி, சுண்டு விரலை நீட்டினுல் பாண ஹஸ்தமாகும்.*

*உபயோகம்;—இந்த முத்திரை '6' என்ற எண்ணைக் குறிப்பதற்கும், 'சந்திநிருத்யம்' என்ற நடனத்திலும் உபயோகிக்கப்படுகிறது.*

## १६. सर्पशीर्षहस्तः ।

पताके तलनिम्नत्वात्सर्पशीर्षकरो भवेत् ।
भुजगे चन्दनार्थेऽपि प्रणम्येतिवचोभरे ॥ ३७ ॥
वामने पुरुषे सर्पशीर्षोऽयं विनियुज्यते ।

## 16. SARPA S'ĪRṢA HASTA (serpent's hood)

(37) If in Patāka, a cavity is formed at the palm, then we get Sarpas'īrṣa Hasta.

*Uses*:—It is used to denote a serpent, to denote the smearing of sandle, in describing the act of salutation and to indicate a person of stunted growth.

16. ஸர்ப்பசிர்ஷ ஹஸ்தம் (*பாம்பின் தலை*)

*(37) பதாக முத்திரையில் உள்ளங்கையில் குழி விழும்படிச் செய்தால் அது 'ஸர்ப்பசிர்ஷ' ஹஸ்தமாகும்.*

*உபயோகம்:—இந்த முத்திரை பாம்பைக் குறிப்பிடுவதற்கும், சந்தனம் பூசிக் கொள்வதைக் காட்டுவதற்கும், வணங்குவதைக் குறிப்பதற்கும், குட்டையான தோற்ற முள்ளவரைக் குறிப்பிடுவதற்கும் உபயோகப்படுகிறது.*

**१७. मृगशीर्षहस्तः ।**

अस्मिन्कनिष्ठिकांगुष्ठप्रसारान्मृगशीर्षकः ॥ ३८ ॥
स्त्रीणामर्थे क्रमेणेतिवचने छत्रधारणे ।
आवासेऽपि च नेपथ्ये वसने मन्दवाचके ॥ ३९ ॥
भित्तौ विवादे समरे शमने च त्रिपुण्ड्रके ।
देहे दूरस्थिताह्वाने रङ्गवल्ल्यां मृगासने ॥ ४० ॥
तिर्यगर्थेऽपि संचारे युज्यते मृगशीर्षकः ।

17. MṚGA S'ĪRṢA E B. 3'A (the deer's head)

(38–40) If in 'Sarpas'īrṣa', the little finger is stretched out, we get 'Mṛgas'īrṣa'.

*Uses*:—It is used to denote women, to express the idea of 'by degrees', to indicate the holding of an umbrella, to denote a dwelling place, or the wearing of ornaments and clothing and toilette, to indicate speaking in a low voice, to denote a wall, to indicate an altercation or a fight, to denote Yama, (the God of Death) to

show the wearing in three stripes of sacred ashes on the fore-head, to denote the body, to call a person at a distance, in adorning the feet with cosmetics, to denote a seat of deer's skin, to express the idea of across, and to denote wandering.

### 17. ம்ருகசீர்ஷ ஹஸ்தம் (மான் தலை)

(38–40) ஸர்ப்பசிர்ஷ முத்திரையில் சுண்டுவிரல் நீட்டப்பட்டால் 'ம்ருகசீர்ஷ' ஹஸ்தமாகும்.

உபயோகம்;—பெண் பாலரைக் குறிப்பிடவும், 'படிப்படியாக' என்பதைக் குறிப்பிடுவதற்கும், குடை பிடித்துக் கொண்டிருப்பதை குறிப்பிடுவதற்கும், வசிக்கும் இடத்தைக் குறிப்பிடுவதற்கும் இந்த முத்திரை உபயோகப் படுகிறது. மேலும் ஆபரணங்கள் அணிவதையும், ஆடைகள் உடுத்துவதையும், தாழ்ந்தகுரலில் பேசுவதையும் குறிப்பிடுவதற்கும், சுவரைக் குறிப்பிடும்போதும், வாக்குவாதத்தை அல்லது சண்டையைக் குறிப்பிடவும், யமனைக் குறிப்பிடுவதற்கும், திருநீறை முப்பட்டையாக நெற்றியில் அணிவதைக் குறிக்கவும், சரீரத்தைக் குறிக்கவும், தூரத்திலுள்ள ஒருவரைக் கூப்பிடுவதிலும், கால்களை செம்பஞ்சுக் குழம்பினால் அலங்கரிப்பதையும், மான் தோல் ஆசனத்தைக் குறிப்பிடவும், 'குறுக்கே' என்று சொல்லும் பொழுதும், இங்குமங்கும் அலைவதைக் குறிப்பிடுவதற்கும் இந்த முத்திரை பயன்படுகிறது.

### १८. सिंहमुखहस्तः ।

मध्यमानामिकाग्राभ्यां अंगुष्ठो मिलितो यदि ॥ ४१ ॥
करः सिंहमुखाभिख्यः कीर्तितो नाट्यपारगैः ।
होमार्थे दर्भचलने वनमालाभृतौ स्मिते ॥ ४२ ॥
सिंहासने वैद्यपाकशोधनायाञ्च मध्यमे ।
युज्यते सिंहवक्त्राख्यो हस्तोऽयं करवेदिभिः ॥ ४३ ॥

## 18. SIMHA MUKHA HASTA (the lion's face)

(41–43) If the middle finger and the ring-finger are joined to the thumb, and the other two are stretched out, then we get 'Simha Mukha'.

*Uses* :—It is used for offering oblations in the fire, to denote the moving of sacred grass, to indicate the wearing of a full-length garland, to denote a smile, to indicate the throne adorned by the form of a lion, in testing the consistency of a pharmaceutical preparation, and to express the middle position.

### 18 ஸிம்ஹமுக ஹஸ்தம் (சிங்கமுகம்)

(41–43) நடுவிரலையும் மோதிர விரலையும் கட்டை விரலோடு சேர்த்து மற்ற இரண்டு விரல்களையும் நீட்டினால் 'ஸிம்ஹமுக' ஹஸ்தமாகும்.

உபயோகம்:—ஹோமம் செய்வதற்கும், தர்ப்பத்தை நகர்த்துவதையும், நிலைமாலை அணிவதையும், சிரிப்பைக் குறிப்பிடுவதற்கும் இந்த முத்திரை உபயோகப்படுகிறது. மேலும் ஸிம்மாசனத்தைக் குறிப்பிடுவதற்கும், மருந்துக் கலவையைச் சோதித்துப் பார்க்கையிலும், மத்யஸ்தானத்தைக் குறிப்பிடுவதற்கும் பயன்படுகிறது.

### १९. कांगूलहस्तः ।

पद्मकोशेऽनामिका चेन्नम्रा कांगूलको भवेत् ।
लिकुचस्य फले बालकिङ्किण्यां घुटिकार्थके ॥ ४४ ॥
कांगूलहस्तो युज्येत तस्य रूपं निरूपितम् ।

## 19. KĀṄGŪLA HASTA
(band employed in plucking ears of corn)

(44) If in 'Padmakos'a Hasta' the ring-finger is bent, we get 'Kāṇgūla Hasta'.

*Uses* :—It is used for denoting fruits like lemon, the anklet-bells of children, and to indicate rounded pills.

**19. காங்கூல ஹஸ்தம்** *(திணைக்கதிர் கொய்யும் கை)*

*(44)* 'பத்மகோச' ஹஸ்தத்தில் மோதிர விரலை வளைத்தால் 'காங்கூலஹஸ்த' மாகும்.

உபயோகம்;— இந்த முத்திரை எலுமிச்சம்பழம் போன்ற பழங்களைக் குறிப்பிடுவதற்கும், குழந்தைகளின் கால் சதங்கைகளைக் குறிக்கவும், மாத்திரை உருண்டைகளைக் குறிப்பிடுவதற்கும் உபயோகப்படுகிறது.

**२०. अलपल्लवहस्तः ।**

कनिष्ठाद्यावर्तितश्च विरलास्योऽलपल्लवः ॥ ४५ ॥
श्लाघायां प्रान्तनृत्ते च सौन्दर्ये कुचमण्डले ।
चालये तु नियुज्येत हस्तोऽयमलपल्लवः ॥ ४६ ॥

20. ALAPALLAVA HASTA (lotus in bloom)

(45–46) If all the fingers are rotated beginning with the little finger and are separated so as to form the shape of a lotus in bloom, it is called 'Alapallava'.

*Uses* :—It is used in commending a person, in the Dance called 'Prānta Nṛtta', to indicate beauty, to denote the bust and in the initial dance called 'Mukhachāli'.

**20. அலபல்லவ ஹஸ்தம்** *(விரிந்த தாமரை)*

*(45–46)* சுண்டு விரலிலிருந்து கையிலுள்ள எல்லா விரல்களையும் ஒன்றையொன்று தொடாமல் ஒரு முறை சுழற்றி ஒரு மலர்ந்த தாமரையின் உருவம் போல் வைத்துக் கொண்டால் அது 'அலபல்லவ' ஹஸ்தமாகும்.

உபயோகம்;—இந்த முத்திரை ஒருவரைப் புகழும் போதும், 'ப்ராந்தந்ருத்தம்' என்ற ஒருவகை நாட்டியத்திலும், அழகைக் குறிப்பிடுவதற்கும், ஸ்திரீகளின் மார்பைக் குறிப்பிடுவதற்கும், 'முக சாலி' என்னும் ஆரம்ப நாட்டியத்திலும் உபயோகப்படுகிறது.

## २१. चतुरहस्तः ।

तर्जन्याद्यास्त्रयः श्लिष्टाः कनिष्ठा प्रसृता यदि ।
अङ्गुष्ठोऽनामिकामूले स भवेच्चतुरः करः ॥ ४७ ॥
कस्तूर्यां किञ्चिदर्थेऽपि कनके ताम्रलोहयोः ।
ललाटे तैलघृतयोर्युज्यते चतुरः करः ॥ ४८ ॥

## 21. CATURA HASTA (Smart)

(47–48) If the first finger, middle finger and the ring-finger are kept close to each other, the little finger is stretched out, and the thumb is placed at the base of the first finger, then the mudra is called 'Catura'.

*Uses* :— It is used to indicate musk, to express the idea of a 'little', in denoting gold and copper, in showing the fore-head, and in denoting oil and ghee.

## 2.1 சதுர ஹஸ்தம் (சாமர்த்தியம்)

(47–48) ஆள்காட்டிவிரல், நடுவிரல், மோதிர விரல் இவைகளை நெருக்கமாக வைத்துக்கொண்டு சுண்டுவிரலை வெளிப்புறமாக நீட்டி, கட்டை விரலை ஆள்காட்டி விரலின் அடிப்பாகத்தில் வைத்துக் கொண்டால் 'சதுர ஹஸ்த' மாகும்.

உபயோகம்:—இது கஸ்தூரியைக் குறிக்கவும், 'கொஞ்சம்' என்னும் பொருளை உணர்த்துவதற்கும், தங்கம், தாமிரம், இரும்பு, முதலியவைகளைக்குறிக்கவும், எண்ணெய் நெய், இவைகளைக் குறிப்பிடவும் உபயோகப்படுகிறது.

## २२. भ्रमरहस्तः ।

मध्यमानामिके सम्यक्कुञ्चिते तलमाश्रिते ।
शेषाः प्रसारितास्सोऽयं भ्रमराभिधहस्तकः ॥ ४९ ॥
योगे मौनव्रते भृङ्गे गजानां दन्तघातने ।
युज्यते भ्रमरः सोऽयं हस्तचारविचक्षणैः ॥ ५० ॥

## 22. BHRAMARA HASTA

(49–50) If the middle finger and the ring-finger are well bent and reach the palm and the other fingers are stretched out the mudra is called 'Bhramara'.

*Uses*:—It is used to indicate yogic contemplation, the vow of silence, to denote the bee, and in sawing off the tusk of an elephant.

## 22. ப்ரமர ஹஸ்தம் (வண்டு)

(49–50) நடுவிரலையும் மோதிர விரலையும் உள்ளங்கையைத் தொடும்படியாக வளைத்து மற்ற விரல்களை நீட்டினால் 'ப்ரமர ஹஸ்த'மாகும்.

உபயோகம்:— இந்த முத்திரை யோகாப்பியாசம் செய்யும்பொழுதும், மௌன விரதத்திலும், வண்டைக் குறிப்பிடுவதற்கும், யானைத் தந்தத்தை ரம்பம்கொண்டு அறுப்பதைக் குறிக்கையிலும் உபயோகப்படுகிறது.

## २३. हंसास्यहस्तः ।

मध्यमाद्यास्त्रयोऽङ्गुल्यः प्रसृता विरला यदि ।
तर्जन्यङ्गुष्ठसंश्लेषात्करो हंसास्यको भवेत् ॥ ५१ ॥
चित्रस्य लेखने शोभनार्थे रेखाविवेचने ।
मालानां वहने सोऽहंभावनार्थे निरूपके ॥ ५२ ॥

नास्तीतिवाचके चाऽपि निकषाणां विभावने ।
कृतामित्येव वचने हंसास्योऽयमुदीरितः ॥ ५३ ॥

## 23. HAMSĀSYA HASTA (the swan's mouth)

(51–53) If the middle finger, the ring-finger and the little finger are stretched out apart from each other, and the thumb and the first finger are joined together, the mudra is called 'Hamsāsya'.

*Uses*:—It is used in the act of painting, polishing, in separating lines, in wearing garlands, in the act of contemplating the deity as one's self, in describing something, in saying 'there is nothing', in rubbing on the testing stone, and in expressing the idea of 'it is accomplished'

## 23. ஹம்ஸாஸ்ய ஹஸ்தம் (அன்னத்தின் வாய்)

(51–53) நடுவிரல், மோதிர விரல், சுண்டு விரல் இவைகளை ஒன்றையொன்று தொட்டுக் கொள்ளாதவாறு நீட்டிக் கட்டைவிரலையும் ஆள்காட்டி விரலையும் சேர்த்தால் 'ஹம்ஸாஸ்ய ஹஸ்த'மாகும்.

உபயோகம் :—ஓவியம் தீட்டுவதிலும், மெருகிடுவதிலும், கோடுகளைப் பிரித்துப் போடுவதிலும், மாலை அணிவதிலும், ஒரு தேவதையைத் தானாகவே பாவிப்பதிலும் (ஸோஹம் பாவனை), ஒரு விஷயத்தை வர்ணிக்கையிலும், 'ஒன்றுமில்லை' என்று சொல்லும் போதும், உரைகல்லில் உரைத்துப் பார்க்கையிலும், 'காரியம் ஆகிவிட்டது' என்பதைத் தெரிவிக்கவும் இந்த முத்திரை உபயோகிக்கப்படுகிறது.

## २४. हंसपक्षहस्तः ।

सर्पशीर्षकरे सम्यक् कनिष्ठा प्रसृता यदि ।
हंसपक्षमिति प्रोक्तो निरूपणमिहोच्यते ॥ ५४ ॥

मर्यादायां सेतुबन्धे पिधाने दूरगाहृतौ ।
शुद्धनाट्यविधानेऽपि हंसपक्षो नियुज्यते ॥ ५५ ॥

24. HAMSAPAKṢA HASTA (the swan's wing)

(54–55) If in Sarpas'irṣa mudra the little finger is stretched out, then it is called 'Hamsapakṣa'.

*Uses*:—It is used to denote a boundary, the construction of a bridge, in the act of covering, to denote the act of taking along someone from a distance, and in the dance called 'S'uddha Nāṭya'.

**24. ஹம்ஸ பக்ஷ ஹஸ்தம்.** *(அன்னத்தின் சிறகு)*

*(54–55) ஸர்ப்ப சீர்ஷ முத்திரையில் சுண்டுவிரலை நீட்டினால் 'ஹம்ஸ பக்ஷ ஹஸ்த'மாகும்.*

*உபயோகம்;—எல்லையைக் குறிப்பிடுவதற்கும், ஒரு பாலம் அமைப்பதைக் காட்டுவதற்கும், மறைப்பதைக் குறிக்கவும், தூரத்திலுள்ள ஒருவரை அழைத்து வருவதைக் காட்டுவதற்கும் 'சுத்த நாட்டியம்' என்ற ஒருவகை நாட்டியத்திலும் இந்த ஹஸ்தம் உபயோகப்படுகிறது.*

२५. संदंशहस्तः ।

क्रमात्प्रदेशिनी मध्यमांगुष्ठपरियोजनात् ।
शेषे प्रसारिते सोऽयं संदंशो विकचानन* ॥ ५६ ॥
मौक्तिके पुलके वारिबिन्दौ रुद्राक्षऋक्षयोः ।
गुलिकायां च विकचमल्लिकायां च विद्रुमे ॥ ५७ ॥
तिलाहुतौ च संख्यायां संदंशः परिकीर्तितः ।

---

* विकचानन means one with a blooming face. It appears to be the address of the speaker Nandikeswara to Sumati, the listener.

## 25. SANDAMS'A HASTA (close-bite)

(56–57) If the first finger, middle finger and the thumb are joined together one by one and the other fingers are stretched out, then the mudra is called 'Sandams'a'.

*Uses*:—It is used to denote the pearl, to indicate hair standing on end, to denote a drop of water, the bead called 'rudrākṣa', a star, a rounded pill, a blown jasmine, and a piece of coral. It is also used in making an oblation of sesamum and in indicating a number.

## 25. ஸந்தம்ச ஹஸ்தம். (இறுகப் பிடித்தல்)

*(56–57) ஆள்காட்டி விரல், நடுவிரல், கட்டை விரல் இவை மூன்றையும் சேர்த்து மற்ற விரல்களை நீட்டினால் 'ஸந்தம்ச ஹஸ்த'மாகும்.*

*உபயோகம்:—இந்த முத்திரை முத்தைக் குறிக்கவும், மயிர் சிலிர்ப்பதைக் குறிப்பிடுவதற்கும், நீர்த் துளியைக் குறிக்கவும், ருத்திராக்ஷத்தைக் குறிக்கவும், நக்ஷத்திரம், குளிகை (உருண்டையான மாத்திரைகள்), மலர்ந்த மல்லிகை, பவளம் இவைகளைக் குறிப்பிடுவதற்கும் உபயோகிக்கப்படுகிறது. மேலும் எள்ளை ஹோமம் செய்வதைக் குறிப்பிடவும், ஓர் எண்ணைக் குறிப்பிடவும் உபயோகப்படும்.*

## २६. मुकुलहस्तः ।

सर्वाङ्गुल्यग्रसंयोगान्मुकुलाभिधहस्तकः ॥ ५८ ॥

दाने दैन्योक्तिघटने पञ्चसंख्येति भाषणे ।
मुकुलीकृतपद्मेषु भोजनार्थे जपेऽपि च ॥ ५९ ॥

एतादृशार्थभावेषु मुकुलाख्यकरो भवेत् ।

## 26. MUKULA HASTA (the bud)

(58–59) If the ends of all the fingers are joined together, then we get the 'Mukuḷa mudra'.

*Uses*:—It is used in making a gift, in pleading helplessness, to indicate the numeral five, to denote a closed lotus, to denote the taking of food, in repeating sacred verses and other similar acts.

## 26. முகுள ஹஸ்தம் (மொக்கு)

(58–59) எல்லா விரல்களின் நுனிகளையும் சேர்த்தால் 'முகுள ஹஸ்த'மாகும்.

உபயோகம்:—ஒரு பொருளைக் கொடுக்கும்போதும், பிறரிடம் கெஞ்சும் பொழுதும், 'ஐந்து' என்ற எண்ணைக் குறிக்கையிலும், குவிந்த தாமரைகளைக் குறிப்பிடுகையிலும், சாப்பிடுவதைக் காட்டுவதற்கும், ஸ்தோத்ரம் செய்யும் பொழுதும் இந்த ஹஸ்தம் உபயோகிக்கப்படுகிறது.

## २७. ताम्रचूडहस्तः ।

तर्जन्याद्याः प्रसृताः स्युस्तिस्रोऽङ्गुष्ठस्ततः परम् ॥ ६० ॥

कनिष्ठामूलगामी चेत्ताम्रचूडकरो भवेत् ।

वेदत्रय्यां त्रिलोक्यां च वर्णार्थाभिनयक्रमे ।

युज्यते ताम्रचूडोऽयं योजनक्रमवेदिभिः ॥ ६१ ॥

## 27. TĀMRA CŪḌA (the cock)

(60–61) If the first finger, middle finger and the ring-finger are stretched out and the thumb reaches the base of the little finger, then we get the mudra of 'Tāmracūḍa'.

*Uses* :—It is used to denote the three Vedas, the three worlds, and the four castes.

Here ends the I chapter on 'Single-handed gestures', of Bharatārṇava of Nandikeśwara addressed to Sumati.

### 27. தாம்ர சூடம் *(சேவல்)*

*(60-61) ஆள்காட்டி விரல், நடுவிரல், மோதிரவிரல் இவைகளை நீட்டி, கட்டை விரலை சுண்டுவிரலின் அடிப் பாகத்தைத் தொடும்படி வைத்தால் 'தாம்ர சூட' ஹஸ்த மாகும்.*

*உபயோகம் :—இந்த முத்திரை மூன்று வேதங்களைக் குறிப்பிடுவதற்கும், மூவுலகங்களைக் குறிக்கவும், நான்கு ஜாதிகளைக் குறிப்பிடுவதற்கும் உபயோகப்படுகிறது.*

**இதனோடு நந்திகேசுவரரால் சுமதிக்கு அருளப்பட்ட பரதார்ணவத்தின் முதல் அத்தியாயம் முற்றுப்பெறுகிறது.**



## द्वितीयोऽध्यायः ।

### संयुतहस्ताः— १६

अथ पुष्पपुटश्चापि अञ्जलिश्चतुरश्रकः ।
त्रिपताकस्वस्तिकश्च कर्तरीस्वस्तिकः करः ॥ ६२ ॥

डोलाऽवहित्थकश्चैव वर्धमानकरस्तथा ।
पताकस्वस्तिकश्चैव करोऽप्युत्तानवञ्चितः ॥ ६३ ॥

कलशाख्यकरश्चैव पक्षवञ्चितकः करः ।
उत्सङ्गस्तिलको हस्तो नागवन्धश्च वैष्णवः ।
एते तु संयुता हस्ताः षोडश स्युः प्रकीर्तिताः ॥ ६४ ॥

## CHAPTER II.

### DOUBLE-HANDED GESTURES—16.

(62–64) The following are the Double-handed gestures :—

1. Puṣpa Puṭa (flower casket) 2. Añjali (salutation) 3. Caturas'ra (rectangular) 4. Tripatāka Swastika (cross of Tripatāka hands) 5. Kartarī Swastika (cross of Kartarī hands) 6. Ḍōla Hasta (hanging free) 7. Avahittha (concealing) 8. Vardhamāna (diverging) 9. Patāka Swastika (crossing of Patāka hands) 10. Uttānavañcita (held up) 11. Kalas'a (pot) 12. Pakṣavañcita (standing akimbo) 13. Utsaṅga (the lap) 14. Tilaka (Tilk) 15. Nāga Bandham (serpant's claws) 16. Vaiṣṇavam (Vishnu like).

## அத்தியாயம் 2.

## இரட்டைக்கைகள்—16.

*(62–64) இரட்டைக் கைகள் வருமாறு :—*

*1. புஷ்பபுடம் (பூக்கிண்ணம்) 2. அஞ்ஜலி (வணக்கம்), 3. சதுரச்ரம் (சதுரமானது) 4. த்ரிபதாக ஸ்வஸ்திகம் (குறுக்கு வெட்டு) 5. கர்த்தரீ ஸ்வஸ்திகம் (கர்த்தரீமுகமுள்ள குறுக்குக் கைகள்) 6. டோலம் (தொங்குவது) 7. அவஹித்தம் (மறைத்தல்) 8. வர்த்தமானம் (விரிந்து செல்வது) 9. பதாக ஸ்வஸ்திகம் (குறுக்குப் பதாகைகள்) 10. உத்தான வஞ்சிதம் (நிமிர்ந்த கை) 11. கலசம் (பானை) 12. பக்ஷவஞ்சிதம் (கைகளை இடுப்பில் வைத்துக்கொண்டு நிற்பது) 13. உத்ஸங்கம் (மடி) 14. திலகம் (பொட்டு) 15. நாகபந்தம் (பாம்புப் பிணையல்) 16. வைஷ்ணவம் (விஷ்ணுவின் சங்கு)*

### १. पुष्पपुटहस्तः ।

सर्पशीर्षकरौ श्लिष्टौ यदि पुष्पपुटो भवेत् ।
सन्ध्याकालार्घ्यदाने च मन्त्रपुष्पार्चनेऽपि च ॥ ६५ ॥

करणाभिनये शुद्धनाट्ये लीलानुमेळने ।
देवतानां तर्पणे च सशिरः परिकीर्तितः । ६६ ॥

### 1. PUṢPA PUṬA HASTA

(65–66) If hands holding 'Sarpaśīrṣa' (Asamyuta Hasta No. 16) are in contact with one another, we get the 'Puṣpapuṭa Hasta'.

*Uses* :—It is used in offering *arghya* (handfuls of water) during Sandhyā worship, in offering flowers with sacred syllables, and in the *Karaṇa* called 'Tala-

Puṣpa puṭa', one of the 108 combinations of movements of legs and hands used in pure Dance, in the graceful grouping of dancers in the Dance called 'Suddha Nāṭya' and in offering *Tarpans* or handfuls of water to propitiate the Dēvas.[1]

### 1. புஷ்பபுட ஹஸ்தம்.

*(65–66) ஸர்ப்ப சீர்ஷ முத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 16) யோடு கூடிய இரு கைகளையும் ஒன்றையொன்று தொடும்படி வைத்துக்கொண்டால் அது 'புஷ்பபுடஹஸ்த' மாகும்.*

*உபயோகம் :—ஸந்தியா காலத்தில் அர்க்யம் கொடுக்கையிலும், மந்திரத்தோடு புஷ்ப அர்ச்சனை செய்யும்பொழுதும், நர்த்தனகரணங்கள் என்னும் 108 கைகால் அசைவுகளில் ஒன்றாகிய 'தலபுஷ்பபுடம்' என்னும் கரணத்திலும், சுத்த நாட்டியத்தில் நர்த்தகர்கள் அழகாகக் கூடும்பொழுதும், தேவதைகளுக்குத் தர்ப்பணம் செய்கையிலும் இந்த முத்திரை பயன்படுகிறது.*

### २. अञ्जलिहस्तः।

**पताकौ तलसंश्लिष्टौ यदि सोऽञ्जलिसंज्ञकः ।**
**नमस्कारे शङ्करार्थे त्रिनयेऽञ्जलिरिष्यते ॥ ६७ ॥**

### 2. AÑJALI HASTA

**(67) When 'Patāka' mudras (Asamyuta Hasta No. 1) in both hands are joined together face to face, then we get 'Añjali Hasta'.**

---

1. *Tarpans* to *Devas* are offered through the ends of fingers, to *Rishis* through the lowest digital space of the little finger, and to *Pitrus* through the lowest digital space of the first finger.

*Uses* :—It is used in salutation, in the worship of deities and in showing respect.

### 2. அஞ்ஜலி ஹஸ்தம்

(67) பதாக முத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 1) களோடு கூடிய இரு கைகளையும் ஒன்றை யொன்று பார்த்துக் கொள்ளும்படி சேர்த்து வைத்துக் கொண்டால் அது 'அஞ்ஜலி ஹஸ்த'மாகும்.

உபயோகம் :—ஒருவரை நமஸ்காரம் செய்கையிலும், தேவதைகளை வணங்குகையிலும், மரியாதையைத் தெரிவிப்பதற்கும் இந்த முத்திரை உபயோகப்படுகிறது.

### ३. चतुरश्रहस्तः ।

अधोमुखोन्मुखौ हस्तौ खटकामुखनामकौ ।
चतुरश्राविति प्रोक्तौ संमत्या सर्वशास्त्रिणाम् ॥ ६८ ॥

पट्टाभिषेके तुरगसमारूढस्य भावने ।
मुखचालयनाख्येऽपि चतुरश्रो विधीयते ॥ ६९ ॥

### 3. CATURAS'RA HASTA

(68–69) When both hands are held up in rectangular formation with 'Khaṭakāmukha' mudra (Asamyuta Hasta No. 12) facing downward and in front of each other, then the mudra is called 'Caturas'ra'.

*Uses* :—It is used to show the pouring of sacred waters over the heads of Kings during coronation, in showing the act of riding, and in the dance called 'Mukhachāli' or 'initial movements'.

### 3. சதுரச்ர ஹஸ்தம்.

*(68-69) கீழ்நோக்கிய கடகாமுக முத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 12) கள் ஒன்றையொன்று பார்த்துக்கொள்ளும்படி இரு கைகளையும் சதுரமாக வைத்தால் அது 'சதுரச்ர' ஹஸ்தமாகும்.*

*உபயோகம் :—இந்த முத்திரை முடிசூட்டு அபிஷேகத்திலும், குதிரை சவாரி செய்கையிலும், முகசாலி என்னும் ஆரம்ப நாட்டியத்திலும் உபயோகப்படுகிறது.*

### ४. त्रिपताकस्वस्तिकहस्तः ।

त्रिपताकौ प्रकोष्ठस्थौ यद्येतौ स्वस्तिकौ मतौ ।
भयवादे विनीतव्यमर्पणे स्वस्तिको भवेत् ॥ ७० ॥

### 4. TRIPATĀKA SWASTIKA HASTA

(70) If the hands holding 'Tripatāka' mudra (Asamyuta Hasta No. 2) cross each other at the wrist, then it is called 'Tripatāka Swastika'.

*Uses*—It is used in showing fear and in respectful approach.

### 4. த்ரிபதாக ஸ்வஸ்திக ஹஸ்தம்

*(70) த்ரிபதாக முத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 2) களோடு கூடிய இரு கைகளையும் மணிக்கட்டில் ஒன்றன் மேலொன்று குறுக்காக வைத்தால் அது 'த்ரிபதாக ஸ்வஸ்திக' ஹஸ்தமாகும்.*

*உபயோகம் :—இந்த முத்திரை பயத்தைக் காட்டுகையிலும், மரியாதையுடன் நெருங்கும்போதும் உபயோகப்படுகிறது.*

## ५. कर्तरीस्वस्तिकहस्तः ।

मणिबन्धाश्रितौ तिर्यङ्मुखौ तौ कर्तरीकरौ ।
कर्तरीस्वस्तिकाख्यातौ तयो रूपणमुच्यते ॥ ७१ ॥
तिर्यगर्थे वृक्षजाले वृक्षशाखानुमेळने ।
भूधरे संप्रयुज्येते कर्तरीस्वस्तिकौ करौ ॥ ७२ ॥

## 5. KARTARĪ SWASTIKA HASTA

(71-72) When hands holding 'Kartarī' mudras (Asamyuta Hasta No. 4) facing obliquely are in contact with each other at the wrist then it is called 'Kartarī Swastika'.

*Uses* :—It is used to express oblique directions, in showing a cluster of trees or branches of trees joined together, and in representing a mountain.

## 5. கர்த்தரீஸ்வஸ்திக ஹஸ்தம்

*(71–72) பக்கப்பார்வையோடு கூடிய கர்த்தரீ முத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 4) யுடன் இரு கரங்களும் மணிக்கட்டில் ஒன்றின்மேலொன்று வைக்கப்பட்டால் அது 'கர்த்தரீ ஸ்வஸ்திக'மாகும்.*

*உபயோகம் :—'குறுக்காக' என்பதைக் குறிப்பிடுவதற்கும், மரங்களின் கூட்டத்தைக் குறிப்பிடுவதற்கும், அல்லது மரக்கிளைகள் சேர்ந்திருப்பதைக் குறிப்பிடுவதற்கும், மலையைக் குறிப்பிடுவதற்கும் இந்த ஹஸ்தம் உபயோகப்படுகிறது.*

## ६. डोलाहस्तः ।

पताकावूरुदेशस्थौ डोलाहस्तोऽयमिष्यते ।

[1]अहमार्गनृत्तौ सर्वनाट्यारम्भेऽपि युज्यते ॥ ७३ ॥
डोलाकरोऽयं कथितः कराभिनयवेदिभिः ।

### 6. ḌŌLĀ HASTA

(73) When hands holding 'Patāka' (Asamyuta Hasta No. 1) mudra hang freely so as to reach the thigh it is called 'Ḍōlā Hasta'.

*Uses:* —It is used in Dance involving erotic moods, and in the Dance preliminary to all other Dances.

### 6. டோலா ஹஸ்தம்

*(73) இரண்டு கைகளையும் பதாக முத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 1) யோடு கீழே தொங்கவிட்டால் அது 'டோலா' ஹஸ்தமாகும்.*

*உபயோகம் :—இது ச்ருங்காரரஸ பாவம் நிறைந்த (அகத்துறை) நாட்டியத்திலும் ஆரம்ப நாட்டியத்திலும் உபயோகப்படுகிறது.*

### ७. अवहित्थहस्तः ॥

अलपद्मौ वक्षसिस्थाववहित्थाकरो भवेत् ॥ ७४ ॥
शृङ्गारनटने हस्तचारस्य नटनेऽपि च ।
कुचार्थे युज्यते सोऽयमवहित्थाकरः क्रमात् ॥ ७५ ॥

### 7. AVAHITTHA HASTA

(74–75) When 'Alapadma' hands (Asamyuta

1. The word 'Aha' in 'Ahamarga' is a Tamil word transliterated and means 'lyrical' chiefly dealing in love. The words 'Aham' and 'Puram' denote the two broad divisions in Tamil, of the subject-matter of poetry and Drama in to subjective and objective themes, the subjective dealing with love, and the objective with other affairs of life.

Hasta No. 20) are held at the level of the chest, then it is called 'Avahittha'.

*Uses* :—It is used in Dances depicting erotic moods, in the Dance consisting chiefly of hand movements and in denoting the bust.

7. அவஹித்த ஹஸ்தம்.

(74–75) இரண்டு அலபத்ம முத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 20) களை மார்புக்கருகில் பிடித்தால் அதற்கு 'அவஹித்த ஹஸ்தம்' என்று பெயர்.

உபயோகம் :—இந்த முத்திரை ச்ருங்காரம் நிறைந்த நடனங்களிலும், கையசைவுகள் அதிகமாக உள்ள நாட்டியத்திலும், ஸ்திரீகளின் மார்பைக் குறிப்பதற்கும் உபயோகப்படுகிறது.

८. वर्धमानहस्तः ।

ऊर्ध्वभावमुखौ हस्तौ शिखरौ वर्धमानकः ।
सर्वदेति वचोमात्रे दत्तमित्यर्थकेऽपि च ॥ ७६ ॥

किं किमित्युक्तिसन्दर्भे कथंचिदिति भाषणे ।
वर्धमानाभिधो हस्तो भरतार्थे च संमतः ॥ ७७ ॥

8. VARDHAMĀNA HASTA.

(76–77) When both the hands holding 'S'ikhara mudra' (Asamyuta Hasta No. 10) face each other, then it is called 'Vardhamāna'.

*Uses* :—It is used to express the ideas of 'always', 'it has been given away', 'what what?' and 'somehow or other'.

### 8. வர்த்தமான ஹஸ்தம்.

(76–77) இரண்டு சிகர முத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 10) களை ஒன்றையொன்று பார்த்துக் கொள்ளும்படி பிடித்தால் அது 'வர்த்தமான ஹஸ்த'மாகும்.

உபயோகம் :—இது 'எப்பொழுதும்', 'கொடுத்தாகி விட்டது, 'என்ன என்ன?', 'எப்படியாவது' என்ற பொருள்களை உணர்த்துவதற்கு உபயோகப்படுகிறது.

### ९. पताकस्वस्तिकहस्तः ।

पताकौ मणिबन्धस्थौ तिरश्चीनतलौ यदि ।
ऊर्ध्वाधोमुखविन्यासात्पताकस्वस्तिको मतः ॥ ७८ ॥
अर्गळायां हस्तचार[1]बन्धाख्यनटनेऽपि च ।
पताकस्वस्तिकः सोऽयं कीर्तितः करवेदिभिः ॥ ७९ ॥

### 9. PATĀKA SWASTIKA HASTA

(78-79) If the hands holding 'Patāka mudra' (Asamyuta Hasta No. 1) facing obliquely are made to cross each other, and the patākas are turned one downward and the other upward, then it is called 'Patāka Swastika'.

*Uses:*—It is used to denote fetters, and in the Dance called 'Hasta Cāra Bandha' (joint formations with movements of the hands).

### 9. பதாக ஸ்வஸ்திக ஹஸ்தம்.

(78–79) பக்கப்பார்வையுள்ள இரண்டு பதாக முத்

1. There are 2 other readings viz., —
नक्रार्थे तरुघर्षणे अशोकश्च उष ईरित: = to denote the crocodile and the rubbing of trees against one another; and to denote Asoka tree and the early dawn.

திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 1) களை யுடைய கைகள் ஒன்றின்மேலொன்று வைக்கப்பட்டு பதாகத்தை மேலும் கீழும் பார்க்கும்படி திருப்பினல் அது 'பதாக ஸ்வஸ்திக' ஹஸ்தமாகும்.

உபயோகம்:—இது விலங்கைக் குறிப்பதற்கும், 'ஹஸ்த சாரபந்தம்' என்னும் நாட்டியத்திலும் உபயோகப்படு கிறது.

## १०. उत्तानवञ्चितहस्तः ।

त्रिपताकांसदेशगतावुत्तानवञ्चितौ ।
विष्णोरभिनये स्तब्धभावनायां सुरोदये ॥ ८० ॥
उत्तानवञ्चिताभिख्यः कथितः सर्वनाट्यगैः ।

## 10 UTTĀNAVAÑCITA HASTA

(80) If the hands holding Tripatāka mudra (Asamyuta Hasta No. 2) are held at the leval of the shoulders then it is called 'Uttānavañcita'.

*Uses:*—It is used in the representation of Mahā Viṣṇu, in showing sudden motionlessness, and to denote the appearance of Devatas before our eyes.

## 10. உத்தானவஞ்சித ஹஸ்தம்

(80) இரண்டுகைகளையும் த்ரிபதாக முத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 2) களோடு தோள்களுக்கு நேராகப் பிடித்தால் அதற்கு 'உத்தானவஞ்சித ஹஸ்தம்' என்று பெயர்.

உபயோகம்:—இந்த முத்திரை மஹாவிஷ்ணுவைக் குறிப்பதற்கும், ஸ்தம்பித்த நிலையைக் குறிப்பிடுவதற்கும் தேவர்கள் பிரத்தியக்ஷமாவதைக் குறிக்கவும், உபயோகப் படுகிறது.

## ११. कलशहस्तः ।

अन्योन्याभिमुखौ चार्धचन्द्रौ कलशसंज्ञकः ॥ ८१ ॥
भूचारिनटने पूर्णवस्तुनिर्देशभावने ।
जलावगाहने चाऽपि युज्यते कलशः करः ॥ ८२ ॥

## 11. KALAS'A HASTA

(81–82) When the hands holding 'Ardhacandra mudra' (Asamyuta Hasta No. 6) are joined together facing each other then we get 'Kalas'a Hasta'.

*Uses:*—It is used in the Dance in the Tamil country called 'Karakam' (=pot), usually performed by the Pūjāris of the Village Deities, in indicating an object in all its fullness, and in showing a fully immersed bath.

## 11. கலச ஹஸ்தம்

*(81–82) அர்த்த சந்திர முத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 6) யோடு கூடிய இரண்டு கைகளையும் ஒன்றையொன்று பார்த்துக் கொள்ளும்படி சேர்த்து வைத்துக் கொண்டால் அது 'கலச ஹஸ்த'மாகும்.*

*உபயோகம்:—இது பூசாரிகள் 'கரகம்' ஆடுவதிலும், ஒரு பொருளின் குறைவற்று நிறைந்த தன்மையைக் குறிப்பிடுவதற்கும், தண்ணீரில் மூழ்கி ஸ்நானம் செய்வதைக் காட்டுவதற்கும் உபயோகப்படுகிறது.*

## १२. पक्षवञ्चितहस्तः ।

कटिदेशगतावेतौ पक्षवञ्चितनामकौ ।
नाट्ये रौद्ररसस्यापि गरुडस्य प्लुतिक्रमे ॥ ८३ ॥

पक्षिणां पक्षमात्रेषु रशनायाश्च मध्यके ।
पक्षवञ्चितहस्तोऽयं युज्यतेऽत्र पुरान्तनैः ॥ ८४ ॥

## 12. PAKṢAVAÑCITA HASTA

(83–84) When the hands with 'Ardhacandra mudra' (Asamyuta Hasta No. 6) are held at the hips, then it is called 'Pakṣavañcita'.

*Uses*:—It is used in Dance in general, in depicting a mood of fury in particular, in showing the flight of Garuḍa, and in denoting the wings of birds, in indicating the belt-like ornament and in showing the hip.

## 12. பக்ஷ வஞ்சித ஹஸ்தம்

(83–84) அர்த்த சந்திர முத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 6) களோடு கூடிய இரு கைகளும் இடுப்பில் வைக்கப் பட்டால் அது 'பக்ஷவஞ்சிதஹஸ்த'மாகும்.

உபயோகம்;—இது பொதுவாக நாட்டியத்திலும், உக்ரபாவத்தைக் குறிப்பிடுகையிலும், கருடன் பறப்பதைக் காட்டுவதற்கும், பறவைகளின் இரக்கைகளைக் குறிப்பிடுவதற்கும், அரை நூல் மாலையைக் குறிப்பிடுவதற்கும், இடையைக் குறிப்பிடுவதற்கும் உபயோகப்படுகிறது.

## १३. उत्सङ्गहस्तः ।

अन्योन्योपरि संस्थाप्य सर्पशीर्षाभिधौ करौ ।
नाभेरधस्ताद्विन्यस्तौ नाम्ना ह्युत्सङ्गनामकः ॥ ८५ ॥
तपःसमाधौ योगे च उत्सङ्गकर इष्यते ।

## 13. UTSAṄGA HASTA

(85) If both hands holding 'Sarpaśīrṣa mudra'

(Asamyuta Hasta No. 16) are placed one over the other below the navel then it is called 'Utsaṅga'.

*Uses*:—It is used in penance and contemplation, and in yogic practice.

13. உத்ஸங்க ஹஸ்தம்

*(85)* ஸர்ப்பசீர்ஷ முத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. *16*) களோடு கூடிய இரு கைகளையும் ஒன்றன்மேலொன்ருக தொப்புளுக்குக் கீழே வைத்துக் கொண்டால் 'உத்ஸங்கஹஸ்த'மாகும்.

உபயோகம்:—தவம் செய்வதைக் காட்டுவதற்கும், த்யானத்தைக் குறிக்கவும், யோகாப்பியாஸத்திலும் இந்த முத்திரை உபயோகப்படுகிறது.

१४. तिलकहस्तः ।

त्रिपताकाह्वयौ हस्तौ ललाटहृदयस्थितौ ॥ ८६ ॥

देवपुष्पाञ्जलौ गन्धरसादितिलकेऽपि च ।

तिलकाभिधहस्तोयं युज्यते योगवेदिभिः ॥ ८७ ॥

14. TILAKA HASTA

(86–87) When the hands holding 'Tripatāka' mudra (Asamyuta Hasta No. 2) are placed so as to touch the forehead and the heart respectively, then it is called 'Tilaka Hasta'.

*Uses*:—It is employed in the act oi making a flower-offering to deities, and in putting on sandal paste-marks (on the forehead and the chest).

14. திலக ஹஸ்தம்.

*(86–87)* த்ரிபதாக முத்திரை (அஸம்யுத ஹஸ்தம்

நெ. 2) களோடு கூடிய இரு கைகளில் ஒன்றை நெற்றிக்கு நேராகவும் மற்றொன்றை ஹ்ருதயத்திற்கு நேராகவும் வைத்தால் அது 'திலக' ஹஸ்தமாகும்.

உபயோகம்:—சந்தனம் முதலியவைகளால் திலகம் இட்டுக்கொள்ளும் பொழுதும், தேவதைகளுக்கு புஷ்பாஞ்ஜலி ஸமர்ப்பிக்கும்பொழுதும் இது உபயோகப்படுகிறது.

## १५. नागबन्धहस्तः ।

हस्तौ भुजगमूर्धानौ अन्योन्यमणिबन्धनौ ।
अधोमुखौ यदि तदा नागबन्धाविति स्मृतौ ॥ ८८ ॥

भुजङ्गदम्पतीभावे निकुञ्जानां विवेचने ।
अथर्वणस्य मन्त्रेषु नागबन्धो नियुज्यते ॥ ८९ ॥

## 15. NĀGABANDHA HASTA

(88-89) When both the hands holding 'Sarpaśīrṣa' mudra (Asamyuta Hasta No. 16) are twisted one over the other at the wrist, then it is called 'Nāgabandha'.

*Uses:*—It is used to show the union of serpents, in depicting arbours, and in uttering charms.

## 15. நாகபந்த ஹஸ்தம்.

(88-89) ஸர்ப்பசிர்ஷ முத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 16) களோடு கூடிய இரு கைகள் மணிக்கட்டில் ஒன்றோடொன்று பின்னிப் பிணைக்கப்பட்டால் அது 'நாகபந்த ஹஸ்த'மாகும்.

உபயோகம்:—பாம்புகள் சேர்வதையும், கொடிமண்டபத்தையும் குறிப்பிடுவதற்கும், மந்திரப்ரயோகங்களிலும் இந்த முத்திரை உபயோகப்படுகிறது.

## १६. वैष्णवहस्तः ।

श्लिष्टाङ्गुष्ठौ पताकौ चेत्करौ वैष्णवनामकः ।
समूहे दम्पतीयोगे चक्रवाकस्य भावने ।
संघर्षे युज्यते सोऽयं वैष्णवाभिधहस्तकः ॥ ९० ॥

इति संयुतहस्तो नाम द्वितीयोऽध्यायः ।

## 16. VAIṢṆAVA HASTA

(90) When both the hands holding 'Patāka mudra (Asamyuta Hasta No. 1) are joined by the thumb, then it is called 'Vaiṣṇava Hasta'.

*Uses*:—It is used to denote a group, a couple or cakravāka birds, and in indicating the rubbing of objects.

Here ends the II chapter dealing with 'Double-Handed gestures'.

## 16. வைஷ்ணவ ஹஸ்தம்

(90) பதாக முத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 1) யோடு கூடிய இரு கைகளும் கட்டைவிரல் உட்பட ஒன்றோடொன்று இறுகப் பிணைக்கப்பட்டால் அது 'வைஷ்ணவ ஹஸ்த' மாகும்.

உபயோகம்:—இது கூட்டத்தைக் குறிப்பிடுவதற்கும், தம்பதிகளைக் குறிப்பிடுவதற்கும், சக்ரவாகப் பக்ஷிகளைக் குறிப்பிடுவதற்கும், பொருள்கள் ஒன்றோடொன்று உறைவதைக் காட்டுவதற்கும் உபயோகப்படுகிறது.

இதனோடு "இரட்டைக்கைகள்" என்கிற இரண்டாவது அத்தியாயம் முற்றுப்பெறுகிறது.



# तृतीयोऽध्यायः ।

## नृत्तहस्ताः—१६.

अतः परं प्रवक्ष्यामि नृत्तहस्तानुसारणम् ।
उद्देशस्तु क्रमात्तेषां उद्वृत्तस्तलवक्त्रगः ॥ ९१ ॥

विप्रकीर्णो गजरदः ततो व्याविद्धवक्त्रकः ।
सूचीवक्त्रो रेचितः स्यादर्धरेचितपल्लवौ ॥ ९२ ॥

नितम्बकेशबन्धाख्यौ लताख्यः करिहस्तकः ।
दण्डपक्षो ज्ञानहस्तो मुद्राहस्तश्च षोडश ॥ ९३ ॥

इत्येवं नृत्तहस्तानां नाम लक्षणमीर्यते ।

## CHAPTER 3.

### NṚTTA HASTAS–16.[1]

(91-93) The gestures that are used in Pure Dance (Nṛtta) are the following :—

1. Udvṛtta (raised up) 2. Talavaktra (facing each other) 3. Viprakīrṇa (separated) 4. Gajadanta (the elephant's tusk) 5. Āviddhavaktra (faces turned down) 6. Sūci Vaktra (Needle-face) 7. Rēcita (thrust out) 8. Ardha Rēcita (half-thrust) 9. Pallava (the tender leaf) 10. Nitamba (back of the hip) 11. Kēśabandha (tying up the locks) 12. Latā (creeper)

1. In addition to these 16 Nrtta Hastas, six more are described in one of the MSS. of Saraswati Mahal Library. They are given here after these 16.

13. Kari (elephant) 14. Daṇḍapakṣa (streched wings) 15. Jñāna (perception) 16. Mudrā (symbol).[2]

அத்தியாயம் 3.

## ந்ருத்த ஹஸ்தங்கள்—16.

*(91–93) ந்ருத்த ஹஸ்தங்கள் (சுத்த நர்த்தனத்தில் உபயோகப்படும் முத்திரைகள்) வருமாறு:—*

*(1) உத்வ்ருத்தம் (மேலே உயர்ந்துவது) (2) தல வக்த்ரம் (முகத்துக்கு முகம் பார்த்துக்கொள்வது) (3) விப்ரகீர்ணம் (பிரிக்கப்பட்டது) (4) கஜதந்தம் (யானை தந்தம்) (5) ஆவித்த வக்த்ரம் (முகங்கள் வளைந்தது) (6) ஸூசீ வக்த்ரம் (ஊசிமுகம்) (7) ரேசிதம் (உதறுவது) (8) அர்த்த ரேசிதம் (ஒருபுறம் உதறுவது) (9) பல்லவம் (துளிர்) (10) நிதம்பம் (பின்புறம்) (11) கேசபந்தம் (தலையைவாரி முடித்தல்) (12) லதா (கொடி) (13) கரி (யானை) (14) தண்டபக்ஷம் (விரிந்த சிறகு) (15) ஞானம் (ஆத்ம ஞானம்) (16) முத்ரா (அடையாளம்)*

### १. उदूवृत्तहस्तः ।

हंसपक्षकरौ वक्षस्संमुखत्वमुपाश्रितौ ॥ ९४ ॥

परस्परेण विश्लिष्टौ करावुदूवृत्तनामकौ ।
आवर्तितपदे हंसदम्पत्योरर्थभावने ॥ ९५ ॥

तिष्ठेति वचने दोलाचलनार्थे च मन्दिरे ।
उदूवृत्तहस्तः कथितः पूर्वशास्त्रविशारदैः ॥ ९६ ॥

---

2. In Bharata's Natya Sastra, we have 13 Samyuta Hastas and 30 Nrtta Hastas. In Bharatarnava we have 16 Samyuta Hastas and 16 Nrtta Hastas with 6 more in some MSS. Some of these Hastas are included among Samyuta Hastas in Bharatarnava and among Nrtta Hastas in Natya Sastra and vice versa.

## 1. UDVṚTTA HASTA

(94–96) When hands holding 'Hamsapakṣa' (Asamyuta Hasta No. 24) mudra are placed in front of each other, but apart, then it is calld 'Udvṛtta'.

*Uses*:—It is used as a part of the winding movement called Āvartita. i. e., the hands going out towards the sides, the little finger going out first. It is also used to indicate a swan-couple, for saying 'Halt!', to show the movement of the swing and to denote a house.

## 1. உத்வ்ருத்த ஹஸ்தம்.

*(94–96) ஹம்ஸ பக்ஷ முத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 24) களோடு கூடிய இரு கைகளையும் ஒன்றுக்கெதிராக மற்றொன்றை சிறிது தூரத்தில் வைத்துக்கொண்டால் அது 'உத்வ்ருத்த ஹஸ்த'மாகும்.*

*உபயோகம்:—கைகளைச் சுழற்றும் நான்கு வகைகளில் ஒன்றாகிய 'ஆவர்த்திதம்' என்ற ஹஸ்த கரணத்திலும் (அதாவது சுண்டு விரலை முதலில் திருப்பிப் பக்கங்களில் சுழற்றுவது), அன்ன பக்ஷிகளின் ஜோடியைக் குறிப்பிடுவதற்கும், 'நில்!' என்று சொல்லும் பொழுதும், ஊஞ்சல் ஆடுவதைக் குறிப்பிடுவதற்கும், வீட்டைக் குறிப்பிடுவதற்கும் இந்த முத்திரை உபயோகப்படுகிறது.*

## २. तलचक्रहस्तः ।

करौ पताकनामानौ संमुखौ तु परस्परम् ।
पौनःपुन्येन चलितौ हस्तौ तलमुखाह्वयौ ॥ ९७ ॥

लुण्ठने मण्डिनटने मुखनाट्यानुमेळने
इतस्तत इति प्रोक्तौ ख्यातस्तलमुखाह्वयः ॥ ९८ ॥

## 2. TALAVAKTRA HASTA

(97–98) When the hands holding 'Patāka' mudra (Asamyuta Hasta No. 1) are held facing each other and are shaken frequently, then it is called 'Talamukha'.

*Uses*:—It is used to denote wallowing, in the Dance called 'Maṇḍi', in gathering for the Dance called 'Mukha Nāṭya', and to express the idea of 'here and there'.

## 2. தலவக்த்ர ஹஸ்தம்.

(97–98) பதாக முத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 1) களோடு கூடிய இரு கைகளையும் ஒன்றை யொன்று பார்த்துக்கொள்ளும்படி வைத்துக்கொண்டு அடிக்கடி அதை அசைத்தால் அது 'தலமுக ஹஸ்த'மாகும்

உபயோகம் :—கீழே கிடந்து புரளுவதைக் குறிப்பிடுவதற்கும், 'மண்டி நடனம்' என்னும் ஓர்வகை நாட்டியத்திலும், 'முகநாட்டியம்' என்னும் நாட்டியத்திற்கு வந்து கூடும் பொழுதும், 'இங்கும் அங்கும்' என்று சொல்லும் பொழுதும் இந்த முத்திரை உபயோகப்படுகிறது.

## ३. विप्रकीर्णहस्तः ।

हस्तौ तु त्रिपताकाख्यौ विश्लिष्टौ स्वस्तिकाकृती ।
कथ्येते विप्रकीर्णाख्यौ नृत्तकर्मविशारदैः ॥ ९९ ॥

कवचे च करन्यासे मन्त्रावाहनभावने ।
विप्रकीर्णकरः साक्षात्कविभिर्युज्यते क्रमात् ॥ १०० ॥

## 3. VIPRAKĪRṆA HASTA

(99–100) When hands holding 'Tripatāka' mudra (Asamyuta Hasta No. 2) are kept apart but tending to cross each other, then it is called 'Viprakīrṇa'.

*Uses* :—It is used to denote an armour, and in imagining the several parts of a mantra as seated on the various parts of the hand.

### 3. விப்ரகீர்ண ஹஸ்தம்.

*(99–100) த்ரிபதாக முத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 2) யோடு கூடிய இரு கைகளையும் ஸ்வஸ்திகமாக (அதாவது ஒன்றுக்கொன்று குறுக்கே செல்லக் கூடிய போக்கை உடையதாக) ஒன்றுக்கொன்று சேராமல் சிறிது தூரத்தில் வைத்துக் கொண்டால் அது 'விப்ரகீர்ண ஹஸ்த' மாகும்.*

*உபயோகம் :—இந்த முத்திரை கவசத்தைக் குறிப்பிடுவதற்கும், மந்திராக்ஷரங்களை கை விரல்களில் ஆவாஹனம் செய்வதிலும் உபயோகப்படுகிறது.*

### ४. गजदन्तहस्तः ।

कनिष्ठे द्वे शिखरयोः प्रसृते गजदन्तकः ।
जलावगाहे द्विरददन्तयोर्भूमिखातने ॥ १०१ ॥
शङ्खस्थापनभावेषु[1] गजदन्तो नियुज्यते ।

### 4. GAJADANTA HASTA

(101) When hands holding S'ikharamudrā (Asamyuta Hasta No. 10) are held with the little fingers streched out, then it is called 'Gajadanta'.

*Uses* :—It is used in the act of well-immersed bath, in showing the tusks of elephants, in digging the ground and in placing the conch filled with sanctified water on its stand.

---

1. 'शङ्कुस्थापन' (planting a peg முளையடித்தல்) इति पाठान्तरम् ।

### 4. கஜதந்த ஹஸ்தம்.

(101) சிகர முத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 10) யோடு கூடிய இருகைகளிலும் சுண்டுவிரல் நீட்டி வைத்துக் கொள்ளப்பட்டால் அது 'கஜதந்த ஹஸ்த'மாகும்.

உபயோகம் :—இந்த முத்திரை தண்ணீரில் மூழ்கிக் குளிப்பதைக் காட்டுவதற்கும், யானையின் தந்தங்களைக் குறிப்பிடுவதற்கும், பூமியைத்தோண்டுகையிலும் அபிஷேக தீர்த்தத்தோடுகூடிய சங்கை அதன் பீடத்தில் வைப்பதைக் காட்டுவதற்கும் உபயோகப்படுகிறது.

### ५. आविद्धवक्त्रहस्तः ।

मणिबन्धावधिभ्रान्तौ करौ मुकुलनामकौ ॥ १०२ ॥
पौनःपुन्येन चलितौ हस्तावाविद्धवक्त्रकौ ।
देवार्चने च भ्रमणे चारिनाट्ये च युद्धके ॥ १०३ ॥
आविद्धवक्त्रहस्तोऽयं मनीषिभिरुदाहृतः ।

### 5. ĀVIDDHAVAKTRA HASTA

(102–103) When hands holding Mukuḷa mudra (Asamyuta Hasta No. 26) are rotated up to the wrist and shaken frequently, then it is called 'Āviddhavaktra'.

*Uses* :—It is used in offering flowers to deities, during 'Bhramaries' or rotatory movements of the whole body, in dances involving a variety of foot-movements, and in the course of a fight.

### 5. ஆவித்த வக்த்ர ஹஸ்தம்

(102–103) முகுள முத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 26) யோடு கூடிய இரு கைகளையும் மணிக்கட்டு

வரை சுழற்றி அடிக்கடி அசைத்தால் அது 'ஆவித்தவக்த்ர' ஹஸ்தமாகும்.

உபயோகம்;—இந்த முத்திரை புஷ்பார்ச்சனை செய்யும் பொழுதும், உடம்பு முழுவதையும் சுழற்றும் 'ப்ரமரி' என்னும் நர்த்தன வகையிலும், பாதசாரி நடனத்திலும், ஒருவருக்கொருவர் சண்டை போடுவதைக் குறிப்பிடுவதற்கும் உபயோகப்படுகிறது.

## ६. सूचीवक्त्रहस्तः ।

अन्योन्याभिमुखौ श्लिष्टौ सूचीवक्त्राभिधानकौ ॥ १०४ ॥
सूची सलीलाभिनये लग्नार्थे मेलने दृढे ।
शाखाद्वयस्य संघर्षे सूचिवक्त्रो नियुज्यते ॥ १०५ ॥

## 6. SŪCĪ VAKTRA HASTA

(104–105) When hands holding 'Sūcī Mukḥa' mudra (Asamyuta Hasta No. 13) are held facing each other and in contact, then it is called 'Sūcīvaktra'.

*Uses*:—It is used in Dances involving playful dalliance, to indicate a touching contact or firm union, and to denote the rubbing of branches against one another.

## 6. ஸூசீ வக்த்ர ஹஸ்தம்.

(104–105) ஸூசீமுக முத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 13) களோடு கூடிய இரு கைகளையும், ஒன்றுக்கெதிராக மற்றொன்றைச் சேர்த்து வைத்துக்கொண்டால் அது 'ஸூசீவக்த்ர' ஹஸ்தமாகும்.

உபயோகம்—இந்த முத்திரை சிருங்காரத்தில் விளையாட்டோடு கூடிய அபிநயத்திலும், வஸ்துக்கள் ஒன்றையொன்று தொட்டுக் கொண்டிருப்பதையோ அல்லது

கெட்டியாக சேர்ந்திருப்பதையோ குறிப்பிடுவதற்கும், மரக்கிளைகள் ஒன்ரோடொன்று உறைவதைக் குறிப்பிடுவதற்கும் உபயோகப்படுகிறது.

## ७. रेचितहस्तः ।

अलपद्मकरौ भ्रान्तौ शीघ्रं पार्श्वे प्रसारितौ ।
तत्तत्प्रयोगकुशलैः रेचिताख्यावुदाहृतौ ॥ १०६ ॥

चालिग्यपार्श्वनटने नारिकेले प्रलापके ।
सर्वनाट्यान्तवेलायां युज्यते कविभिः करः ॥ १०७ ॥

## 7. RECITA HASTA

(106–107) When hands holding 'Alapadma' mudra (Asamyuta Hasta No. 20) are rotated and quickly thrust out towards the side as required by the occasion, then it is called 'Rēcita Hasta'.

*Uses*:—It is used in the Dance called 'Cālia Naṭana' of the Pārs'va or sideward variety, in denoting a coconut, in loud wailing and at the 'finale' of Dances.

## 7. ரேசித ஹஸ்தம்.

*(106–107)* அலபத்மமுத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 20) களோடு கூடிய இரு கைகளையும் சுழற்றிப் பக்கங்களில் வேகமாகச் சமயத்திற்கு வேண்டியபடி நீட்டினால் அது 'ரேசித ஹஸ்த'மாகும்.

உபயோகம்:—இந்த முத்திரை பார்ச்வ நடனங்களில் ஒரு வகையாகிய 'சாலிய நடனம்' என்ற நாட்டியத்திலும் தேங்காயைக் குறிப்பிடுவதற்கும், பிரலாபிப்பதைக் குறிப்பிடுவதற்கும், நர்த்தனத்தின் முடிவிலும் உபயோகப்படுகிறது.

## ८. अर्धरेचितहस्तः ।

एतौ च वामभागस्थौ तौ नाम्ना चार्धरेचितौ ।
अङ्गहारस्य नटने चक्रवाकद्वयागतौ ॥ १०८ ॥
अर्धरेचितहस्तोऽयं युज्यते क्रमपूर्वकम् ।

## 8. ARDHA RĒCITA HASTA.

(108) If 'Alapadma' hands (Asamyuta Hasta No 20) are similarly extended on the left side, then it is called 'Ardha Rēcita' Hasta.

*Uses*: - It is used in Aṅgahāras (Dance pieces of God S'iva), and in showing the flight of a pair of cakravāka birds.

## 8. அர்த்த ரேசித ஹஸ்தம்.

(108) அலபத்ம முத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 20) களோடு கூடிய இரு கைகளும் சுழற்றப்பட்டு இடது பக்கமாக நீட்டப்பட்டால் அது 'அர்த்த ரேசித' ஹஸ்தமாகும்.

உபயோகம் :—இந்த முத்திரை சிவபெருமானின் நடனப்பகுதிகளாகிய அங்க ஹாரங்களிலும், இரு சக்ர வாகப்பக்ஷிகள் செல்வதைக் குறிப்பிடுவதற்கும் உபயோகப் படுகிறது.

## ९. पल्लवहस्तः ।

मणिबन्धप्रशिथिलौ पताकौ चाप्यधोमुखौ ॥ १०९ ॥
किञ्चित्तु चलितौ चाग्रे पल्लवाख्यकरो भवेत् ।
फलपुष्पावनम्राणां शाखानां योजनासु च ॥ ११० ॥
नम्रीकृतार्थे युज्येते पल्लवाभिधहस्तकौ ।

## 9. PALLAVA HASTA

**(109–110)** If 'Patāka' mudras (Asamyuta Hasta **No. 1**) hang languidly downward from the wrist with a slight shake at the end, then it is called 'Pallava Hasta'.

*Uses* :—It is used to denote branches bending with fruits and flowers and to denote 'bowing down'.

### 9. பல்லவ ஹஸ்தம்.

*(109–110) பதாக முத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 1) களோடு கூடிய இரு கைகளையும் மணிக்கட்டிலிருந்து தொங்க விட்டுக்கொண்டு நுனியை அசைத்தால் அது 'பல்லவ ஹஸ்த'மாகும்.*

*உபயோகம் :— இந்த முத்திரை பழங்களோடும் மலர் களோடும் வளைந்து தொங்குகின்ற மரக்கிளைகளைக் குறிப் பிடுவதற்கும், குனிந்து வணங்குவதைக் குறிப்பிடுவதற்கும் உபயோகப்படுகிறது.*

### १०. नितम्बहस्तः।

अंसदेशाद्विनिर्यातौ नितम्बावधि चालितौ ॥ १११ ॥
त्रिपताकाह्वयौ हस्तौ नितम्बाविति कीर्तितौ ।
परिश्रमे ताम्ररूपे देवावरणभावने ॥ ११२ ॥
प्रतिशिरां विधायेति वचसि भ्रमरीनृतौ ।
उग्रनाट्यादिरचने युज्यते च नितम्बकः ॥ ११३ ॥

## 10. NITAMBA HASTA

**(111–113)** When the hands holding 'Tripatāka' **mudra** (**Asamyuta** Hasta No. 2) start from the level of **the shoulders** and are shaken downward to the level **of the** hip, then it is called 'Nitamba Hasta'.

*Uses* :—It is used to denote the circular formation in the sky round the moon, to show the circular aura-like ornamental adjunct of idols made of copper, to denote the wearing of a veil, in the Dance called Bhramari Nṛtya (Rotatary Dance) and in Dances depicting fury.

### 10. நிதம்ப ஹஸ்தம்.

*(111–113) த்ரிபதாக முத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 2) களோடு கூடிய இரு கைகளையும் தோள்களின் பக்கத்திலிருந்து ஆரம்பித்து அசைத்துக்கொண்டே இடுப்பு வரைக்கொண்டுவந்தால் அது 'நிதம்ப' ஹஸ்தமாகும்.*

*உபயோகம் :—இந்த முத்திரை ஆகாயத்தில் சந்திரனைச் சுற்றித் தோன்றும் வட்டத்தைக் குறிப்பிடுவதற்கும், செம்பினால் செய்யப்பட்ட திருவாசியைக் குறிப்பிடுவதற்கும், முகமூடி அணிந்து கொள்வதைக் குறிப்பிடுவதற்கும் 'ப்ரமரி' நர்த்தனத்திலும், உக்ரபாவம் நிறைந்த நாட்டியத்திலும் உபயோகப்படுகிறது.*

### ११. केशबन्धहस्तः ।

**एतावेव नितम्बौ तु केशपर्यन्तचालितौ ।**
**केशबन्धाविति प्रोक्तौ तयो रूपमिहोच्यते ॥ ११४ ॥**

**वृक्षद्वयस्याभिनये सुमेरोरर्थभावने ।**
**उद्धृत्येति वचोमात्रे युज्यते केशबन्धकः ॥ ११५ ॥**

### 11. KES'ABANDHA HASTA

(114–115) If the hands in 'Nitamba Hasta' are lifted up to reach the locks of hair, then it is called 'Kēs'abandha Hasta'.

*Uses* :—It is used to denote a pair of trees, or the mount 'Sumeru', or to express the idea of 'lifting up'.

11. கேசபந்த ஹஸ்தம்.

*(114–115)* நிதம்ப ஹஸ்தத்தின் அசைவுகளோடு கைகளைத் தலை வரையில் கொண்டு சென்றால் அது 'கேசபந்த' ஹஸ்தமாகும்.

உபயோகம்;—இந்த முத்திரை இரட்டை மரங்களைக் குறிப்பிடுவதற்கும், 'ஸுமேரு' மலையைக் குறிப்பிடுவதற்கும், 'மேலே தூக்கி' என்ற பொருளை உணர்த்துவதற்கும் உபயோகப்படுகிறது.

१२. लताहस्तः ।

अलपद्मकरौ चाग्रे केवलं तु प्रसारितौ ।
अनन्तरप्रचलितौ लताख्यविति कीर्तितौ ॥ ११६ ॥
विद्युद्भ्रमणनाट्ये च वायुचालितकोरके ।
पुष्पितायां लतायाञ्च युज्यते हि लताकरः ॥ ११७ ॥

12. LATĀ HASTA

(116–117) If 'Alapadma' hands (Asamyuta Hasta No. 20) are extended and their ends are shaken, then it is called 'Latā Hasta'.

*Uses* :—It is used in the Dance called 'Vidyut Bhramaṇa' (Lighting rotation), to indicate young plants shaken by the wind, and creepers laden with flowers.

12. லதா ஹஸ்தம்.

*(116–117)* அலபத்ம முத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 20) களோடு கூடிய கைகளை நீட்டி நுனியை அசைத்தால் அது 'லதா' ஹஸ்தமாகும்.

உபயோகம் ;—இந்த முத்திரை 'வித்யுத் ப்ரமணம்' (மின்னல் வேகத்தில் சுற்றுவது) என்ற நாட்டியத்திலும், பூக்கள் நிறைந்த கொடிகள், இளஞ் செடிகள் முதலியவை அசைவதைக் குறிப்பிடுவதற்கும் உபயோகப்படுகிறது.

## १३. करिहस्तः ।

वामस्तु त्रिपताकः स्यादंसदेशनिवेशितः ।
पद्मकोशोऽप्यधोवक्त्रः परः स्यात्करिहस्तकः ॥ ११८ ॥
गजशुण्डार्थके विघ्नराजस्याभिनयेऽपि च ।
करिहस्तो करः साक्षान्नुज्यते करवेदिभिः ॥ ११९ ॥

## 13. KARI HASTA

(118–119) If the left hand holding 'Tripatāka mudra' (Asamyuta Hasta No. 2), is placed at the region of the shoulders while the other hand holds 'Padmakos'a' mudra (Asamyuta Hasta No. 14) pointing downward, then it is called 'Kari Hasta'.

## 13. கரி ஹஸ்தம்.

(118–119) இடது கையை த்ரிபதாக முத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 2) யுடன் தோளுக்கருகிலும், வலதுகையை கீழ் நோக்கிய பத்மகோச முத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 14) யுடனும் வைத்துக்கொண்டால் 'கரி ஹஸ்த' மாகும்.

உபயோகம் :—யானைத்துதிக்கையைக் குறிப்பிடுவதற்கும், விக்னேச்வரரைக் குறிக்கவும் இந்த முத்திரை பயன்படுகிறது.

## १४. दण्डपक्षहस्तः ।

व्यावृत्तपरिवृत्ताभ्यां अलपद्मकरौ यदा ।
रेचितौ प्रस्यतौ तौ स्तौ दण्डपक्षावुदाहृतौ ॥ १२० ॥

पक्षिणां चलने पुष्पाञ्जलिनाट्यस्य मध्यमे ।
दण्डपक्षाभिधः सोऽयं युज्यते योजनापरैः ॥ १२१ ॥

14. DAṆḌAPAKṢA HASTA

(120–121) If the hands holding 'Alapadma mudra' (Asamyuta Hasta No 20) are thrown out and off with winding movements going inward and outward, then it is called 'Daṇḍapakṣa'

*Uses:*—It is used to denote the movements of birds, and in the middle of puṣpāñjali (flower-offering Nāṭya).

14. தண்டபக்ஷ ஹஸ்தம்.

*(120–121)* அலபத்ம முத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 20) களோடு கூடிய இரு கைகளையும் வியாவ்ருத்தம், பரிவ்ருத்தங்களால், அதாவது சுண்டுவிரலை முதலில் திருப்பி உள்ளும் புறமும் சுழற்றிப் பக்கங்களில் வேகமாக அசைத்து நீட்டினால் 'தண்டபக்ஷ' ஹஸ்தமாகும்.

உபயோகம்;—பறவைகள் சஞ்சரிப்பதைக் குறிப்பிடுவதற்கும், புஷ்பாஞ்ஜலி நாட்டியத்தின் நடுவிலும் உபயோகிக்கப்படுகிறது.

१५. ज्ञानहस्तः ।

पताकोपरिविन्यस्तो हंसास्योऽप्यूर्ध्वगाननः ।
ज्ञानहस्तस्तु कथितः करभावविचक्षणैः ॥ १२२ ॥
निर्वाणभावनासु शान्तनामरसोदये ।
हृदयध्यानभावे च ज्ञानहस्तो नियुज्यते ॥ १२३ ॥

15. JÑĀNA HASTA

(122–123) If one hand holds 'Patāka' mudra (Asamyuta Hasta No. 1) and the other the 'Hamsāsya'

mudra (Asamyuta Hasta No. 23) over it, then it is called 'Jñāna Hasta'.

*Uses*:—It is used to denote Nirvāṇa or final bliss, to denote S'ānta Rasa or the peaceful mood and to indicate the contemplation in the heart.

15. ஞான ஹஸ்தம்.

*(122–123) ஒரு கையில் பதாக முத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 1) யும் அதன் மேல் மற்றொரு கையில் ஹம்ஸாஸ்ய முத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 23) யும் வைத்துக்கொள்ளப்பட்டால் அது 'ஞான ஹஸ்த'மாகும்.*

*உபயோகம்:—நிர்வாணம் என்ற முக்தி நிலையைக் குறிப்பிடுவதற்கும், சாந்தரஸத்தைக் குறிப்பிடுவதற்கும், ஹ்ருதயத்தில் த்யானம் செய்வதைக் குறிப்பிடுவதற்கும் இந்த முத்திரை உபயோகப்படுகிறது.*

१६. मुद्राहस्तः ।

करयोर्मध्यमाङ्गुष्ठयोगाच्चान्यप्रसारणात् ।
मुद्राहस्तस्समाख्यातः कराभ्यासविचक्षणैः ॥ १२४ ॥
अणुरित्यर्थके धेनोरानने तृणमात्रके ।
चिन्मुद्रासु च चञ्च्वर्थे मुद्राहस्तो निरूपितः ॥ १२५ ॥

16. MUDRĀ HASTA

(124–125) If in both hands the middle finger and the thumb are joined and the other fingers are stretched out, then it is called 'Mudrā Hasta'.

*Uses*:—It is used to denote an atom, the head of a cow, or a small piece of grass, for showing the 'Chinmudrā' (or the symbol of knowledge) and to denote the bill of a bird.

### 16. முத்ரா ஹஸ்தம்.

*(124–125)* இரு கைகளிலும் நடுவிரலையும், கட்டை விரலையும் சேர்த்து மற்ற விரல்களை நீட்டினால் 'முத்ரா ஹஸ்த'மாகும்.

உபயோகம் :— அணுவைக் குறிப்பதற்கும், பசுவின் தலையைக் குறிப்பிடுவதற்கும், சிறிய புல்லைக் குறிப்பிடுவதற்கும், சிங்முத்திரை என்னும் ஞான முத்திரையைக் காட்டுவதற்கும், பக்ஷிகளின் அலகைக் குறிப்பிடுவதற்கும் இந்த முத்திரை உபயோகப்படுகிறது.

### १७. ऊर्ध्वमण्डलहस्तः ।

अरालाख्यौ करौ चोर्ध्वभागे चेत्प्रसृतौ च तौ ।
ऊर्ध्वमण्डलिनौ हस्तौ कथितौ तद्विचक्षणैः ॥ १२६ ॥
शुकद्वन्द्वस्य गमने प्रलयस्य निरूपणे ।
ऊर्ध्वमण्डलिनौ ज्ञेयौ करकर्मविशारदैः ॥ १२७ ॥

### 17. ŪRDHVAMAṆḌALA HASTA.

(126–127) If hands holding Arāla mudra (Asamyuta Hasta No. 7) are extended upward, then it is called 'Ūrdhvamaṇḍala'.

*Uses* :—It is used to denote the flight of a pair of parrots and to indicate the deluge.

### 17. ஊர்த்வமண்டல ஹஸ்தம்.

*(126–127)* அராள முத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 7) யோடு கூடிய இரு கைகளையும் மேலே நீட்டினால் 'ஊர்த்வமண்டல' ஹஸ்தமாகும்.

உபயோகம் :— இரண்டு கிளிகள் பறப்பதைக் குறிப்பிடுவதற்கும், ப்ரளயத்தைக் குறிப்பிடுவதற்கும் இந்த ஹஸ்தம் உபயோகப்படுகிறது.

## १८. पार्श्वमण्डलहस्तः ।

एतौ हि पार्श्वद्वितयं पर्यायात्समुपागतौ ।
पार्श्वमण्डलिनौ ज्ञेयौ करकर्मविशारदैः ॥ १२८ ॥

कपोतानां च गमने भुजगास्त्रे विशेषतः ।
पार्श्वमण्डलिनौ ज्ञेयौ पुरा भरतकोविदैः ॥ १२९ ॥

## 18. PĀRS'VAMAṆḌALI HASTA.

(128–129) If the hands in Ūrdhvamaṇḍali are taken to either side alternately then it is called 'Pārs'vamaṇḍali'.

*Uses* :— It is used to denote the gait of doves, and in denoting the miraculous weapon called Nāga Astra (the serpent-weapon).

## 18. பார்ச்வமண்டலி ஹஸ்தம்.

*(128–129)* ஊர்த்வமண்டலி ஹஸ்தத்தை மாற்றி மாற்றி இரு பக்கங்களிலும் வைத்துக்கொண்டால் அது 'பார்ச்வமண்டலி' ஹஸ்தமாகும்.

உபயோகம் :— இது புருக்கள் செல்வதைக் காட்டுவதற்கும், நாகாஸ்திரத்தைக் குறிப்பிடவும் உபயோகப் படுகிறது.

## १९. उरोमण्डलहस्तः ।

एतौ तु चलितौ वक्षस्संमुखेन पुनः पुनः ।
उरोमण्डलिनौ ज्ञेयौ हस्तकर्मविशारदैः ॥ १३० ॥

क्रौञ्चानां गमने चापि खंजरीटगतिक्रमे ।
एतौ नियोजितौ पूर्वैरुरोमण्डलिनौ करौ ॥ १३१ ॥

## 19. URŌMAṆḌALI HASTA.

(130–131) If the hands in 'Pārs'vamaṇḍali' are again and again shaken in front of the chest, then they are called 'Urōmaṇḍali'.

*Uses* :— It is used to denote the flight of *krounca* bird or of robins.

## 19. உரோமண்டலி ஹஸ்தம்.

*(130–131)* பார்ச்வ மண்டலி ஹஸ்தங்களை மார்புக்கு நேராகத் திரும்பத்திரும்ப அசைத்தால் அது 'உரோமண்டலி' ஹஸ்தமாகும்.

உபயோகம் :— இந்த முத்திரை க்ரௌஞ்ச பக்ஷிகள் அல்லது சிட்டுக் குருவிகள் பறப்பதைக் குறிப்பிட உபயோகப்படுகிறது.

## २०. नलिनीपद्मकोशहस्तः।

पद्मकोशाभिधौ हस्तौ उरोदेशसमाश्रितौ ।
व्यावृत्तौ चलिताकारौ नलिनीपद्मकोशकौ ॥ १३२ ॥
सनालपद्मयुगले मर्मोक्त्यां च विशेषतः ।
मूकनाट्यानुयोगेऽपि नलिनीपद्मकः कृतः ॥ १३३ ॥

## 20. NALINĪ PADMAKŌS'A HASTA

(132–133) If hands holding 'Padmakōs'a' (Asamyuta Hasta No. 14) start from the region of the chest, are given a winding movement outward and are held with a slight shake, then it is called 'Nalinī Padmakōs'a'.

*Uses* :— It is used to show a pair of lotus with stalks, when using words with a hidden meaning, and in dumb-show.

### 20. நளினீ பத்மகோச ஹஸ்தம்.

(132–133) பத்மகோச முத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 14) களோடு கூடிய இரு கைகளும் மார்பின் உயரத்தி லிருந்து ஆரம்பித்து வ்யாவர்த்தனமாக அதாவது சுண்டு விரல் முதலில் செல்லும்படியாகப் பக்கங்களில் சுழற்றப் பட்டு சிறிது அசைக்கப்பட்டால் அது 'நளினீ பத்மகோச' முத்திரையாகும்.

உபயோகம் :—தண்டுடன் கூடிய இரு மலர்ந்த தாமரை களைக் குறிப்பிடுவதற்கும், மறைமுகமான பொருளுடன் பேசும்பொழுதும், ஊமை ஜாடை காட்டுவதற்கும் இந்த முத்திரை பயன்படும்.

### २१. कपोतहस्तः ।

दक्षिणाख्यकरः पूर्वं सर्पशीर्षाकृतिः स्थितः ।
अस्य पृष्ठे तु मिलितः पूर्ववद्वामहस्तकः ॥ १३४ ॥
प्रसृतोऽग्रे कपोतश्च कीर्तितो नाट्यवेदिभिः ।
कपोतद्वन्द्वमात्रेऽपि सर्पयोर्मिलनेऽपि च ॥ १३५ ॥
कपोतोऽयं समाख्यातः करयोगविशारदैः ।

### 21. KAPŌTA HASTA

(134–135) When the right hand holds the Sarpaśīrṣa mudra (Asamyuta Hasta No. 16) and the left hand is joined to it back to back, and extended forward, then it is called 'Kapōta Hasta'.

*Uses :*— It is used to denote a pair of pigeons and the pairing of serpents.

### 21. கபோத ஹஸ்தம்.

(134–135) வலது கையில் ஸர்ப்பசீர்ஷ முத்திரை

(அஸம்யுத ஹஸ்தம் நெ. 16)யோடு இடது கையின்பின் புறத்தை அதன் முதுகுப்புறத்தில் சேர்த்து வைத்துக் கொண்டால் 'கபோத ஹஸ்த'மாகும்.

உபயோகம்:—ஜோடிப் புருக்களைக் குறிப்பிடுவதற்கும், பாம்புகள் பிணைதலைக் காட்டுவதற்கும் இந்த முத்திரை உபயோகப்படுகிறது.

## २२. मकरहस्तः ।

एतावेव चलांगुष्ठयुगलौ मकरः करः ॥
मकराख्यौ समाख्यातौ मत्स्यमात्रे विशेषतः ॥ १३६ ॥

## 22. MAKARA HASTA.

(136) When Sarpas'irṣa hands (Asamyuta Hasta No. 16) are placed one over the other, and the thumbs are shaken up and down then it is called Makara Hasta.

*Uses*:— It is used to denote the fish.

## 22. மகர ஹஸ்தம்.

(136) ஸர்ப்பசீர்ஷ முத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 16) களோடு கூடிய இரு கைகளையும் ஒன்றின் மேலொன்ருக வைத்துக்கொண்டு கட்டைவிரல்களை மாத்திரம் மேலும் கீழும் ஆட்டினுல் 'மகர ஹஸ்த'மாகும்.

உபயோகம்:— இது மீன்களைக் குறிப்பிட உபயோகப்படுகிறது.

---

## चतुर्थोऽध्यायः ।

### ॥ हस्तविनियोगे बृहस्पतिमतम् ॥

नन्दिकेश्वरसंप्रोक्तभरतार्णववेदिना ।
उच्यते देवगुरुणा हस्तानां निर्णयक्रमः ॥ १३७ ॥

## CHAPTER 4.

### THE USE OF HASTAS ACCORDING TO BṚHASPATI.

(137) The following is the use of the Hastas according to Bṛhaspati, well-versed in Bharatārṇava of Nandikēs'vara.

*அத்தியாயம் 4*

ஹஸ்தங்களின் உபயோகத்தில் பிருஹஸ்பதி மதம்.

*(137) நந்திகேசுவரர் அருளிச்செய்த பரதார்ணவத்தை நன்குணர்ந்தவரான பிருஹஸ்பதியின் அபிப்பிராயப்படி ஹஸ்தங்களின் உபயோகங்கள் கூறப்படுகின்றன.*

१. पताकः ।

स्पर्शे देहीतिवचने निस्सङ्गस्य तु दर्शने ।
वीथ्यां प्रवेशभावेऽपि विकारे चाङ्गरागके ॥ १३८ ॥

आत्मार्थे शपथे चापि तूष्णींभावनिदर्शने ।
वृष श्रेष्ठस्य भावेऽपि गाढालिङ्गनभावने ॥ १३९ ॥

प्रलापे खड्गरूपेऽपि पलायनविधिक्रमे ।
मंचार्थे सलिले सिन्धौ क्षीरे च दरकुञ्चिते ॥ १४० ॥

तत्र तत्रेतिवचने तारल्ये स्वीकृतिक्रमे ।
एवं पताकहस्तस्य विनियोगः प्रकीर्तितः ॥ १४१ ॥

### 1. PATĀKA

(138–141) Patāka (Asamyuta No. 1) is used to denote the act of touch, in asking for a gift, to indicate absence of attachment, to denote a street, to indicate an entry, in showing changes of form, to indicate the application of cosmeticts, to denote one-self, in declaring a vow, to indicate silence, to denote a bull, to indicate excellence, in showing the act of embracing, in showing the act of wailing, to denote a sword, to show the act of running, to denote a bedstead, to denote water, to indicate the sea, to denote milk, and to indicate slight bending. The mudra is also used for expressing the idea of 'then and there', to indicate a a wavy form, and in receiving something to make it one's own.

### 1. பதாகம்

(138–141) பதாக முத்திரையை (அஸம்யுதம் நெ. 1) அடியிற்கண்டவைகளுக்கு உபயோகிக்கலாம்.

(1) தொடுதல் (2) 'கொடு' என்று கேட்டல் (3) பற்றற்ற தன்மையைக் காட்டுதல் (4) விதி (5) நுழைதல் (6) மாறுபாடு (7) உடம்பில் பூச்சுக்களால் அலங்கரித்துக் கொள்ளுதல் (8) தன்னைக் குறிப்பிடுதல் (9) சபதம் செய்தல் (10) பேசாமல் வாயை மூடியிருத்தல் (11) காளையைக்குறிப்பிடுதல் (12) உயர்ந்த தன்மையைக் குறிப்பிடல் (13) மார்புறத் தழுவுதல் (14) பிரலாபித்தல் (15) கத்தியைக் குறிப்பிடுதல் (16) ஓடுவதைக் காட்டுதல் (17)கட்டிலைக் குறிப்பிடுதல் (18) நீரைக் குறிப்பிடுதல்

(19) ஸமுத்திரத்தைக் குறிப்பிடுதல் (20) பாலைக் குறிப்பிடுதல் (21) சிறிது வளைந்திருப்பதைக் குறிப்பிடுதல் (22) 'அங்கங்கே' என்பதின் பொருளைக் குறிப்பிடுதல் (23) சஞ்சலம் அல்லது அலையின் தன்மையைக் காட்டுதல் (24) ஒரு பொருளை ஒப்புக்கொண்டு தன்னுடையதாக்கிக் கொள்ளுதல்.

## २. त्रिपताकः ।

क्रोपे वीरेऽपि माङ्गल्यभावने चेत्तु निश्चयः ।
सन्ताने च प्रसङ्गे च भ्रूमध्ये यदि कुञ्चितः ॥ १४२ ॥

आघ्राणे चिबुकस्थायी किञ्चिन्नासाश्रिताङ्गुलिः ।
नेत्रान्तिके यदि तदा विविधाञ्जनधारणे ॥ १४३ ॥

पत्ररेखाकपोले च ज्ञानार्थे वक्षसि स्थितः ।
ग्रासे चेदाननस्याग्रे कर्णाग्रे तस्य निश्चयः ॥ १४४ ॥

शकुने चापवादेऽपि विधाने परिवर्तकः ।
एवं नानाविधार्थेषु त्रिपताकः प्रयुज्यते ॥ १४५ ॥

## 2. TRIPATĀKA

(142—145) Tripatāka (Asamyuta No. 2) is used for the following purposes :—

(1) in anger (2) in heroism (3) in indicating auspiciousness (4) to denote progeny (5) to denote the context (6) to show the mid-point between the brows (for this last, the Tripatāka has to be bent a little) (7) in smelling something (for this purpose the hand is placed at the chin and reaches the nose) (8) in applying pigment to the eye (9) in applying the hand to the ornamental painting of the cheek (10) to denote the realisation of truth (and for this

purpose, the mudra is placed at the region of the heart) (11) to denote a mouthful (and for this purpose the hand is placed in front of the mouth) (12) to make sure what one has heard (and for this purpose the hand is placed at the ear) (13) in indicating a good omen (14) to denote a bad rumour (15) to denote the planning and arranging anything (and for this purpose, the mudra is given a turning).

## 2. த்ரிபதாகம்

த்ரிபதாக ஹஸ்தம் கோபத்திலும், வீரத்திலும், மங்களத்தைக் குறிப்பிடவும், சந்ததியைக் குறிப்பிடவும், ஒரு சந்தர்ப்பத்தைக் குறிப்பிடவும் உபயோகப்படுகிறது. புருவங்களின் மத்தியைக் குறிப்பிட த்ரிபதாகத்தைச் சிறிது வளைத்துவைக்க வேண்டும். ஒரு பொருளின் வாசனையை யறியும்போது த்ரிபதாகத்தை முகவாய்க்கட்டையருகே வைத்து விரலை மூக்கினருகே வைக்கவேண்டும். கண்ணருகே வைத்து மையிடுவதைக் குறிப்பிடவும், கன்னத்தில் வைத்து அதில் கஸ்தூரி முதலியவைகளால் கொடி முதலியவை எழுதி அலங்கரித்தலைக் காட்டவும், மார்பில் வைத்து ஞானத்தைக் குறிப்பிடவும் த்ரிபதாகம் உபயோகப்படும். ஒரு வாய் உணவைக் குறிக்க வாய்க்கெதிரில் பிடிக்க வேண்டும். காதில் கேட்ட ஒரு பொருளை நிச்சயம் செய்து கொள்ளும்போதும், சகுனத்தைக் குறிப்பிடவும், ஒருவரைப்பற்றி அபவாதத்தைக் கேட்கும்போதும் காதில் த்ரிபதாகத்தை வைக்கவேண்டும். ஒரு காரியத்தை ஏற்பாடு செய்வதைக் குறிப்பிட த்ரிபதாக ஹஸ்தத்தைத் திருப்ப வேண்டும். இவ்விதமாக த்ரிபதாக ஹஸ்தம் பல காரியங்களுக்கு உபயோகமாகிறது.

## ३. कर्तरीमुखहस्तः ।

अन्तर्भेदे च चञ्च्वर्थे नक्रास्ये चेदधोमुखः ।
निन्दायां शोधनायाञ्च ललाटाग्रे निवेशितः ॥ १४६ ॥

स्खलने दृग्विकारे च तत्रैवोर्ध्वमुखस्थितः ।
मरणे चेन्मौलिगामी संघर्षे चोर्ध्वरेचितः ॥ १४७ ॥

कौटिल्ये चेन्नाभिगामी वेगे पुंखितभावकः ।
कर्तरीहस्तजनिताविनियोगः प्रकीर्तितः ॥ १४८ ॥

## 3. KARTARĪMUKHA HASTA

(146–148) Kartarī mudra (Asamyuta No. 4) is used to point out the difference between the members of the same group among themselves, to denote the beak of a bird and the mouth of a crocodile, and for these purposes the mudra is held pointing downward. It is also used in censure and in examining a proposition. For the latter purpose the mudra is placed at the top of the fore-head. It is used again to denote slipping, and to indicate changes in the look; and in the latter case the mudra is held upward. It is used to denote the rubbing of objects for which purpose the mudra is thrust upward. The mudra is brought towards the navel to denote a bended form. When the mudra is held like an arrow it denotes high speed.

## 3. கர்த்தரீமுக ஹஸ்தம்

*(146–148) கர்த்தரீமுக முத்திரை (அஸம்யுதம் நெ. 4) யைக் கீழ்நோக்கிப் பிடித்தால் ஒரே வகையான பொருள்க ளிடையே ஒன்றுக்கொன்றுள்ள மாறுபாட்டைக் குறிப்*

பிடுவதற்கும், பறவையின் அலகைக் குறிப்பிடுவதற்கும் முதலை வாயைக் குறிப்பிடுவதற்கும் உபயோகப்படுகிறது. மேலும் இந்த முத்திரை நிந்திப்பதைக் குறிப்பிடவும் உபயோகப்படும். நெற்றியின் மேல் பாகத்தில் வைத்துக் கொண்டால் ஒரு விஷயத்தைச் சோதித்துப் பார்ப்பதைக் குறிக்கும். அதே இடத்தில் இந்த முத்திரையை மேல் நோக்கிப் பிடித்தால் நழுவுவதையும் பார்வை மாறுவதையும் குறிப்பிட உபயோகப்படும். இந்த முத்திரையை மேல் நோக்கித் தலைவரை உயர்த்தினால் மரணத்தையும், மேலே வேகமாக நீட்டினால் பொருள்கள் ஒன்றோடொன்று உறைந்துகொள்வதையும், நாபிக்கருகே கொண்டுவந்தால் வளைந்த தன்மையையும், அம்பைப்போல் பிடித்தால் அதிவேகத்தையும் குறிக்கும்.

## ४. अर्धचन्द्रहस्तः ।

वलये मणिबन्धे चेदधस्ताच्चेन्मृगादने ।
आत्मार्थे वक्षसिस्थायी कट्यर्थे कटिमाश्रितः ॥ १४९ ॥

प्रयासे कण्ठगामी चेदाश्चर्ये कर्णमाश्रितः ।
रशनायां नाभिगामी ध्याने वक्षसि निश्चलः ॥ १५० ॥

द्वन्द्वभावादसंगश्चेद्रुद्रुडभावयोः ।
मुखाग्रे रेचिताकारः कट्यां कलह एव च ॥ १५१ ॥

नासाग्रे निश्चलाकारः प्रतिबिंबविवेचने ।
अर्धचन्द्राख्यहस्तस्य विनियोगः प्रकीर्तितः ॥ १५२ ॥

## 4. ARDHACANDRA HASTA

(149-152) Ardhacandra mudra (Asamyuta No. 6) when held about the wrist denotes a bangle. For denoting carnivorous beasts it is held low. To denote

oneself it is held at the chest. To denote the hip it is placed at the hip. To denote great effort it is raised towards the neck. To denote surprise it is held near the ear. To denote the belt-like ornament it is placed at the navel. To denote contemplation it is placed steadily at the chest. By holding the mudra in both the hands at a distance from each other a pair of wings or a *Garuda* (kite) is denoted. To indicate a quarrel the hands are placed at the hip. When the hand is placed before the face it is used to denote the gallop of a horse. If placed steadily in front of the nose it indicates the examination of one's own reflection.

### 4. அர்த்த சந்திர ஹஸ்தம்

(1491–52) அர்த்த சந்திர ஹஸ்தத்தை (அஸம்யுதம் நெ. 6) மணிக்கட்டைச்சுற்றிப் பிடித்தால் கைக்காப்பையும், கீழே கொண்டுசென்றால் மாமிசபக்ஷிணியையும், மார்புக்கருகே பிடித்தால் 'தன்னை'க் குறிப்பிடவும் உபயோகப் படுகிறது. இடுப்பில் வைத்துக்கொண்டால் இடுப்பைக் குறிக்கும். ஒரு பெரிய முயற்சியைக் குறிப்பிடுவதற்கு இந்த முத்திரையைக் கழுத்தை நோக்கி உயர்த்தவேண்டும். ஆச்சரியத்தைக் குறிப்பிட காதுக்கருகிலும், அரைநூல் மாலையைக் குறிப்பிட நாபிக்கருகிலும், த்யானத்தைக் குறிப்பிட மார்பில் ஸ்திரமாகவும் இந்த முத்திரையை வைத்துக் கொள்ளவேண்டும். மேலும் இரு கைகளிலும் இந்த முத்திரையை ஒன்றுக்கொன்று கொஞ்சதூரத்தில் இருக்கும்படி வைத்துக்கொண்டால் இரு சிறகுகளையோ அல்லது கருடனையோ குறிப்பிட உபயோகப்படும். இந்த முத்திரையோடு கூடிய கைகளை இடுப்பில் வைத்தால் வம்புச் சண்டையையும் முகத்துக்கெதிரில் பிடித்தால் குதிரைப் பாய்ச்சலையும் குறிக்கும். மூக்கிற்கு எதிராக இந்த முத்திரையைப் பிடித்

தால் தன்னுடைய பிரதிபிம்பத்தை ஆழ்ந்து கவனிப்பதைக் குறிப்பிட உபயோகப்படும்.

५. अरालहस्तः ।

चक्रवाके तुलायाञ्च कूचिमारे हृदि स्थितः ।
अमायामलिकस्थायी क्षमायां हृदि निश्चलः ॥ १५३ ॥
पैशुन्ये चेत्कर्णगामी नाभौ चेत्सलिलभ्रमे ।
अरालाभिधहस्तोऽयमेनमेवं प्रयोज्यते ॥ १५४ ॥

5. ARĀLA HASTA

(153–154) Arāla (Asamyuta No. 7) is placed at the level of the chest to denote chakravāka bird or a weighing instrument or 'Kūchimāra' (a captivating spell). When placed near the forehead (?) it denotes the new-moon. When held steadily at heart it denotes forbearance. Tale-bearing is denoted by taking the mudra to the ear. The mudra is placed at the chest to denote the level of water.

5. அராள ஹஸ்தம்

*(153–154) அராள முத்திரையை (அஸம்யுதம் நெ. 7) மார்புக்கு நேராகப் பிடித்தால் சக்ரவாகப் பக்ஷிகளையோ அல்லது தராசையோ அல்லது 'கூசிமாரம்' என்னும் ஸ்திரீ புருஷ வசியப்பிரயோகத்தையோ குறிப்பிட உபயோகப் படும். நெற்றிக்கருகே இந்த முத்திரையைப் பிடித்தால் அமாவாசையைக் குறிப்பிடவும், மார்பில் ஸ்திரமாகப்பிடித் தால் பொறுமையைக் குறிப்பிடவும், காதுக்கருகே பிடித் தால் கோள் சொல்வதைக் குறிப்பிடவும் உபயோகப்படும். மார்பருகே வைத்தால் தண்ணீர் மட்டத்தைக் குறிப்பிட உபயோகப்படும்.*

## ६. शुकतुण्डहस्तः ।

पुंखितो भिण्डिपालार्थे भाव्युदन्ते च निश्चलः ।
भ्रमणे वक्षसि चलः पाञ्चाले तु विनिश्चलः ॥ १५५ ॥
ब्रह्मास्त्रे चेन्मुखस्याग्रे कौटिल्ये परिवर्तकः ।
नाभावूर्ध्वाकृतिर्ज्ञाने प्रेरितश्चेन्महाभये ॥ १५६ ॥
एवं नानाविधार्थेषु शुकतुण्डकरो भवेत् ।

## 6. S'UKATUNḌA HASTA

(155–156) When the hand holding S'ukatuṇḍa (Asamyuta No. 8) is held like a shooting arrow then it denotes the weapon '*Bhinḍi Pāla*' (a heavy spear-like weapon). If the mudra is held steady it denotes a future happening. If it is shaken near the chest it denotes rotation. If it is held without any motion it denotes the country or citizen of Pāncālā (Punjab). If it is held before the face it denotes the Braḥmāstra (the most powerful miraculous missile). If the hand holding the mudra is twisted it shows a bending. If it is held looking upward at the level of the navel it denotes spiritual knowledge. If it is sent forward it denotes great danger.

## 6. சுகதுண்ட ஹஸ்தம்

*(155–156) சுகதுண்ட ஹஸ்தத்தை (அஸம்யுதம் நெ. 8) அம்பு செல்வதைப்போல் பிடித்தால், 'பிண்டிபாலம்' என்ற ஆயுதத்தைக் குறிப்பிடும். இந்த முத்ரையை ஸ்திரமாகப் பிடித்தால் நடக்கப்போகும் ஓர் சம்பவத்தையும், மார்புக்கருகில் இதை அசைத்தால் சுழல்வதையும், அசைக்காமல் வைத்துக்கொண்டால் பாஞ்சால தேசத்தை*

யோ தேசவாசியையோ குறிப்பிடவும் உபயோகப்படும். முகத்திற்கு நேராக இந்த முத்திரையைப் பிடித்தால் ப்ரம் மாஸ்திரத்தைக் குறிப்பிடவும் இந்த முத்திரையோடு கூடிய கையைத் திருப்பினுல் வளைந்த தன்மையைக் குறிப்பிடவும், இந்த முத்திரையை நாபிக்கருகே மேல் நோக்கிப் பிடித்தால் ஆத்ம ஞானத்தைக் குறிப்பிடவும் உபயோகப்படும். முன் னுல் கொண்டு சென்றுல் இது ஒரு பெரிய ஆபத்தைக் குறிப்பிட உபயோகப்படும்.

## ७. मुष्टिहस्तः ।

आलम्बने मध्यभावे छले संकेतभावने ॥ १५७ ॥
राजमन्त्रे साधनेऽपि भद्रार्थे वक्षसि स्थितः ।
फलके खड्गमुष्ट्यां च प्रणामे प्राकृतैः कृते ॥ १५८ ॥
मुष्टिहस्तो हस्तमर्मचतुरैरेवमिष्यते ।

## 7. MUSṬI HASTA

(157-158) Musṭi Hasta (Asamyuta No. 9) is employed to denote hanging from a support, a middle position, act of deception, words or signs with secret meaning, the deliberations of a king, a helpful device and the idea of 'weal'. In all these cases the mudra is held at the chest. It is also used to denote a plank, a sword, the fist and salutation by common folk.

## 7. முஷ்டி ஹஸ்தம்

*(157-158) முஷ்டி ஹஸ்தத்தை (அஸம்யுதம் நெ. 9) மார்புக்கருகே பிடித்தால் தொங்குவதையும், மத்திய பாகத்தையும், ஏமாற்றுவதையும் ரகசிய அர்த்தமுள்ள வார்த்தைகளையும் சைகைகளையும், அரசனது மந்திராலோசனையையும், காரியத்திற்கான சாதனத்தையும், க்ஷேமத்தையும்*

குறிப்பிட உபயோகப்படும். மேலும் இந்த முத்திரை ஒரு பலகை, கத்தி, முஷ்டி முதலியவைகளைக் குறிப்பிடவும், சாமானியமக்கள் ஒருவருக்கொருவர் வணக்கம் தெரிவித்துக் கொள்ளும்போதும் உபயோகப்படுகிறது.

## ८. शिखरहस्तः ।

धनुष्मतां भावनासु तिर्यक्चेद्दन्तधावने ॥ १५९ ॥
प्रेरितश्चरमार्थेषु (?) कुन्तानां धारणेऽपि च ।
पितॄणां तर्पणं चापि नाट्यारंभे क्वचिद्भवेत् ॥ १६० ॥
उदात्तनायकार्थे चेदंसदेशमुपाश्रितः ।
सन्दर्भे स्वयमित्युक्ते कृशार्थे केवलेपि च ॥ १६१ ॥
किरातार्थे मुखाग्रे चेत्कण्ठे चेन्मन्त्रभावने ।
व्यावृत्तपरिवृत्तश्चेत्पोतार्थेषु विशेषतः ॥ १६२ ॥
एवमौचित्यभावेन युज्यते शिखरः करः ।

## 8. S'IKHARA HASTA

(159–162) S'ikhara Hasta (Asamyuta No. 10) is used in representing heroes armed with bows. It is also used when held obliquely to denote the cleaning of teeth. When it is sent forward it means "the end". It is also used when holding the weapon 'Kuntā' (a spear or lance). It is used again for offering sesamum and water to the Pitṛs (the departed souls). It is used among the initial poses of a Dance. It is also used to denote an 'udātta nāyaka' (a hero of great nobility) when the mudra is placed near the shoulder. It is used to denote the idea of 'a context', to denote oneself, and to denote thinness and the idea of 'only'. It is used

again to denote a hunter when the mudra is held at the level of the face and when held at the level of the neck it denotes the contemplation of a 'mantra' (sacred syllables). It denotes a boat when the hand holding the mudra is given a winding motion inward and outward.

### 8. சிகர ஹஸ்தம்

*(159–162)* சிகர முத்திரை (அஸம்யுதம் நெ. 10) வில் வீரர்களைக் குறிப்பிட உபயோகப்படும். இந்த முத்திரையைச் சாய்த்துப் பிடித்தால் பல் துலக்குவதையும், முன்னால் கொண்டு சென்றால் 'கடைசி'யையும், குந்தம் என்னும் ஈட்டியைப் போன்ற ஆயுதத்தையும் குறிப்பிட உபயோகப்படுகிறது. பித்ருக்களுக்குத் தர்ப்பணம் செய்வதைக் குறிப்பிடவும், நாட்டியத்தின் ஆரம்ப நிலைகளிலும் இந்த முத்திரை பயன்படுகிறது. இந்த முத்திரையைத் தோளின் மீது பிடித்தால் 'உதாத்த நாயகனை' அதாவது உயர்ந்த குணமுள்ளவனைக் குறிப்பிட உதவும். மேலும் சந்தர்ப்பத்தைக் குறிப்பிடவும், 'தன்னை'க்குறிப்பிடவும், மெலிந்த தன்மையைக் குறிப்பிடவும், 'அது மாத்திரம்' என்ற பொருளைக் குறிக்கவும், முகத்திற்கு நேராகப் பிடித்தால் வேடனைக் குறிப்பிடவும், கழுத்திற்கருகே பிடித்தால், மந்திர ஜபத்தைக் குறிப்பிடவும், உபயோகப்படுகிறது. மேலும் இந்த முத்திரையோடு கூடிய கையை உட்புறமாகவும், வெளிப்புறமாகவும் சுழற்றினால் ஒரு படகைக் குறிப்பிட இந்த முத்திரை பயன்படுகிறது.

### ९. कपित्थहस्तः ।

आकर्षणे मुखाग्रे चेद्धोमे बाणनिरूपणे ॥ १६३ ॥
वरुणे द्वन्द्वभावश्चेदैक्ये हृदि यदि स्थितः ।
कालार्थे कर्णगामी चेल्लीलाब्जानां च धारणे ॥ १६४ ॥

एवमर्थेषु विज्ञेयः कपित्थः कल्प्यते क्रमात् ।

## 9. KAPITTHA HASTA

(163–164) When Kapittha mudra (Asamyuta No. 11) is held at the level of the face it is used to denote the act of pulling, an oblation, an arrow or Varuṇa. If both hands holding the mudra are joined together, it denotes union. If it is placed near the heart it denotes the idea of time. When placed at the ear it denotes a blue lotus playfully worn in the ear.

## 9. கபித்த ஹஸ்தம்

*(163–164) கபித்த ஹஸ்தத்தை (அஸம்யுதம் நெ. 11) முகத்திற்கு நேராகப் பிடித்தால் ஒரு பொருளைப் பிடித்திழுப்பதையும், ஹோமம் செய்வதையும், அம்பையும், வருணனையும் குறிப்பிட உபயோகப்படும். இரு கை முத்திரைகளையும் சேர்த்தால் ஒன்றாகச் சேருவதைக் குறிக்கும். ஹ்ருதயத்திற்கருகே பிடித்தால் காலத்தைக் குறிப்பிடவும், காதிற்கருகே பிடித்தால் காதில் அணியும் நீலோத்பலத்தைக் குறிப்பிடவும் உபயோகப்படும்.*

## १०. कटकामुखहस्तः ।

नृत्तावसानसमयेष्वंसदेशमुपाश्रितः ॥ १६५ ॥
उपवेष्टितरूपश्चेद्देवानामभिषेचने ।
मर्यादायां तिरश्चीनो जानौ चेन्नूपुरार्थके ॥ १६६ ॥
एवं नाट्यप्रयोगेषु विज्ञेयः कटकामुखः ।

## 10. KAṬAKĀMUKHA HASTA

(165–166) Kaṭakāmukha (Asamyuta No. 12) is used at the end of a Dance when the hands hold the

mudra at the level of the shoulders. When the mudra is given a winding motion with the first finger going out first, it is used to denote a sacred bath given to deities. To denote a boundary it is moved horizontally. Held at the knee it denotes the anklet.

### 10. கடகாமுக ஹஸ்தம்

(165–166) கடகாமுக முத்திரையை (அஸம்யுதம் நெ. 12) ஓர் நர்த்தன முடிவில் தோள் உயரத்தில் உயர்த்திப் பிரயோகிக்கப்படுகிறது. விக்ரஹங்களுக்கு அபிஷேகம் செய்வதைக் குறிப்பிட இந்த முத்திரையுடன் கூடிய கையை ஆள்காட்டி விரல் முதலில் செல்லும்படி சுழற்ற வேண்டும். எல்லையைக் குறிப்பிட இந்த முத்திரையோடு கூடிய கையை நீளவாட்டத்தில் செலுத்தவேண்டும். பாதச் சிலம்பைக் குறிப்பிட முழங்காலுக்கருகே இந்த முத்திரையைக் கொண்டு செல்லவேண்டும்.

### ११. सूचीमुखहस्तः ।

सायमर्थे पार्श्वगामी किञ्चिदुद्वेष्टिताकृतिः ॥ १६७ ॥

रोमावल्यां कुक्षिगामी नासायामाननान्तिके ।
श्लाघायां सत्यवचने क्रोडदेशे तु निश्चलः ॥ १६८ ॥

पुरोभागे रेचितश्चेद्रथाङ्गस्य निरूपणे ।
उद्वेष्टितप्रभावश्चेदेकच्छत्रार्थभावने ॥ १६९ ॥

कर्णेऽपि च तथाभूतः कुण्डलार्थे विशेषतः ।
युष्मच्छब्दे पुंखितश्चेत् तच्छब्दे चाप्यधोमुखः ॥ १७० ॥

पूर्णिमायां ललाटाग्रे भ्रमरश्चक्रभावतः ।
नासाग्रे विप्रलम्भार्थे सूचिरेवं प्रयुज्यते ॥ १७१ ॥

## 11. SŪCĪMUKHA HASTA

(167–171) When Sūcīmukha (Asamyuta No. 13) is moved towards the side with a slight winding motion upward, it denotes the evening; if it is taken towards the abdomen it denotes the line of hair above the navel; if it is held near the face it denotes the nose, if held steadily near the stomach it is used to denote an appreciation or a declaration of truth. When it is moved fast forward and backward in front, it is used to denote the wheel of a chariot. When it is given a winding motion upward with the eyes assuming a look of power, it is used to denote the unquestioned authority of an emperor. To denote the ear or more particularly the ear-ring, it is held near the ear. To denote the second person it is extended forward. To denote the third person it is held pointing downward. If it is revolved in a circle before the fore-head it denotes the full moon. To indicate pining alone, it is held near the nose.

## 11. ஸூசீ முக ஹஸ்தம்

*(167–171) ஸூசீமுக முத்திரையை (அஸம்யுதம் நெ 13) இலேசான சுழற்றலோடு பக்கத்தில் மேலே கொண்டு சென்ருல் சாயங்காலத்தையும், வயிற்றுக்கருகே கொண்டு சென்ருல் நாபிக்கு மேலேயுள்ள ரோமாவளியையும், முகத்திற்கருகே பிடித்தால் மூக்கையும் குறிப்பிட உபயோகப் படும். வயிற்றுக்கருகே பிடித்தால் ஒருவரைச் சிலாகித்துப் பேசுவதையும், உண்மையை உரைப்பதையும், முன்னும் பின்னுமாக அசைத்தால் தேர்ச் சக்கரத்தையும், கம்பீர மான பார்வையோடு இந்த முத்திரையோடு கூடிய கையை மேலே சுழற்றினுல் ஏகசக்ராதிபத்தியத்தையும் குறிப்பிட*

உபயோகப்படுகிறது. காதையோ அல்லது குண்டலங்களை யோ குறிப்பிட காதுக்கருகில் பிடிக்கவேண்டும். இந்த முத்திரையை முன்னால் நீட்டினால் முன்னிலையையும், கீழ் நோக்கிப்பிடித்தால் படர்க்கையையும் குறிப்பிட உபயோகப் படும். நெற்றிக்கு நேராகச் சுழற்றினால் பூர்ண சந்திரனைக் குறிப்பிடவும், மூக்கிற்கருகே பிடித்தால் விரஹ தாபத்தைக்குறிப்பிடவும், உபயோகப்படுகிறது.

## १२. पद्मकोशहस्तः ।

अधोमुखस्तु शुण्डायां ऊर्ध्वे चेद्गालधल्यके ।
पुंखितो यदि बिल्वार्थे हेमरूप्यादिभाजने ॥ १७२ ॥
व्यावर्तपरिवर्तश्चेच्चक्रवाकेऽपि कोरके ।
क्वचित्करणभेदेषु पद्मकोशः प्रयुज्यते ॥ १७३ ॥

## 12. PADMAKŌS'A HASTA

(172-173) When held pointing downward Padmakōs'a (Asamyuta No. 14) can be employed to denote the elephant's trunk. When held upward, it is used to denote sparkling brightness. When it is thrust forward it may denote a *Bilva* fruit or a gold or silver ware. Cakravāka birds or their young ones are denoted by a winding motion inward and outward of the mudra.

## 12. பத்மகோச ஹஸ்தம்

*(172-173)* பத்மகோச முத்திரையை (அஸம்யுதம் நெ. 14) கீழ்நோக்கிப் பிடித்தால் யானையின் துதிக்கையை யும், மேல்நோக்கிப் பிடித்தால் பளபளவென்று ப்ரகாசிப்ப தையும், முன்னால் வேகமாக நீட்டினால் வில்வப் பழத் தையோ, தங்கம் அல்லது வெள்ளிப் பாத்திரத்தையோ குறிக்கும். உட்புறமாகவும், வெளிப்புறமாகவும் இந்த முத்

திரையைச் சுழற்றினல் சக்ரவாகப்பக்ஷிகளையும், அவற்றின் குஞ்சுகளையும் குறிப்பிட உபயோகப்படும்.

## १३. बाणहस्तः ।

भृङ्गारे वडिशे स्नानवेद्यां शिरस्थभावने ।
बाणाभिधानहस्तोऽयं प्रयुज्यश्शास्त्रवेदिभिः ॥ १७४ ॥

## 13. BĀṆA HASTA

(174) This (Asamyuta No. 15) is used in enacting erotic scenes, in indicating an angling rod, to denote a bathing seat or any object on the head.

## 13. பாண ஹஸ்தம்

(174) இந்த முத்திரை (அஸம்யுதம் நெ. 15) ச்ருங்கார அபிநயங்களிலும், தூண்டிலையும், ஸ்நானத்திற்கான ஆஸனத்தையும் தலைமேல் வைத்துக்கொண்டிருக்கும் ஓர் பொருளையும் குறிக்க உபயோகப்படும்.

## १४. सर्पशीर्षहस्तः ।

कुंकुमे पंकभावेऽपि दानवेलाविवेचने ।
यदि स्तनान्तरस्थायी श्मश्रुधारणकर्मणि ॥ १७५ ॥
मुखानां क्षालनविधौ तस्मिन्नेवं प्रचारितः ।
द्वन्द्वभावात् कर्णगामी हन्त हाहेति भाषणे ॥ १७६ ॥
सर्पशीर्षकरस्सोऽयं प्रयोज्यो हस्तवेदिभिः ।

## 14. SARPAS'ĪRṢA HASTA

(175–176) Sarpas'īrṣa (Asamyuta No. 16) is used to denote the 'kumkum' mark on the fore-head, to

denote mire, and in indicating the actual act of giving. When held near the middle of the chest, it is used to denote the beard. It is used to indicate the washing of the face when moved about the face. Both the hands are raised towards the ear in exclaiming 'Ah! Alas!'.

### 14. ஸர்ப்பசிர்ஷ ஹஸ்தம்.

*(175—176) நெற்றியில் குங்குமம் இட்டுக்கொள்வதைக் குறிப்பிடவும், சேற்றைக் குறிப்பிடவும், தானம் கொடுப்பதைக் குறிப்பிடவும், இந்த முத்திரை (அஸம்யுதம் நெ. 16) உபயோகப்படும். மார்புக்கருகே வைத்துக்கொண்டால் தாடியைக் குறிக்கும். முகத்திற்கருகே அசைத்தால் முகம் கழுவுவதையும், காதினருகே இந்த முத்திரையோடு கூடிய இருகைகளையும் கொண்டு சென்றால் 'ஐயோ!' என்று அலறுவதையும் குறிப்பிடும்.*

### १५. सर्पचतुरहस्तः ।

**अस्मिन्ननामिकामूलमिश्रितोऽङ्गुष्ठ एव च ॥ १७७ ॥**
**नाम्नायं सर्पचतुरो विद्वद्भिः परिकीर्तितः ।**
**मधुद्रवे च कर्पूरे भुजङ्गचतुरो भवेत् ॥ १७८ ॥**

### 15. SARPA CATURA HASTA

(177–178) If in Sarpaśīrṣa Hasta (Asamyuta No. 16) the thumb is placed at the foot of the ring-finger, it is called 'Sarpa Catura' (Hood-like catura). It is used to indicate honey or camphor.

### 15. ஸர்ப்பசதுர ஹஸ்தம்

*(177–178) ஸர்ப்பசிர (அஸம்யுதம் நெ. 16) ஹஸ்தத்தில் மோதிரவிரலின் அடிப்பாகத்தில் கட்டை விரலை வைத்தால் அதற்கு 'ஸர்ப்ப சதுரம்' என்று பெயர்.*

உபயோகம் :—தேன், கற்பூரம் இவைகளைக் குறிப்பிட இந்த முத்திரை பயன்படுகிறது.

### १६. चलसर्पकरः ।

तर्जन्यादिकनिष्ठान्तमिश्रितोऽङ्गुलिषु क्रमात् ।
शनैः प्रसारितोऽङ्गुष्ठश्चलसर्पकरो भवेत् ॥ १७९ ॥
कलाभेदे वैद्यपाकशोधनायां च सिद्धके ।
अलक्तके प्रयोज्यः स्याच्चलसर्पकराभिधः ॥ १८० ॥

### 16. CALASARPA KARA.

(179--180) If in Sarpas'irṣa Hasta, the thumb is made to move touching all the fingers from the first finger to the little finger, then it is called 'Calasarpa' Hasta (The moving serpent).

*Uses* :—It is used to indicate the separation of units of tāla into Kalas (parts), in examining the consistency of a pharmaceutical preparation, to denote the sāla tree, and in applying ornamental red paint to the feet.

### 16. சலஸர்ப்ப கரம்

(179-180) ஸர்ப்ப சீர்ஷ ஹஸ்தத்தில் கட்டைவிரலை, ஆள் காட்டி விரல் முதல் சுண்டுவிரல் வரையில் எல்லா விரல்களையும் தொட்டுக் கொண்டு நகர்த்தினால் அதற்கு 'சலஸர்ப்பகரம்' என்று பெயர்.

உபயோகம் :—ஒரு தாளத்தின் அங்கத்தைக் 'கலை' களாகப் பிரித்தலைக் காட்டுவதற்கும், சூரணம், லேகியம் முதலிய மருந்துவகைகளைத் தொட்டுப் பார்த்துப் பக்குவம் சரியாக இருக்கிறதா என்று சோதனை செய்யும் போதும், மராமரத்தைக் குறிப்பிடவும், காலுக்கு மருதோன்றி, செம் பஞ்சுக்குழம்பு முதலியவை இடும்போதும் இந்த ஹஸ்தம் உபயோகப்படுகிறது.

## १७. मृगशीर्षहस्तः ।

ललाटेंऽसे क्रोडसीम्नि कुक्षेरग्रे च निश्चलः ।
हस्तिन्यामपि शंखिन्यां चित्रिण्यां च विशेषतः । १८१ ॥

पद्मिन्यां च क्रमेण स्यात्तिर्यक्चेद्यौवने भवेत् ।
स्तनान्तरे निश्चलश्चेच्छित्रलिंगस्य धारणे ॥ १८२ ॥

यदि नेत्रान्तरस्थायी लज्जायाश्च निवारणे ।
नाभौ चेद्बालकार्थेऽपि प्रयोज्यो मृगशीर्षकः ॥ १८३ ॥

## 17. MṚGAS'ĪRṢA HASTA.

(181–183) When Mṛgas'īrṣa Hasta (Asamyuta No. 17) is held steadily at the fore-head, near the shoulders, near the chest, and before the abdomen, they indicate respectively the four classes of women, namely the Padmini, Citrini, S'ankhini and Hastini according to their sexual and other characteristics.

## 17. ம்ருகசீர்ஷ ஹஸ்தம்

*(181–183) ம்ருகசீர்ஷ ஹஸ்தத்தை (அஸம்யுதம் நெ. 17) நெற்றியில் வைத்தால் 'பத்மினி' என்னும் ஸ்திரீ ஜாதியையும், தோளுக்கு சமீபமாக வைத்தால் 'சித்ரிணி' என்னும் ஸ்திரீ ஜாதியையும், மார்புக்கருகே வைத்தால் 'சங்கினி' என்னும் ஸ்திரீ ஜாதியையும், வயிற்றுக்கருகே வைத்தால் 'ஹஸ்தினி' என்னும் ஸ்திரீ ஜாதியையும் குறிக்கும். யௌவனத்தைக் குறிப்பதற்கு இந்த ஹஸ்தத்தைக் குறுக்காகப் பிடிக்கவேண்டும். மார்பெதிரே அசைக்காமல் பிடித்தால் வெட்கத்தை விட முயற்சிப்பதையும், நாபியின் உயரத்தில் பிடித்தால் குழந்தையையும் குறிக்கும்.*

## १८. सिंहमुखहस्तः ।

वृषभार्थे पुंखितश्चेन्मोक्षार्थे चेद्धृदि स्थितः ।
नासिकाग्रे तिरश्चीनस्संघर्षे कटुदर्शने ॥ १८४ ॥
आकर्णने श्रुतिस्थायी सिंहास्योऽयं प्रकल्प्यते ।

## 18. SIMHAMUKHA HASTA.

(184) Simhamukha mudra (Asamyuta No. 18), if held like an arrow, denotes a bull; held near the heart it denotes salvation; held across near the nose it denotes rubbing or excited appearance, and at the ear it indicates the act of hearing.

## 18. ஸிம்ஹமுக ஹஸ்தம்

*(184) ஸிம்ஹமுக முத்திரையை (அஸம்யுதம் நெ. 18) ஒரு அம்பைப் போல வைத்துக் கொண்டால் அது விருஷபத்தைக் குறிக்கும். மோக்ஷத்தைக் குறிக்க மார்புக்கருகிலும், உறைதலேயும், கடுமையான பார்வையையும் குறிப்பிட மூக்கிற்கருகே குறுக்காகவும், இந்த முத்திரையைப் பிடிக்க வேண்டும். காதுக்கருகே பிடித்தால் கேட்பதைக் குறிக்கும்.*

## १९. कांगूलहस्तः ।

तिर्यग्जंबूफलार्थेऽपि स्तनोद्भेदे स्तनाग्रतः ॥ १८५ ॥
मुखस्थाने यदि स्थायी द्राक्षाबिम्बफलादिषु ।
करणेऽधोमुखीभूतः कांगूलश्चैवमिष्यते ॥ १८६ ॥

## 19. KĀṄGŪLA HASTA.

(185-186) To denote the jambu fruit, Kāṅgūla Hasta (Asamyuta No. 19) is held across. When held

**9. ஸமபாதம்**

(381) ஸமபாதஸ்தானகம் எல்லைப்புற நடனத்திலும், சாலய நடனத்திலும் உபயோகப்படும்.

**१०. वैशाखम् ।**

**आरंभे पदशिक्षायाः सप्तनाट्यानुमेळने ।**
**वैशाखस्थानकं प्रोक्तं तत्तत्कर्मविशारदैः ॥ ३८२ ॥**

10. VAIS'ĀKHA

(382) Vais'ākha Sthānaka is used in the initial lessons on footing, and in the combination of the seven classes of dance.

**10. வைசாகம்**

(382) வைசாகஸ்தானகம் நாட்டியத்தின் ஆரம்பப் பயிற்சியின்போது பாதபேதங்களைக் கற்பிக்கையிலும், ஏழு வகை நாட்டியங்களைச் சேர்ப்பதிலும் உபயோகப்படும்.

**११. मण्डलम् ।**

**मण्डलस्थानकं प्रोक्तं शृंगारनृतिभावने ।**

11. MAṆḌALA

(383) Maṇḍala Sthānaka is used in erotic dances.

**11. மண்டலம்**

(383) மண்டலஸ்தானகம் ச்ருங்கார நாட்டியத்தில் பயன்படும்.

**१२. आलीढम् ।**

**बाणसंधाननटने स्थानमालीढकं भवेत् ॥ ३८३ ॥**

12. ĀLĪḌHA

Ālīḍha Sthānaka is used when the arrow is fixed to the bow.

12. ஆலீடம்

ஆலீடஸ்தானகம் வில்லில் அம்பு தொடுக்கும்போது உபயோகிக்கப்படுகிறது.

१३. प्रत्यालीढम् ।

प्रत्यालीढस्थानकं तत् सव्यसाचिनृतिक्रमे ।

13. PRATYĀLĪDHA

(384) Pratyālīdha Sthānaka is used while personating Savyasāci (Arjuna) who could use both hands for holding the arrow.

13. ப்ரத்யாலீடம்

(384) ப்ரத்யாலீட ஸ்தானகம், ஸவ்யஸாசீ (இடது கையாலும் பாணப்ரயோகம் செய்பவன்) என்ற பெயருடைய அர்ஜுனனை அபிநயிக்கையில் உபயோகப்படும்.

१५. स्वस्तिकम् ।

स्वस्तिकं शृंगनटने कीर्तितं भरतादिभिः ॥ ३८४ ॥

15. SWASTIKA

Swastika Sthānaka is used in S'ṛnga Nāṭya[1].

15. ஸ்வஸ்திகம்

ஸ்வஸ்திக ஸ்தானகம் ச்ருங்க நாட்டியத்தில் பயன்படும்.

1. For a description of Srnga Natya see chapter 12 supra.

## १६. वर्धमानम् ।

पुष्पांजलेस्तु नटने दिक्षु दिक्षु नियुज्यते ।
वर्धमानस्थानकं तत् कीर्तितं पूर्वसूरिभिः ॥ ३८५ ॥

## 16. VARDHAMĀNA

(385) Vardhamāna Sthānaka is used at 'Puṣpāñjali' or offering of flowers facing the several directions.

## 16. வர்த்தமானம்

*(385) வர்த்தமானஸ்தானம் புஷ்பாஞ்ஜலியின்போது எட்டுத் திக்குகளை நோக்கி நிற்கையில் உபயோகப்படும்.*

## १७. नन्द्यावर्तम् ।

शालिनाट्यानुसरणे प्रेंखणीशब्दनर्तने ।
तदेव स्थानकं नाम्ना नन्द्यावर्तमुदीरितं ॥ ३८६ ॥

## 17. NANDYĀVARTA

(386) Nandyāvarta Sthānaka is used in following the Cāli Nāṭya and while dancing to the accompaniment of S'abda (syllables) in Prēṅkaṇī Nāṭya.

## 17. நந்த்யாவர்த்தம்

*(386) நந்த்யாவர்த்த ஸ்தானகம் சாலி நாட்டியத்தை அனுசரிக்கையிலும், ப்ரேங்கணி நாட்டியத்தில் வரும் சொல்லுக்கட்டுகளுக்கு நர்த்தனம் செய்கையிலும் உபயோகப்படும்.*

## १८. चतुरस्रम् ।

प्रसराभिधनाट्ये च मुखनाट्यानुजृंभणे ।

चतुरस्रस्थानकं तत् कथितं भरतादिभिः ॥ ३८७ ॥

18. CATURASRA

(387) Caturasra Sthānaka is used in the Nāṭya known as 'Prasarā' and in the initial dance.

18. சதுரச்ரம்

(387) சதுரச்ரஸ்தானகம் 'ப்ரஸரம்' என்னும் நாட்டியத்திலும், முக நாட்டியம் என்னும் ஆரம்ப நர்த்தனத்திலும் பயன்படும்.

१९. पार्ष्णिपीडम् ।

कलशाभिधनाट्यस्य शब्दानुसरणक्रमे ।
पार्ष्णिपीडस्थानकं तत् कीर्तितं भरतक्रमे ॥ ३८८ ॥

19. PĀRṢṆIPĪḌAM

(388) Pārṣṇipīḍa Sthānaka is used in Kalas'a Nāṭya while following the s'abda or syllables.

19. பார்ஷ்ணிபீடம்

(388) பார்ஷ்ணிபீட ஸ்தானகம் கலச நாட்டியத்தில் சொல்லுக்கட்டுகளுக்கு இசைய நர்த்தனம் செய்கையில் உபயோகப்படும்.

२१. एकजानु ।

तपोधुर्यस्य नटने ह्येकजानु निगद्यते ।

21. ĒKAJĀNU

(389) Ēkajānu Sthānaka is used to show severe penance.

**21. ஏகஜானு**

*(389) ஏகஜானு ஸ்தானகம் கடுந்தவத்தைக் குறிப்பிடுவதற்குப் பயன்படும்.*

**२५. ब्राह्मम् ।**

**प्रेरण्यां स्थानकं ब्राह्मं कथ्यते भरतार्थगैः ॥ ३८९ ॥**

25. BRĀHMA

Brāhma Sthānaka is used in Pērani dance.

**25. ப்ராம்ஹம்**

*ப்ராம்ஹ ஸ்தானகம் பேரணி நாட்டியத்தில் உபயோகப்படும்.*

**२७. शैवम् ।**

**मयूरीगतिभेदे च योगाभ्यासे च कथ्यते ।**
**शैवाभिधस्थानकं तु तत्तत्कर्मविशारदैः ॥ ३९० ॥**

27. S'AIVA

(390) S'aiva Sthānaka is used in Mayūri Gati or the pea-cock steps and in the practice of yoga.

**27. சைவம்**

*(390) சைவ ஸ்தானகம் மயூரகதி (மயிலின் நடை) யிலும், யோகாப்பியாசத்திலும் உபயோகப்படும்.*

**२८. गारूडम् ।**

**सर्पाहरणमन्त्रे च धनुश्शास्त्रानुमेळने ।**
**गारुडस्थानकं प्रोक्तं करयोगविशारदैः ॥ ३९१ ॥**

## 28. GĀRUḌA

(391) Gāruḍa Sthānaka is used during incantations for forcibly dragging serpents and during the use of bow or other weapons.

## 28. காருடம்

*(391) காருட ஸ்தானகம் சர்ப்பங்களைக் கட்டும் மந்திர ப்ரயோகம் செய்கையிலும், வில் முதலிய ஆயுதங்களைப் பிரயோகிக்கையிலும் பயன்படும்.*

## २९. समसूची ।

नाट्यशिक्षासु संप्रोक्तं स्थानकं समसूचिकम् ।

## 29. SAMA SŪCI

(392) Sama Sūci is used in dance lessons.

## 29. ஸமஸூசி

*(392) ஸமஸூசி ஸ்தானகம் நாட்டியப் பயிற்சியில் உபயோகப்படும்.*

## ३१. कूर्मासनम् ।

परमानन्दनिष्ठस्य योगिनो नाट्यभावने ॥ ३९२ ॥
कूर्मासनं परिज्ञेयं सर्वशास्त्रानुसारिभिः ।

## 31. KŪRMĀSANA

(392–393) Kūrmāsana Sthānaka is used in personating the yogi known as Paramānanda Niṣṭha (well settled in supreme bliss).

## 31. கூர்மாஸனம்

*(392–393) கூர்மாஸனம் பரமானந்தநிஷ்டை என்ற*

யோகாசனத்தைக் காட்டுவதில் உபயோகப்படும்.

## ३२. नागबन्धम् ।

मयूरगतिभेदे स्यान्नागबन्धसमाह्वयम् ॥ ३९३ ॥
इत्येवं स्थानकानां तु संगृह्य कथितं मया ।
लक्षणं नाट्यभावेषु युज्यते योजनापरैः ॥ ३९४ ॥

इति स्थानकप्रयोगः ॥

## 32. NĀGABANDHA

(393–394) Nāgabandha Sthānaka is used in Mayūri gati (the peacock's gait).

Thus far the uses of Sthānakas[1] have been explained.

## 32. நாகபந்தம்

*(393–394) நாகபந்த ஸ்தானகம் மயூரகதி (மயில் நடை) யில் பயன்படும்.*

***இதுவரை நிற்கும் நிலைகளின்[2] உபயோகங்கள் விவரிக்கப்பட்டன.***

---

1. The uses of seven of the Sthānakas namely (14) Sāmyapāda (20) Ēkapārśva (22) Parivṛtta (23) Pṛṣṭhōttāna (24) Ēkapāda (26) Vaiṣṇava and (30) Viṣama Sūci are not given in the text.

2. *(14) ஸாம்யபாதம் (20) ஏகபார்ச்வம் (22) பரிவ்ருத்தம் (23) ப்ருஷ்டோத்தானம் (24) ஏகபாதம் (26) வைஷ்ணவம் (30) விஷமஸூசி என்ற ஏழு நிற்கும் நிலைகளின் உபயோகங்கள் நூலில் காணப்படவில்லை.*

## संकरहस्ताः ।

### १. कांगूलः ।

वक्ष्ये संकरहस्तानां हस्तयोगानुसारणं ।
कांगुलोऽधोमुखो यत्र गोस्तने द्राक्षके भवेत् ।। ३९५ ।।
ऊर्ध्वाननो यदि स तु ख्यातश्शांताभिधे रसे ।

## MISCELLANEOUS USES OF HANDS

(395–396) Hands used for miscellaneous representations are now described :—

### 1. KĀṄGŪLA

When Kāṅgūla Hasta (Asamyuta Hasta No. 19) is held facing downwards, then it denotes the teats of the cow or a bunch of vines. When it faces upward it indicates S'ānta Rasa (peaceful mood).

## ஹஸ்தங்களின் பலவகை உபயோகங்கள்.

*(395–396) முத்திரைகளின் பலவகை உபயோகங்கள் இங்கு விவரிக்கப்படுகின்றன :—*

### 1. காங்கூலம்

*காங்கூல ஹஸ்த (அஸம்யுத ஹஸ்தம் நெ. 19)த்தை கீழ் நோக்கிப் பிடித்தால் பசுவின் மடியையும் திராக்ஷைப் பழத்தையும் குறிக்கும். இந்த முத்திரையை மேல்நோக்கிப் பிடித்தால் சாந்த ரஸத்தைக் குறிக்கும்.*

### २. पद्मकोशः ।

पद्मकोशोऽप्यूर्ध्वभागगामी चेद्रथभावने ।। ३९६ ।।

## 2. PADMAKŌS'A

(396) When Padmakōs'a (Asamyuta Hasta No. 14) Hasta looking upward is raised, then it denotes a chariot (heavenly chariot).

### 2 பத்மகோசம்

*(396) பத்மகோச முத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 14) யைமேல் நோக்கி வைத்துக்கொண்டு உயர்த்தினல் அது மேலே செல்லும் (தேவலோக) ரதத்தைக் குறிக்கும்.*

## ३. सूची।

पश्चात् प्रसारितस्सूची यच्छब्दे पुरतो यदि ।
वीक्षणेऽपि च तच्छब्दे नञ्जर्थेप्यूर्ध्वचारितः ॥ ३९७ ॥

एतौ वक्त्रास्यभावेन युक्तौ चेत्तु विरोधके ।
एतौ मूलं समाश्लिष्टौ युज्यते सिद्धिभावने ॥ ३९८ ॥

सूचीकरो निश्चलश्चेत् ऊर्ध्वे नासार्थके भवेत् ।
वामभागाद्दक्षिणांगमाश्रितः सूचिकः करः ॥ ३९९ ॥

अवकुण्ठेऽपिधानेऽपि कविभिर्युज्यते क्रमात् ।
ताटङ्कार्थे युज्यतेऽसौ सूची कर्णे तु संभ्रमः ॥ ४०० ॥

कूपार्थे युज्यते सूची करस्सोऽयमधोमुखः ।

## 3. SŪCI

(397–401) Sūcī mudra (Asamyuta Hasta No. 13) extended backward denotes the relative 'who' or 'which', and if it is extended forward, then it denotes the correlative 'he' or 'that' or the act of looking at an object. When it is raised up and moved towards

the side, it denotes a negative. It denotes opposition when it is coupled with the face indicating the attitude. When the mudras in both hands are joined at their roots, then it denotes success. When Sūcī is raised up and held motionless, it denotes the nose. When it is moved from the left side to the right, it denotes covering of one's head or covering anything in general. If it is rotated at the ear it denotes the ear-ornament. When it is held pointing downward, then it denotes graciousness.

### 3. ஸூசி

*(397–401)* ஸூசி ஹஸ்த (அஸம்யுத ஹஸ்தம் செ. 13)த்தைப் பின்புறமாக நீட்டிப் பிறகு நேராகப் பார்த்துக் கொண்டு முன்புறமாக நீட்டினால் 'யாரோ அவர்' 'எதுவோ அது' என்ற பொருளைக் குறிக்கும். முன்னே நீட்டினால் ஒரு வஸ்துவைப் பார்ப்பதையும் குறிக்கும். இந்த முத்திரையை மேல் நோக்கி உயர்த்தினால் எதிர்மறைப்பொருளைக் குறிக்கும். எதிர்ப்பைக் குறிக்கும் முகபாவத்தோடு இந்த முத்திரையைப் பிடித்தால் எதிர்ப்பைக் குறிக்கும். இந்த முத்திரையோடு கூடிய இரு கைகளையும் அடிப்புறத்தில் ஒன்று சேர்த்தால் காரிய சித்தியைக் குறிக்கும். இந்த முத்திரையை மேலே உயர்த்தி அசைக்காமல் பிடித்தால் அது மூக்கைக் குறிக்கும். ஸூசீ ஹஸ்தத்தை இடது பக்கத்திலிருந்து வலது பக்கத்திற்குக் கொண்டு சென்றால் தலையை மூடிக்கொள்வதையும், சாதாரணமாக ஒரு பொருளை மூடுவதையும் குறிக்கும். காதருகே இந்த முத்திரையைச் சுழற்றினால் அது காதணியைக் குறிக்கும். இதைக் கீழ்நோக்கிப் பிடித்தால் அருளைக் குறிக்கும்.

### ४. अर्धचन्द्रः ।

**अर्धचन्द्रकरस्सोऽयं ऊर्ध्वगो यदि चंद्रकः ॥ ४०१ ॥**

## 4. ARDHACANDRA

(401) When Ardhacandra Hasta (Asamyuta Hasta No. 6) is raised upward then it shows the moon rising up the sky.

### 4. அர்த்த சந்திரம்

*(401) அர்த்த சந்திர ஹஸ்த (அஸம்யுத ஹஸ்தம் நெ. 6)த்தோடு கூடிய கையை மேலே கொண்டு சென்றால் அது ஆகாயத்தில் சந்திரன் கிளம்புவதைக் குறிக்கும்.*

## ५. अरालः ।

अरालोऽलिकगामी चेद्भ्रूवल्ल्यां च नियुज्यते ।
आननाभिमुखश्चेत्स अधरार्थे नियुज्यते ॥ ४०२ ॥

## 5. ARĀLA

(402) When the Arāḷa mudra (Asamyuta Hasta No. 7) is moved along the fore-head, then it denotes the eye brow. When it is moved in front of the mouth it denotes the lips.

### 5. அராளம்

*(402) அராள முத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 7) யை நெற்றிக்கு அருகே அசைத்தால் புருவங்களைக் குறிக்கும். வாய்க்கெதிராக அசைத்தால் உதடுகளைக் குறிக்கும்.*

## ६. रेखाहस्तः ।

मध्यमा केवलं वक्रा शेषाश्चैव प्रसारिताः ।
रेखाभिधानो हस्तस्स्यात्तन्निरूपणमुच्यते ॥ ४०३ ॥

गजानामानने युक्तं कर्मध्याननिरूपणे ।
रेखाभिधानहस्तोऽयं युज्यते योगवेदिभिः ॥ ४०४ ॥

## 6. RĒKHĀ HASTA

(403–404) When the middle finger is bent and the other fingers are stretched out then it is called Rēkhā Hasta. This is used to denote the face of elephants and in deep thought about a course of conduct.

## 6. ரேகா ஹஸ்தம்

*(403–404)* நடுவிரல் மடக்கப்பட்டு மற்ற விரல்கள் நீட்டப்பட்டால் அது ரேகா ஹஸ்தமாகும். இந்த ஹஸ்தம் யானை முகத்தைக் குறிப்பிடுவதற்கும், ஒரு காரியத்தைப் பற்றி ஆழ்ந்து சிந்திப்பதைக்குறிப்பிடுவதற்கும் உபயோகப் படுகிறது.

## ७. मुष्टिः ।

मुष्टिश्चिबुकगामी च चुबुके श्मश्रुभावने
युज्यते कविभिस्सोयं करकर्मविशारदैः ॥ ४०५ ॥
मुष्टिस्त्वलिकगामी चेत् काकपक्षे नियुज्यते ।

## 7. MUṢṬI

(405–406) When Muṣṭi Hasta (Asamyuta Hasta No 9) is placed at the chin then it denotes either the chin or the beard. When it is held near the fore-head it denotes the side-locks of hair which adorn a boy's temples.

## 7. முஷ்டி

*(405–406)* முஷ்டி ஹஸ்த (அஸம்யுத ஹஸ்தம் நெ. 9)த்தை முகவாய்க்கட்டைக்கருகே வைத்தால் முகவாய்க்

கட்டையையோ அல்லது தாடியையோ குறிக்கும். நெற்றிக்கருகே இந்த முத்திரையைப்பிடித்தால் இது சிறுவர்கள் அழகாக வைத்துக்கொள்ளும் 'காகபக்ஷம்' என்னும் 'ஜில்பா' வைக்குறிக்கும்.

## ८. पताकः ।

पताको निश्चलाकारो सवितुश्चेत्तदूर्ध्वके ॥ ४०६ ॥

ज्योतिश्शास्त्रविचारेऽपि युज्यते ह्युचितार्थगैः ।
अन्योन्याभिमुखौ कट्यां पताकाभिधहस्तकौ ॥ ४०७ ॥

योगपट्यां वल्कलस्य भावनायां च युज्यते ।
कटिदेशादूरुयुग्ममध्यस्थौ चेत्पताककौ ॥ ४०८ ॥

पर्णाम्बरे पिंछरूपवसनेऽपि च युज्यते ।

## 8. PATĀKA

(406–410) When Patāka (Asamyuta Hasta No. 1) is held steadily up facing the sun and raised, it denotes astronomical studies. If the hands holding Patāka mudra are held facing each other at the hip, they denote the cloth-belt used by yogis or the cloth made of tree-bark. If the Patāka hands are taken down from the hip to the middle of the thighs, they denote clothing made of leaves or of peacock feathers.

## 8. பதாகம்

(406–410) பதாக ஹஸ்த (அஸம்யுத ஹஸ்தம் நெ. 1)த்தைச் சூரியனை நோக்கி உயர்த்தி அசைக்காமல் பிடித்தால் அது வானசாஸ்திர ஆராய்ச்சியைக் குறிக்கும். பதாக முத்திரையோடு கூடிய இரு கைகளையும் ஒன்றையொன்று

பார்த்திருக்கும்படி இடுப்பில் வைத்துக்கொண்டால் அது யோகிகள் அணியும் 'யோகபட்டி' யையும் மரஉரியையும் குறிக்கும். இந்த முத்திரையோடுகூடிய கைகளை இடுப்பில் இருந்து துடையின் மத்தியபாகம் வரையில் கொண்டு சென்ருல் இலைகளினுலோ அல்லது மயில் தோகையினுலோ செய்யப்பட்ட ஆடையைக் குறிப்பிடும்.

## ९. सर्पशीर्षः ।

सर्पहस्तोऽप्यूर्ध्वलोलौ सीमन्तार्थे नियुज्यते ॥ ४०९ ॥

## 9. SARPAS'ĪRṢA

(409) When Sarpas'īrṣa Hasta (Asamyuta Hasta No. 16) is held up and moved sideways (near the head) it denotes the parting of hair.

### 9. ஸர்ப்பசீர்ஷம்

*(409) ஸர்ப்பசீர்ஷ முத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 16) யை உயரத்தூக்கி இரு பக்கங்களிலும் (தலைக் கருகே) அசைத்தால் வகிடு வளர்த்திருப்பதைக் குறிக்கும்.*

## १०. अलपद्मः ।

किरीटार्थे युज्यतेऽसौ ह्यूर्ध्वगो ह्यलपद्मकः ।
अधोमुखः पादतश्चेत् मूर्ध्नि केशे नियुज्यते ॥ ४१० ॥
स एव भुजगामी चेत् भुजभावेन युज्यते ।
अलपद्मः कर्णगश्चेत् कचर्यर्थे नियुज्यते ॥ ४११ ॥

## 10. ALAPADMA

(410–411) When Alapadma Hasta (Asamyuta Hasta No. 20) is held over the head, it denotes a crown. When it is brought down from the head towards the

feet, it denotes the tresses of hair. When it is taken along the arms it indicates the arms. When it is held near the ear it denotes the plaited hair.

### 10. அலபத்மம்

*(410–411) அலபத்ம ஹஸ்த (அஸம்யுத ஹஸ்தம் நெ. 20) த்தைத்தலைக்கு மேலே பிடித்தால் மகுடத்தைக் குறிக்கும். இந்த முத்திரையைத் தலையிலிருந்து கால்வரை யில் கொண்டுவந்தால் கூந்தலைக்குறிக்கும். புஜங்களின் மேலே இந்த முத்திரையோடு கூடிய கையை வைத்தால் புஜங்களைக் குறிக்கும். காதுக்கருகே இந்த முத்திரையைப் பிடித்தால் பின்னி முடிந்த கூந்தலைக்குறிப்பிட உபயோகப் படும்.*

### ११. हंसपक्षः ।

अलके युज्यते हंसो वामाद्दक्षिणकर्णगः ।
कटिस्थौ हंसहस्तौ चेदंबरार्थे नियुज्यते ॥ ४१२ ॥

सीमन्तदेशादलिकगामी चेद्धंसहस्तकः ।
ललंतिकार्थे युज्येत कविभिर्योजनापरैः ॥ ४१३ ॥

युज्यते हस्ततत्वार्थवेदिभिर्नटने भवेत् ।
वामांसाद्धंसहस्तोऽयं तिरश्चीनत्वमाश्रितः ॥ ४१४ ॥

उपवीतेऽपि वै कक्षे यंत्रभेदेऽपि युज्यते ।

### 11. HAMSAPAKṢA

(412–415) When Hamsapakṣa Hasta (Asamyuta Hasta No. 24) is taken from the left ear to the right it denotes the locks of hair. When Hamsapakṣa in both hands are placed at the hip, then it denotes the cloth that is worn. When it is taken from the parting of hair to the forehead then it denotes the wearing of

a necklace. When Hamsapakṣa is placed just over the left shoulder and taken down across the body, it denotes the wearing of the sacred thread. If both the hands holding the mudra are placed at the arm-pits, it denotes the breaking of bonds.

### 11. ஹம்ஸபக்ஷம்

*(412–415) ஹம்ஸபக்ஷ முத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 24) யை இடது காதிலிருந்து வலது காதுவரை கொண்டு சென்றால் கூந்தலைக் குறிப்பிடும். இந்த முத்திரையோடுகூடிய கைகளை இடுப்பில் வைத்துக்கொண்டால் ஆடையைக் குறிக்கும். வகிட்டிலிருந்து நெற்றிவரையில் இந்த முத்திரையைக்கொண்டு சென்றால் சங்கிலி முதலிய ஆபரணங்கள் அணிவதைக் குறிக்கும். இந்த முத்திரையை இடது புஜத்தின் மேலிருந்து உடம்பின் குறுக்காகக் கொண்டு சென்றால் பூணூலைக்குறிக்கும். இந்த முத்திரையோடுகூடிய கைகளைக் கக்கத்தில் வைத்துக்கொண்டால் கட்டுத்தளைகளை அறுப்பதைக் குறிக்கும்.*

### १२. नखहंसः ।

**तर्जनी सर्वपर्वे स्यात् अङ्गुष्ठोऽन्ये प्रसारिताः ॥ ४१५ ॥**

**नखहंस इति ख्यातः करः करविचक्षणैः ।**
**वैडूर्यवज्ररूपे च नखार्थे नासिकामणौ ॥ ४१६ ॥**

### 12. NAKHAHAMSA

(415–416) When the thumb is in contact with all the joints of the first finger, and the other fingers are stretched out, the mudra is called 'Nakhahamsa'.

It is used to indicate precious stones like diamond etc., the nails, or the gem in the nose ornaments,

### 12. நக ஹம்ஸம்

*(415-416)* கட்டைவிரல் ஆள்காட்டிவிரலின் எல்லா கணுக்களையும் தொட்டுக்கொண்டு, மற்ற விரல்கள் விரித்து நீட்டப்பட்டு இருந்தால் அதற்கு 'நகஹம்ஸ ஹஸ்தம்' என்று பெயர்.

இது வைரம் போன்ற விலையுயர்ந்த கற்களைக் காட்டவும், நகங்களைக் குறிப்பிடவும், மூக்கில் அணியும் ஆபரணத்திலுள்ள ரத்தினத்தைக் குறிப்பிடவும் உபயோகப்படும்.

### १३. मृगशीर्षः ।

**कर्णद्वयांतिकगतौ मृगशीर्षकरौ यदा ।**
**कर्णद्वयार्थे युज्येते यदि वक्त्रेऽश्रुभावने ॥ ४१७ ॥**
**मृगशीर्षौ श्लिष्टमुखौ वक्षसोऽष्टाङ्गुलिस्थितौ ।**
**प्राकारेऽपि च कासारे क्रीडावाप्यां च युज्यते ॥ ४१८ ॥**

### 13. MṚGASĪRṢA

(417–418) When Mṛgasīrṣa Hasta (Asamyuta Hasta No. 17) in both hands is placed at the ears, they denote the ears, and when it is placed near the mouth it denotes the shedding of tears. When Mṛgasīrṣa Hastas in both hands face each other and are in contact, eight inches away from the chest, it denotes a surrounding enclosure or a lake or a pleasure tank.

### 13. ம்ருகசீர்ஷம்

*(417-418)* ம்ருகசீர்ஷ முத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 17) யோடுகூடிய இரு கைகளையும் காதுகளுக்கருகே வைத்தால் காதுகளைக் குறிக்கும். வாய்க்கருகே இந்த ஹஸ்தத்தை வைத்துக்கொண்டால் கண்ணீர் விடுவதைக்குறிக்கும். ம்ருகசீர்ஷ முத்திரையோடு கூடிய இரு

கைகளையும் ஒன்றுக்கொன்று எதிராகச்சேர்த்து மார்புக்கெதிரே 8 அங்குல தூரத்தில் வைத்துக்கொண்டால் பிராகாரத்தையும், ஏரியையும், ஜலக்ரீடைக்கான குளத்தையும் குறிப்பிட உபயோகப்படும்.

## १४. अर्धमृगशीर्षः ।

अनामिका चेत् विश्लिष्टा मृगशीर्षस्य हस्तके ।
नाम्नाऽर्धमृगशीर्षश्च तस्य भावमिहोच्यते ॥ ४१९ ॥
बालस्त्रीणां भावनासु सांत्वार्थे विनियुज्यते ।

## 14. ARDHA MṚGAS'ĪRṢA

(419–420) When in the Mṛgas'īrṣa Hasta (Asamyuta Hasta No. 17) the ring-finger is also separated, then it is called Ardha Mṛgas'īrṣa.

It is used for personating a young woman and when using pacifying words.

### 14. அர்த்த ம்ருகசீர்ஷம்

*(419–420)* ம்ருகசீர்ஷ ஹஸ்தத் (அஸம்யுத ஹஸ்தம் நெ. 17) தில் மோதிர விரலையும் பிரித்து நீட்டினால் அதற்கு 'அர்த்த ம்ருகசீர்ஷ ஹஸ்தம்' என்று பெயர். இது ஒரு யுவதியைக் குறிப்பிடவும், சமாதானப்படுத்தும் வார்த்தைகளை உபயோகிக்கும்பொழுதும் பயன்படும்.

## १५. वयोविशेषहस्ताः ।

मृगशीर्षो बालभावे कौमारे शिखरो भवेत् ॥ ४२० ॥
अलपद्मो हंसहस्तो यौवने चलितो यदि ।
मुकुलो विरळीभूतो वक्षसो यदि वार्धके ॥ ४२१ ॥
युज्यते योगकुशलैस्संकरक्रमवेदिभिः ।

## 15. HANDS SHOWING THE FOUR STAGES OF LIFE

(420–422) Mṛgaśīrṣa Hasta (Asamyuta Hasta No. 17) is used to denote infancy, Śikhara Hasta (Asamyuta No. 10) is used to denote boyhood, either Alapadma Hasta (Asamyuta No. 20) or Hamsapakṣa Hasta (Asamyuta No. 24) held with a shake is used to denote youth, and Mukuḷa Hasta (Asamyuta No. 26) with the fingers separated held at the chest is used to denote old age.

## 15. மனிதன் ஆயுளில் நான்கு பருவங்களைக் குறிக்கும் முத்திரைகள்

*(420–422) குழந்தைப் பருவத்தைக் குறிக்க ம்ருக சீர்ஷ ஹஸ்தத் (அஸம்யுதம் நெ. 17) தையும், குமரப்பரு வத்தைக்குறிக்க சிகர முத்திரை (அஸம்யுதம் நெ. 10) யையும், யௌவனப் பருவத்தைக்குறிக்க அலபத்ம ஹஸ் தத் (அஸம்யுதம் நெ. 20) தையோ அல்லது ஹம்ஸபக்ஷ ஹஸ்தத் (அஸம்யுதம் நெ. 24) தையோ அசைத்து உபயோகிக்கவேண்டும். முகுள ஹஸ்தத் (அஸம்யுதம் நெ. 26) தில் விரல்களைப் பிரித்து மார்புக்கருகே பிடித்தால் வயோதிகப்பருவத்தைக் குறிக்கும்.*

## १६. वर्णविशेषहस्ताः ।

पताकाख्ये करेऽङ्गुष्ठः कनिष्ठामूलसंस्थितः ॥ ४२२ ॥

पताकश्चतुरस्रोऽयं तन्निरूपणमुच्यते ।
आनने श्वेतवर्णेऽपि सूपार्थेऽपि नियुज्यते ॥ ४२३ ॥

ताम्रचूडकरास्तिर्यग्गामी चेदरुणो भवेत् ।
तिरश्चीनः पताकश्चेत् पीतवर्णे नियुज्यते ॥ ४२४ ॥

तिरश्चीनः सिंहमुखः श्यामले परियुज्यते ।
संदंशश्च तिरश्चीनो नीलवर्णेऽपि युज्यते ॥ ४२५ ॥

## 16. HANDS USED TO DENOTE THE COLOURS

(422–425) Patāka Catura, (i. e.,) Patāka (Asamyuta No. 1) with the thumb at the foot of the little finger is used to denote the white colour. It is also used to denote the face or to indicate ḍhāl.

If Tāmracūḍa Hasta (Asamyuta No. 27) is held obliquely it denotes red colour.

When Patāka (Asamyuta No. 1) is held obliquely it denotes the yellow colour.

When Simhamukha Hasta (Asamyuta No. 18) is shown, it denotes the dark-green colour.

Sandams'a Hasta (Asamyuta No. 25) when held obliquely denotes the blue colour.

## 16. வர்ணங்களைக் குறிக்கும் ஹஸ்த முத்திரைகள்

(422–425) பதாக முத்திரையில் கட்டைவிரல் சுண்டு விரலின் அடிப்பாகத்தைத் தொட்டால் அதற்குப் 'பதாக சதுரம்' என்று பெயர். இந்த முத்திரையை வெளுப்பு வர்ணத்தைக் காட்டுவதற்கும், முகத்தைக் குறிப்பிடவும் பருப்பு வகைகளைக் குறிப்பிடவும் உபயோகிக்கலாம்.

தாம்ரசூட முத்திரையை (அஸம்யுத நெ. 27) குறுக்காகப்பிடித்தால் அது சிவப்பு வர்ணத்தைக்குறிக்கும்.

பதாகத்தைக் குறுக்காகப் பிடித்தால் அது மஞ்சள் வர்ணத்தைக்குறிக்கும்.

ஸிம்ஹமுக ஹஸ்தத்தை (அஸம்யுத நெ. 18) குறுக்காகப்பிடித்தால் கறுத்த பச்சையைக் குறிக்கும்.

ஸந்தம்ச ஹஸ்தத்தை (அஸம்யுத நெ. 25) குறுக்காகப்பிடித்தால் நீல வர்ணத்தைக்குறிக்கும்.

## १७. जातिहस्ताः ।

चतुरोऽभिमुखीभूतो ब्राह्मणार्थे नियुज्यते ।
अंसदेशं पताकाग्रभागेनैव प्रदर्शयेत् ॥ ४२६ ॥

क्षत्रियार्थे भुजार्थेऽपि जयलक्ष्मीप्रदर्शने ।
तूणीरार्थेऽपि पृष्ठस्थपुरुषस्य निदर्शने ॥ ४२७ ॥

पताकयाऽप्यूरुदेशं दर्शयेद्वैश्यभावने ।
जङ्घां प्रदर्शयेच्छूद्र हस्तेनार्धपताकया ॥ ४२८ ॥

इत्यर्थेषु नियुज्यन्ते नाट्यकर्मविशारदैः ।
हस्ता बहुविधास्सन्ति सङ्करा भरतार्णवे ।
सुमते तत्तु संक्षिप्य भवदर्थं मया कृतम् ॥ ४२९ ॥

इति श्रीनन्दिकेश्वरविरचिते भरतार्णवे सुमतिबोधके स्थानाभियोगसहित-
सङ्करहस्तप्रकरणं नाम षष्ठोऽध्यायः ॥

---

## 17. HANDS SHOWING THE FOUR CASTES [1]

(426—429) When Catura Hasta (Asamyuta No. 21) is shown facing oneself, it denotes the Brahmin.

When the shoulder is pointed out by Patāka mudra it denotes a Kṣatriya. It is also used to denote the

shoulder and Jayalakṣmi or the goddess of victory, the quiver or a person at the back.

When Patāka Mudra points to the thigh it denotes the Vais'ya.

When the foot is pointed out by Ardha Patāka (Asamyuta No. 3) it denotes the S'ūdra.

Here ends Chapter VI of Bharatārṇava of Nandikēśwara addressed to Sumati dealing with the use of standing postures and the miscellaneous uses of the mudras of the hand.

---

## 17. ஜாதிகளைக்குறிக்கும் முத்திரைகள் [2]

*(426–429)* சதுரஹஸ்த (அஸம்யுதம் நெ. 21) முத்திரையைத் தன்னை நோக்கிப்பிடித்தால் பிராம்மண ஜாதியைக் குறிக்குட்.

பதாகமுத்திரையின் நுனியால் தோளைச்சுட்டிக் காட்டினுல் க்ஷத்திரிய ஜாதியைக்குறிக்கும்; அல்லது புஜத்தையோ, ஜெயலக்ஷ்மியையோ, அம்புறுத்தூணியையோ, பின்புறமுள்ள ஒருவரையோ குறிக்கும்.

பதாக முத்திரையால் துடையைச் சுட்டிக்காட்டினுல் வைசிய ஜாதியைக்குறிக்கும்.

---

1. In the account of creation contained in the Purusha Sukta the four castes are said to be created from the Lord's Face, Shoulders, Thighs and Feet respectively.

2 ருக்வேதத்தில் புருஷ ஸூக்தம் எனும் பகுதியில் பிரம்ம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரர் என்னும் நான்கு வர்ணங்களும் சிருஷ்டிகர்த்தாவின் முகம், தோள்கள், துடை, பாதங்களிலிருந்து உண்டானதாக வர்ணிக்கப் பட்டிருக்கிறது.

அர்த்தபதாக (அஸம்யுதம் நெ. 3) முத்திரையால் பாதத்தைச் சுட்டிக்காட்டினால் சூத்ரஜாதியைக் குறிக்கும்.

இதனோடு ஸுமதிக்கு நந்திகேசுவரர் அருளிச்செய்த பரதார்ணவம் என்ற நூலில் ஸ்தானகங்களின் உபயோகங்களையும் ஹஸ்த முத்திரைகளின் பலவகை உபயோகங்களையும் விவரிக்கும் ஆருவது அத்தியாயம் முற்றுப்பெற்றது.

---

सप्तमोऽध्यायः ।

तालप्रकरणम् ।

तालाङ्गनामानि ।

अतः परं प्रवक्ष्यामि तालानां निर्णयं क्रमात् ।
अर्धमात्रं द्रुतं व्योम व्यञ्जनं बिन्दुकं तथा ॥ ४३० ॥
तारकं नयनं प्रोक्तं वृत्तं नाम यथाक्रमात् ।
मात्रकं सरलं ह्रस्वं व्यापकं चेषु दारितं ॥ ४३१ ॥
एतानि लघुनामानि कीर्त्यन्ते तालवेदिभिः ।
वक्रो गुरुश्चन्द्रजन्मा गुरुनामान्यथ क्रमात् ॥ ४३२ ॥
सामोद्भवं प्लुतं दीप्तं त्र्यङ्गं स्यात्प्लुतनामनि ।
हंसपादश्च निश्शब्दश्चतुर्मात्रोऽयमिष्यते ॥ ४३३ ॥
विरामश्चरणश्चैव बन्धमङ्घ्रि पदं त्रुटि ।

## CHAPTER VII

## THE TĀLAS

### THE NAMES OF THE ANGAS (CONSTITUENT PARTS) OF TĀLAS

(430—434) Tālas are next dealt with.

The constituent parts of Tālas are :—(1) Druta (2) Laghu (3) Guru (4) Pluta (5) Kākapāda or Hamsapāda and (6) Virāma.

The other names of these parts are :—

### 1. DRUTA

Druta is called (1) Ardha Mātra (half a short vowel) (2) Vyōma (3) Vyañjanam (mark) (4) Bindukam (the droplet) (5) Tārakam (the star) (6) Nayanam (the eye) (7) Vṛttam (circle).

### 2. LAGHU

Laghu is called (1) Mātrakam (one mātra) (2) Saralam (the easy one) (3) Hrasvam (the short vowel) (4) Vyāpakam (universal) (5) Iṣu (the arrow) and (6) Dāritam (cleavage).

### 3. GURU

Guru is called (1) Vakra (the crooked) and (2) Candra-janma (part of moon).

### 4. PLUTA

Pluta is called (1) Sāmōdbhava (born of Sāma Vēda) (2) Dīptam (lengthened) and (3) Tryaṅgam (of three parts).

### 5. HAMSA PĀDA

Hamsa pāda or kāka pāda is called (1) Nis'sabda (soundless) and (2) Catur mātra (of four mātras).

### 6. VIRĀMA

Virāma is called (1) Caraṇam (the foot) (2) Ban-

dham (the knot) (3) Aṅghri (foot) (4) Pādam (foot) and (5) Truṭi (a trice).

அத்தியாயம் 7

## தாளங்களைப்பற்றியது

### தாள அங்கங்களின் வேறு பெயர்கள்

(430–434) இனி தாளங்கள் விவரிக்கப்படுகின்றன. தாளங்களின் அங்கங்கள் பின் வருமாறு :—

(1) த்ருதம் (2) லகு (3) குரு (4) ப்லுதம் (5) காக பதம் அல்லது ஹம்ஸபதம் (6) விராமம்.

இவைகளின் மறுபெயர்களாவன :—

### 1. த்ருதம்

இதற்கு 1. அர்த்த மாத்ரா (அரை மாத்திரை) 2. வ்யோமம் (ஆகாயம்) 3. வ்யஞ்ஜனம் (அடையாளம்) 4. பிந்துகம் (ஒரு துளி) 5. தாரகம் (நட்சத்திரம்) 6. நயனம் (கண்) 7. வ்ருத்தம் (வட்டம்) என்று பெயர்.

### 2. லகு

இதற்கு 1. மாத்ரகம் (ஒரு மாத்திரை) 2. ஸரளம் (சுலபமானது) 3. ஹ்ரஸ்வம் (குறில்) 4. வ்யாபகம் (பரவியுள்ளது) 5. இஷு (அம்பு) 6. தாரிதம் (கீற்று) என்று பெயர்.

### 3. குரு

இதற்கு 1. வக்ரம் (வளைவு) 2. சந்திரஜன்மா (சந்திரன் பகுதி) என்று பெயர்.

### 4. ப்லுதம்

இதற்கு 1. ஸாமோத்பவம் (ஸாமவேதத்தினின்று

உண்டானது) 2. திப்தம் (நீட்டப்பட்டது) 3. திரியங்கம் (மூன்று பாகங்களையுடையது) என்று பெயர்.

5. ஹம்ஸபாதம் அல்லது காகபாதம்

இதற்கு 1. நிச்சப்தம் (ஓசை இல்லாதது) 2. சதுர் மாத்ரா (நான்கு மாத்திரைகளையுடையது) என்று பெயர்.

6. விராமம்

இதற்கு 1. சரணம் (பாதம்) 2. பந்தம் (முடிச்சு) 3. அங்க்ரி (பாதம்) 4. பதம் (பாதம்) 5. த்ருடி (துடி) என்று பெயர்.

## तालाङ्गस्य घातादिप्रकारः ।

द्रुतस्य द्रुतमाख्यातं लघोः स्यात् एकघातकम् ॥ ४३४ ॥
गुरोर्घाताद्विसर्गश्च कीर्तितं भरतादिभिः ।
प्लुतस्य च समापीड्य घाताद्भूमिं विसर्जयेत् ॥ ४३५ ॥
पार्श्वे पार्श्वे चोर्ध्वमध्ये हंसपादस्य निर्णयः ।

## RULES FOR STROKES Etc OF TĀLA AṄGAS

(434–436) For the Druta, a quick stroke is prescribed, for the Laghu a single stroke, and for the Guru a stroke and a release are laid down. For Pluta, the hands have to be pressed after the stroke and then released. For the Hamsa pāda, the hand is waved on both sides and then raised and brought down to the middle position.

## தாள அங்கங்களுக்கான தட்டு, வீச்சு, முதலியன

(434–436) த்ருதத்திற்கு வேகமாகத்தட்ட வேண்டும். லகுவுக்கு ஒரு தட்டு, குருவுக்கு ஒரு தட்டும் வீச்சும்

ப்லுதத்திற்கு ஒரு தட்டுக்குப்பிறகு கையை ஒரு தடவை அமுத்திப்பின்னர் வீசவேண்டும். ஹம்ஸபாதத்துக்கு இரு புறமும் கையை வீசி மேலே உயர்த்தி நடுவே கொண்டு வந்து நிறுத்தவேண்டும்.

## विरामनियमः ।

लघुद्रुतद्वयोश्चापि विरामः परियुज्यते ॥ ४३६ ॥

## THE POSITION OF VIRĀMA

(436) Virāma [1] is allowed only after Laghu and Druta.

### விராமத்தைப்பற்றிய விதி [2]

*(436) லகுவுக்கும் த்ருதத்திற்கும் பிறகே விராமம் பிரயோகிக்கப்படும்.*

---

1. Virama is an extension of Laghu or Druta for a more graceful finish. The time of extension is not measured strictly but given a slight latitude for the sake of graceful finish. But generally it is either half a Laghu or half a Druta according as it occurs after Laghu or Druta. According to certain authorities a Virama is always half a druta whether it occurs after druta or laghu.

*2 ஒரு லகு அல்லது த்ருதத்திற்குப்பிறகு அழகாகக் காலத்தை சிறிது நீட்டி முடிப்பதே விராமம் ஆகும். விராமத்திற்காக நீட்டப்படும் கால அளவை லகு அல்லது த்ருதத்தின் பாதியோ அல்லது அதற்குச்சிறிது குறைவாகவோ அழகை உத்தேசித்து இருக்கலாம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. சில நூல்களில் விராமத்துக்கு எப்போதும் அரை த்ருதத்தின் அளவு என்று கொள்ளப்பட்டிருக்கிறது.*

# अष्टोत्तरशततालाः ।

## १. चच्चत्पुटम् ॥

वृद्धौ स्यादथ लस्त्र्यङ्गः सोऽयं चच्चत्पुटो भवेत् ।

SSIS̀=(8)

# ONE HUNDRED AND EIGHT TĀLAS

## 1. CACCATPUṬAM

(437) Caccatpuṭam is formed by two gurus followed by a laghu and a pluta, altogether making eight mātras.

# நூற்றெட்டுத்தாளங்கள்

## 1. சச்சத்புடம்

*(437) இரண்டு குரு, ஒரு லகு, ஒரு ப்லுதம் சேர்ந்து எட்டு மாத்திரைகள் கொண்ட தாளம் சச்சத்புடம் ஆகும்.*

## २. चाचपुटम् ।

गुर्वोर्मध्ये चाचपुटे लघुद्वंद्वं प्रकीर्तितम् ॥ ४३७ ॥

S I I S = (6)

## 2. CĀCAPUṬAM

For Cācapuṭa we have to place two laghus between two gurus, thus making six mātras.

## 2. சாசபுடம்

*சாசபுடத்திற்கு ஒரு குரு, இரண்டு லகு, பிறகு ஒரு குரு சேர்க்கவேண்டும். மாத்திரைகள் 6.*

## ३. षट्पितापुत्रकम् ।

पोलोगो गलपाश्चैव षट्पितापुत्रकः स्मृतः ।

Ṡ I S S I Ṡ = (12)

## 3. ṢAṬPITĀPUTRAKAM

(438) For Ṣaṭpitāputraka, we should have a pluta, a laghu and a guru, then a guru, laghu and a pluta making thus 12 mātras.

### 3. ஷட்பிதாபுத்ரகம்

*(438) ஷட்பிதாபுத்ரக தாளத்திற்கு ஒரு ப்லுதம், லகு, குருவுக்குப்பிறகு குரு, லகு, ப்லுதம் வரவேண்டும். மாத்திரைகள் பன்னிரண்டு.*

## ४. सम्पक्वेष्टाकम् ।

मगणः स्यात्प्लुताद्यंतः संपक्वेष्टाकसंज्ञके ॥ ४३८ ॥

Ṡ S S S Ṡ = (12)

## 4. SAMPAKVEṢṬĀKAM

For Sampakveṣṭākam we must have three gurus with two plutas on either side making thus twelve mātras.

### 4. சம்பக்வேஷ்டாகம்

*சம்பக்வேஷ்டாக தாளத்தில் முதலிலும் கடைசியிலும் ப்லுதமும் இடையே குரு மூன்றும் இருக்கவேண்டும். மாத்திரைகள் பன்னிரண்டு.*

## ५. उद्घट्टम् ।

उद्घट्टे मगणस्त्वेकः

S S S = (6)

## 5. UDGHAṬṬAM [1]

(439) For Udghaṭṭa we have three gurus making six mātras

## 5. உத்கட்டம் [2]

(439) உத்கட்ட தாளத்தில் மூன்று குரு இருக்க வேண்டும். மாத்திரைகள் ஆறு.

## ६. आदितालः ।

त्वादिताले लघुः स्मृतः ।

1 = (1)

## 6. ĀDI TĀLA

In Ādi Tāla, there is a single laghu, and it has therefore one mātra.

## 6. ஆதிதாளம்

ஆதிதாளத்தில் ஒரு லகுவே உண்டு. மாத்திரை ஒன்று.

---

1. The first five Talas given here are the oldest ones and are called the Marga Talas. It is to be noted that their names are formed by letters indicating their angas.

2 இதில் கண்ட முதல் ஐந்து தாளங்களும் ஆதியில் உண்டானவை. அவைகளுக்கு மார்க்க தாளங்கள் என்று பெயர். அவைகளின் பெயர்களில் உள்ள எழுத்துக்கள் அவற்றின் அங்கங்களை தெரியப்படுத்துகின்றன என்பது கவனிக்கத்தக்கது.

## ७. दर्पणतालः ।

दर्पणे स्याद्द्रुतद्वंद्वं गुरुश्चैकः प्रकीर्तितः ॥ ४३९ ॥

0 0 S = (3)

## 7. DARPAṆA TĀLA

In Darpaṇa Tāla we have two drutas and a guru making three mātras.

## 7. தர்ப்பண தாளம்

தர்ப்பண தாளத்தில் இரண்டு த்ருதமும் ஒரு குருவும் அமையும். மாத்திரைகள் மூன்று.

## ८. चच्चरी ।

अष्टकृत्वस्तु चच्चर्यां विरामान्तौ द्रुतौ लघुः ।

0 ₀ 1 0 ₀ 1 0 ₀ 1 0 ₀ 1 0 ₀ 1 0 ₀ 1 0 ₀ 1 0 ₀ 1 = (18)

## 8. CACCARĪ [1]

(440) In Caccarī, a group of one druta, one druta virāma and one laghu, is repeated eight times making eighteen mātras.

## 8. சச்சரி [2]

(440) சச்சரி தாளத்தில் ஒரு த்ருதமும் ஒரு த்ருத விராமமும், ஒரு லகுவும் சேர்ந்த தொகுதி எட்டு முறை வரும். மாத்திரைகள் பதினெட்டு.

---

1. The text in Sanskrit can be interpreted in two ways. In the one, the laghu is included in each group making 18 matras as given here. In the other, the laghu appears only once at the end. This gives 11 matras only. The Tamil text adopts the first interpretation.

2. இந்தத் தாளத்தைப்பற்றிய சுலோகத்திற்கு இருவகையாகப் பொருள் கூறலாம். லகுவை ஒவ்வொரு தொகுதியிலும் சேர்ப்பது ஒரு முறை. லகுவை ஒரே முறை கடைசியில் சேர்ப்பது மற்ற முறை. தமிழ் நூல்களில் முதல் முறையே கையாளப்பட்டிருக்கிறது.

## ९. सिम्हलीला ।

सिम्हलीले विश्रातव्यं लद्वयाद्यन्तं द्रुतत्रयम् ॥ ४४० ॥

1 0 0 0 1 = (3½)

## 9. SIMHALĪLA

In Simhalīla, we have three drutas between two laghus, making three and a half mātrās.

### 9. ஸிம்மலீலம்

ஸிம்மலீல தாளத்தில் முதலிலும் கடையிலும் இரண்டு லகுக்களும் இடையே மூன்று த்ருதங்களும் வரும். மாத்திரைகள் மூன்றரை.

## १०. कन्दर्पः ।

द्रुतद्वंद्वं यकारश्च कन्दर्पे परिकीर्तितः ।

0 0 1 S S = (6)

## 10. KANDARPA

(441) In Kandarpa Tāla, we have two drutas and a ya-gana,[1] that is, a laghu followed by two gurus, making six mātras.

1. The distribution of laghu and guru is denoted also by 'ganas' or groups of three factors. There are 8 ganas, denoted by 8 letters, ya, ra, ta, bha, ja, sa, na and ma. The first three namely ya, ra and ta have each one laghu and two gurus, the laghu being in the beginning, middle and end respectively. The next three, namely, bha, ja and sa have each one guru and two laghus, the guru being in the beginning, middle and end respectively. The next two, namely, na and ma have three laghus and three gurus respectively.

### 10. கந்தர்ப்பம்

(441) கந்தர்ப்ப தாளத்தில் இரண்டு த்ருதங்களும் பிறகு ஒரு 'யகணமும்'[2] அதாவது முதலில் லகுவும் பிறகு இரண்டு 'குரு'வும் வரும். மாத்திரைகள் ஆறு.

### ११. सिह्मविक्रमः ।

**सिह्मविक्रमताले स्युः मगणो लपला गपौ ॥ ४४१ ॥**

S S S 1 Ŝ 1 S Ŝ = (16)

### 11. SIMHA VIKRAMA

In Simha Vikrama tāla, we have first a ma-gaṇa, that is three gurus, and then a laghu, a pluta, a laghu, a guru and a pluta, thus making sixteen mātras.

### 11. ஸிம்ம விக்கிரமம்

ஸிம்ம விக்கிரம தாளத்தில் முதலில் ம-கணமும், அதாவது மூன்று குருக்களும், பிறகு ஒரு லகு, ஒரு ப்லுதம், ஒரு லகு, ஒரு குரு, ஒரு ப்லுதம், இவைகளும் வரும். மாத்திரைகள் பதினாறு.

### १२. श्रीरङ्गः ।

**श्रीरङ्गसंज्ञके ताले सगणो लप्लुतौ मतौ ।**

1 1 S 1 Ŝ = (8)

---

2. குரு, லகுக்களான மூன்று அங்கங்கள் கொண்டது 'கணம்' எனப்படும். கணங்கள் மொத்தம் எட்டு. அவைகள் எட்டு எழுத்துக்களால் குறிப்பிடப்படுகின்றன. ய, ர, த, ப, ஜ, ஸ, ந, ம என்பவை அந்த எழுத்துக்கள். முதல் மூன்றிலும் அதாவது யகணம், ரகணம், தகணம், என்ற மூன்றிலும் ஒரு லகுவும், இரண்டு குருக்களும் வரும். லகு இவற்றில் முறையே முதல், இடை, கடையில் வரும். அடுத்த மூன்றிலும், ஒரு குருவும் இரண்டு லகுக்களும் வரும். இவற்றில் குரு முறையே முதல், இடை, கடையில் வரும். கடைசி இரண்டாகிய நகணம், மகணங்களில், மூன்று லகுவும், மூன்று குருவும் வரும்.

## 12. S'RĪRAṄGA

(442) In S'rīraṅga Tāla, we have first a sa-gaṇa, that is, two laghus and a guru and then a laghu and a pluta, thus making eight mātras.

## 12. ஸ்ரீரங்க தாளம்

*(442) ஸ்ரீரங்க தாளத்தில் முதலில் ஸ-கணமும், அதாவது இரண்டு லகு, ஒரு குருவும், பிறகு ஒரு லகுவும் ஒரு ப்லுதமும் வரும். மாத்திரைகள் எட்டு.*

## १३. रतिलीलः ।

रतिलीले विधातव्यं लघुरेको [द्वन्द्वं] गुरुद्वयम् ॥ ४४२ ॥

1 1 S S = (6)

## 13. RATILĪLA

In Ratilīla tāla, we have 2 laghus [1] and 2 gurus, thus making six mātras.

## 13. ரதிலீலம்

*ரதிலீல தாளத்தில் இரண்டு[2] லகுவும், இரண்டு குருவும் வரும். மாத்திரைகள் ஆறு.*

---

1. The text in the Bharatarnavam MS. in Sarasvati Mahal has लघुरेक: and the angas are marked accordingly. But all other texts in Sanskrit and Tamil have two laghus and two gurus. Hence the reading has been corrected.

2. *ஸரஸ்வதி மஹாலிலுள்ள பரதார்ணவத்தில் ஒரு லகுவும், இரண்டு குருவும் வரும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. தாள அங்கமும் அப்படியே குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஆனால் மற்ற எல்லா தமிழ் ஸம்ஸ்க்ருத நூல்களிலும் இரண்டு லகுவும் இரண்டு குருவும் வருமென்று கூறப்பட்டிருக்கிறது. அதை அனுஸரித்து இந்த பாடம் திருத்தப்பட்டிருக்கிறது.*

## १४. रङ्गताळः ।

चत्वारो रङ्गताळे स्यात् गुर्वन्तद्रुचतुष्टयम् ।

0 0 0 0 S = (4)

## 14. RAṄGA TĀLA

(443) In Raṅga Tāla, we have 4 drutas and a guru ; the tāla has thus 4 mātras.

## 14. அரங்க தாளம்

*(443) அரங்க தாளத்தில் நான்கு த்ருதங்களும், ஒரு குருவும் வரும். மாத்திரைகள் நான்கு.*

## १५. परिक्रमः ।

परिक्रमे द्रुतद्वंद्वं सगणस्तदनन्तरम् ॥ ४४३ ॥

O O 1 1 S = (5)

## 15. PARIKRAMA

In Parikrama tāla, we have two drutas and a sa-gana, that is two laghus and a guru, thus making five mātras.

## 15. பரிக்கிரமம்

*பரிக்கிரம தாளத்தில் இரண்டு த்ருதங்களும், ஒரு ஸ-கணமும், அதாவது இரண்டு லகுவும் ஒரு குருவும் வரும். மாத்திரைகள் ஐந்து.*

## १६. प्रत्यङ्गः ।

प्रत्यङ्गसंज्ञके ताळे मगणः स्याल्लघुद्वयम् ।

S S S 1 1 = (8)

## 16. PRATYAṄGA

(444) In Pratyaṅga tāla, we have a ma-gaṇa, that is three gurus, and then two laghus, thus making eight mātras.

## 16. பிரத்தியங்கம்

*(444) பிரத்தியங்க தாளத்தில் ஒரு ம-கணமும், அதாவது மூன்று குருக்களும், பிறகு இரண்டு லகுக்களும் வரும். மாத்திரைகள் எட்டு.*

## १७. गजलीलः ।

लचतुष्कं विरामान्तं गजलीले प्रकीर्तितम् ॥ ४४४ ॥

1 1 1 1̀ = (4¼)[1]

## 17. GAJALĪLA

In Gajalīla, we have four laghus finished with a virāma[1], thus making 4¼ mātras.

## 17. கஜலீலம்

*கஜலீல தாளத்தில் நான்கு லகுக்களும் கடைசி லகுவுக்குப் பிறகு ஒரு விராமமும் உடையதாக இருக்கும். மாத்திரைகள் 4¼ [2].*

## १८. त्रिभिन्नः ।

लघुर्गुरुः प्लुतश्चैव त्रिभिन्ने परिकीर्तितः ।

1 S S̀ = (6)

---

1. Some authorities equate Virama to half a druta whether it occurs after the laghu or druta. That view is followed here.

2. *சில நூல்களில் லகுவுக்குப்பின் வந்தாலும், த்ருதத்துக்குப்பின் வந்தாலும் விராமத்துக்கு எப்போதும் கால் மாத்திரை என்று கணக்கிடப் பட்டிருக்கிறது. அந்தக் கொள்கையே இங்கு கையாளப்பட்டிருக்கிறது.*

## 18. TRIBHINNA

(445) In Tribhinna tāla, we have a laghu, a guru and a pluta, thus making six mātras.

## 18. திரிபின்னம்

(445) திரிபின்ன தாளத்தில் ஒரு லகுவும் ஒரு குருவும் ஒரு ப்லுதமும் வரும். மாத்திரைகள் ஆறு.

## १९. वीरविक्रमः ।

वीरविक्रमताळे तु लौ द्रुतौ च गुरुः स्मृतः ॥ ४४६ ॥

1 1 0 0 S = (5)

## 19. VĪRAVIKRAMA

In Vīravikrama tāla, we have two laghus, two drutas and a guru, thus making five mātras.

## 19. வீரவிக்கிரமம்

வீரவிக்கிரம தாளத்தில் இரண்டு லகுக்களும் இரண்டு த்ருதங்களும், ஒரு குருவும் வரும். மாத்திரைகள் ஐந்து.

## २०. हंसलीलः ।

सविरामं लघुद्वंद्वं ताळे स्याद्धंसलीलके ।

1̀ 1̀ = (2½)

## 20. HAMSA LĪLA

(446) In Hamsa Lila we have two laghus each finished with a Virāma. The total number of mātras is therefore two and a half mātras.

### 20. ஹம்ஸ லீலம்

(446) ஹம்ஸ லீல தாளத்தில் ஒவ்வொன்றும் விரா மத்தில் முடிகிற இரண்டு லகுக்கள் வரும். மாத்திரைகள் இரண்டரை.

### २१. वर्णभिन्नः ।

वर्णभिन्नाभिधे ताले द्रुतद्वंद्वं लघुर्गुरुः ॥ ४४६ ॥

S 1 0 0 = (4)

### 21. VARṆA BHINNA

In Varṇa Bhinna tāla we have two drutas, one laghu and one guru making up four mātras.

### 21. வர்ண பின்னம்

வர்ண பின்ன தாளத்தில் இரண்டு த்ருதமும் ஒரு லகு வும், ஒரு குருவும் வரும். மாத்திரைகள் நான்கு.

### २२. राजचूडामणिः ।

राजचूडामणौ ताले द्रुतौ नश्च द्रुतौ लगौ ।

0 0 1 1 1 0 0 1 S = (8)

### 22. RĀJACŪḌĀMAṆI

(447) In Rājacūḍāmaṇi tāla we have two drutas, a na-gaṇa, i-e. three laghus, two drutas again and then one laghu and one guru making eight mātras.

### 22 ராஜ சூடாமணி

(447) ராஜசூடாமணி தாளத்தில் இரண்டு த்ருதங் களும், பிறகு ஒரு ந-கணமும் (அதாவது மூன்று லகுவும்), மறுபடியும் இரண்டு த்ருதங்களும், பிறகு ஒரு லகுவும், ஒரு

குருவும் வரும். மாத்திரைகள் எட்டு.

## २३. रङ्गद्योतनः ।

रङ्गद्योतनताळे तु मगणो लप्लुतावपि ॥ ४४७ ॥

S S S 1 S̀ = (10)

## 23. RAṄGADYŌTANA

In Raṅgadyōtana tāla we have a ma-gaṇa, i. e. three gurus, then a drutam and then a plutam making ten mātras.

## 23. ரங்கத் தியோதநம்

ரங்கத்தியோதந தாளத்தில் ஒரு ம-கணமும் (அதாவது மூன்று குருக்களும்) பிறகு ஒரு த்ருதமும், பிறகு ஒரு ப்லுதமும் வரும். மாத்திரைகள் பத்து.

## २४. राजताळः ।

गप्लौ द्रुतौ गलौ पश्च राजताळे प्रकीर्तितः ।

S S̀ 0 0 S I S̀ = (12)

## 24 RĀJA TĀLA

(448) In Rāja Tāla, we have one guru, one pluta, two drutas, then one guru, one laghu and one pluta, thus making twelve mātras.

## 24. ராஜ தாளம்

(448) ராஜ தாளத்தில் ஒரு லகு, ஒரு ப்லுதம், இரண்டு த்ருதம், பிறகு ஒரு குரு, ஒரு லகு, ஒரு ப்லுதம் இவை வரும். மாத்திரைகள் பன்னிரண்டு.

## २५. सिह्मविक्रीडितम् ।

लपौ गलौ पो गपलाः सिह्मविक्रीडिते प्लुतः ॥ ४४८ ॥

1 S̀ S 1 S̀ S S̀ 1 S̀ = (19)

## 25. SIMHAVIKRĪḌITA

In Simhavikrīḍita Tāla we have a laghu, a pluta and a guru, then a laghu, pluta and guru and then a pluta, a laghu and a pluta thus making nineteen mātras.[1]

## 25. ஸிம்ம விக்ரீடிதம்

*ஸிம்ம விக்ரீடித தாளத்தில் ஒரு லகு, ஒரு ப்லுதம்,*

---

I. There are different versions of this tala in the different texts on Tala.

1. In the Bharatarnava manuscript this tala is said to consist of nineteen matras as shown above.

2. The two manuscripts of Adi Bharatam give seventeen matras 1 1 S̀ S 1 S S̀ 1 S̀ = (17) to this tala.

3. Among the Tamil texts on Tala, Tala samudram (Sarasvati Mahal Edition) gives two versions one assigning seventeen matras (1 1 S̀ S 1 S S̀ 1 S̀ = 17) and the other fifteen matras (1 1 S̀ 1 S S̀ 1 S̀ = 15).

4. Caccaputavenba (Dharmapuram Mutt edition) gives seventeen matras (1 1 S̀ S 1 S S̀ 1 S = 17); it quotes also from another work called Talakkalivenba which gives eighteen matras 1 1 S̀ S 1 S S̀ S S̀ = (18).

5. In Bharata Sangraham (Annamalai University Edition) eighteen matras are given 1 1 S̀ S 1 S S̀ S S̀ = (18).

The text in Bharatarnavam, which is not free from errors runs as follows :—

लपौ गलौ पो गपल प्लुताश्चेत् ॥ 1 S̀ S 1 S̀ S S S̀ 1 S̀ इति सिह्मविक्रीतः ॥

The stanza is broken midway and it has been corrected and reconstructed maintaining the angas as they are given, because the description and notation agree.

The concensus of opinion, however appears to be in favour of seventeen matras.

ஒரு குரு, பிறகு ஒரு லகு, ஒரு ப்லுதம், ஒரு குரு, பிறகு ஒரு ப்லுதம் ஒரு லகு, ஒரு ப்லுதம் வரவேண்டும். மாத்திரைகள் பத்தொன்பது.[2]

---

2 இந்தத் தாளத்தைப் பற்றி வெவ்வேறு குறிப்புகள் தாள நூல்களில் காணப்படுகின்றன

1. 'பரதார்ணவம்' சுவடியில் ஏற்கனவே குறிப்பிட்டுள்ளபடி இந்தத்தாளத்திற்குப் பத்தொன்பது மாத்திரைகள் எனக்கண்டிருக்கிறது.

2. 'ஆதிபரதம்' என்ற தாளநூலின் இரண்டு வெவ்வேறு சுவடிகளிலும் இந்தத்தாளத்திற்குப் பதினேழு எனக்கண்டிருக்கிறது. (1 1 S̀ S 1 S S̀ 1 S̀ = 17)

3. தாளம் பற்றிய தமிழ் நூல்களுள் சமீபத்திய சரஸ்வதி மஹால் வெளியீடான 'தாள சமுத்திரம்' என்ற நூலில் இரண்டு பாடங்கள் காணப்படுகின்றன. ஒன்றில் இத்தாளத்திற்கு மாத்திரைகள் பதினேழு என்றும் (1 1 S̀ S 1 S S̀ 1 S̀ = 17), இரண்டாவதில் மாத்திரைகள் பதினைந்து என்றும் (1 1 S̀ 1 S S̀ 1 S̀ = 15) காணப்படுகிறது.

4. தருமபுர ஆதீன வெளியீடான 'சச்சபுட வெண்பா' என்ற தாளத்தைப்பற்றிய தமிழ் நூலில் இத்தாளத்திற்கு மாத்திரைகள் பதினேழு (1 1 S̀ S 1 S S̀ 1 S̀ = 17) எனக் கணக்கிடப்பட்டிருக்கிறது. அதோடு, அந்த நூலின் அடிக்குறிப்பில் குறிப்பிடப்பட்டுள்ள 'தாளக் கலிவெண்பா' என்னும் தாளம் பற்றிய தமிழ்நூல் செய்யுளில் இத்தாளம் பதினெட்டு மாத்திரைகள் (1 1 S̀ S 1 S S̀ S S̀ = 18) கொண்டது என்று காணப்படுகிறது.

5. அண்ணாமலைப் பல்கலைக்கழக வெளியீடான 'பரதசங்கிரஹம்' என்ற தமிழ்நூலில் இத்தாளத்திற்குப் பதினெட்டு மாத்திரைகள் எனக்கணக்கிடப்பட்டிருக்கிறது. (1 1 S̀ S 1 S S̀ S S̀ = 18)

'பரதார்ணவம்' என்ற இந்த நூலில் இருக்கிறபாடம் பிழையற்றதாகக்கருதமுடியாது; அந்தப்பாடம் வருமாறு :—

लपौ गलौ पो गपल प्लुताश्चेत ॥ 1 S̀ S 1 S̀ S S̀ 1 S̀ इति सिंहविक्रीत:

(இதன் பொருள் :- லகுவும் ப்லுதமும், குருவும் லகுவும், ப்லுதமும்,

## २६. वनमाली ।

वेदद्रुतालौ दयुगं गुरुः प्रान्ते निवेशितः ।
वनमाली भवेत्तालो गादितः शास्त्रवेदिभिः ॥ ४४९ ॥

0 0 0 0 1 1 0 0 S = (7)

## 26. VANAMĀLĪ

(449) In Vanamālī Tāla we have four drutas, two laghus, two drutas again and one pluta, making seven mātras in all

## 26 வனமாலி

*(449)* வனமாலி தாளத்தில் நான்கு த்ருதம், இரண்டு லகு, மறுபடியும் இரண்டு லகுவும் பிறகு ஒரு ப்லுதமும் வரும். மாத்திரைகள் ஏழு.

## २७. चतुरश्रवर्णः ।

गुरुर्लघू द्रुतौ गश्च वर्णः स्याच्चतुरश्रकः ।

S 1 1 0 0 S = (7)

---

குருவும் ப்லுதமும், லகுவும் ப்லுதமும் இருக்குமானல்............... என்பது ஸிம்ஹவிக்ரீதம். இதன் மாத்திரைகள் 1S̀S1S̀SS̀1S̀.

மேல்கண்ட பாடம் அரைகுறையாக இருக்கிறது என்பதைக் கவனிக்கவும். ஆனல் இதில் உள்ள தாளக் குறிகளும் செய்யுளில் காணும் விபரமும் ஒத்துவருவதால் பொருள் மாருதவண்ணம் செய்யுள் பாடம் பூர்த்திசெய்யப்பட்டு அச்சிடப்பட்டிருக்கிறது என்பதையும் காண்க.

பாடங்களை ஒப்பிட்டுப்பார்த்து முடிவுசெய்கையில் ஸிம்மவிக்ரீடித தாளத்திற்கு பதினேழு மாத்திரைகள் என்பது பெரும்பாலான அபிப்பிராயமாகத் தெரிகிறது.

## 27. CATURAS'RA VARṆA

(450) In Caturas'ra Varṇa tāla we have a guru, two laghus, two drutas and a pluta thus making eight mātras.

## 27. சதுரச்ர வர்ணம்

(450) சதுரச்ர வர்ண தாளத்தில் ஒரு குரு, இரண்டு லகு, இரண்டு த்ருதம், ஒரு ப்லுதம் வரும். மாத்திரைகள் எட்டு.

## २८. त्र्यश्रवर्णः ।

लघुर्द्रुतौ लघू गश्च त्र्यश्रवर्णे प्रकीर्तिताः ॥ ४५० ॥

1 0 0 1 1 S = (6)

## 28. TRYAS'RA VARṆA

In Tryas'ra Varṇa (Tryas'ra Tāla) we have a laghu, two drutas, then two laghus and one guru making six mātras in all.

## 28. த்ரியச்சிர வர்ணம்

த்ரியச்சிர வர்ணம் என்ற த்ரியச்சிர தாளம் ஒரு லகு, இரண்டு த்ருதம், பிறகு இரண்டு லகு, ஒரு குரு ஆக ஆறு மாத்திரைகள் கொண்டது.

## २९. मिश्रवर्णः ।

प्रतितुर्ये [त्रयं] विरामान्तं मिश्राख्ये द्वादश द्रुताः ।

0 0 ȣ 0 0 ȣ ᴗ 0 ȣ 0 0 ȣ = (7)

## 29. MIS'RA VARṆA

(451) In Mis'ra Varṇa Tāla we have four groops each consisting of there drutas finished by a Virāma. Total mātras seven.

### 29. மிச்ர வர்ணம்

*(451) மிச்ர வர்ண தாளத்தில் விராமத்தில் முடியும் மூன்று த்ருதங்கள் நான்கு முறை வரும். மாத்திரைகள் ஏழு.*

### ३०. वर्णताळः ।

सविरामाद्यषट्द्रुतान्तैर्दशला वर्णताळके ॥ ४५१ ॥

ઠ 0 0 0 0 0 1 1 1 1 1 1 ! 1 1 1 0 0 ઠ = (15)

### 30. VARṆA TĀLA

In Varṇa Tāla, we have first six drutas with a virāma in the beginning, then ten laghus, and then three drutas with a Virāma at the end, thus making fifteen mātras.[1]

### 30. வர்ண தாளம்

*வர்ண தாளத்தில் முதலில் விராமத்தையுடைய ஆறு த்ருதங்களும், பிறகு பத்து லகுக்களும் பிறகு கடைசியில் விராமத்தையுடைய மூன்று த்ருதங்களும் வரும். மாத்திரைகள் பதினைந்து.*[2]

### ३१. खण्डवर्णताळः ।

खण्डवर्णे प्लुतौ गश्च द्रुतो गश्च गुरुर्लगौ ।

Ṡ Ṡ S O S S 1 S = (15½)

### 31. KHAṆḌAVARṆA TĀLA [3]

*(452)* In Khaṇḍavarṇa Tāla we have two plutas,

---

1. This tala does not find a place in the Tamil works nor in Adi Bharata.

2. தாளம்பற்றிய தமிழ் நூல்களிலோ அல்லது ஆதிபரதத்திலோ இந்தத் தாளம் சொல்லப்படவில்லை.

3. This ṭala also has not been mentioned in Tamil works.

one guru, one druta and then two gurus, one laghu and one guru thus making fifteen and a half mātrās.

31. கண்டவர்ண தாளம்[1]

(452) கண்டவர்ண தாளத்தில் இரண்டு ப்லுதம், ஒரு குரு, ஒரு த்ருதம், பிறகு இரண்டு குரு, ஒரு லகு, ஒரு குரு எல்லாம் சேர்ந்து பதினைந்தரை மாத்திரைகள் வரும்.

## ३२. रङ्गप्रदीपः ।

रङ्गप्रदीपताले स्यात्सगणो गः प्लुतो यदि ॥ ४५२ ॥

1 1 S S Ṡ = (9)

## 32. RAṄGA PRADĪPA

In Raṅga Pradīpa Tāla we have two gurus, one laghu, then one laghu and one pluta making in all nine mātras.

32. ரங்கப்ரதீபம்

ரங்கப்ரதீப தாளத்தில் இரண்டு குரு, ஒரு லகு, பிறகு ஒரு லகு, ஒரு ப்லுதம் வரும். மாத்திரைகள் ஒன்பது.

## ३३. हंसनादः ।

हंसनादे च युज्यन्ते लप्लुतौ द्वौ द्रुतौ प्लुतः ।

1 Ṡ 0 0 Ṡ = (8)

## 33. HAMSA NĀDA

(453) In Hamsa Nāda we have a laghu, a pluta then two drutas and then a pluta comprising eight mātrās.

---

1. இந்தத் தாளம் தமிழ் நூல்களில் பிரஸ்தாபிக்கப்படவில்லை.

### 33. ஹம்ஸநாதம்

(453) ஹம்ஸநாத தாளத்தில் ஒரு லகு, ஒரு ப்லுதம் பிறகு இரண்டு த்ருதம் பிறகு ஒரு ப்லுதம் வரும். மாத்திரைகள் ஏழு.

### ३४. सिह्मनादः ।

यगणो लो गुरुश्चैव सिह्मनादे निरूपितः ॥ ४५३ ॥

1 S S 1 S = (8)

### 34. SIMHA NĀDA

In Simha Nāda Tāla we have first a ya-gana (i.e.) a laghu, and two gurus, then a laghu, and then a guru, thus making eight mātras.

### 34. ஸிம்ஹநாதம்

ஸிம்ஹநாத தாளத்தில் ஒரு ய-கணமும் (அதாவது ஒரு லகுவும் இரண்டு குருவும்) பிறகு ஒரு லகுவும் பிறகு ஒரு குருவும் வரும். மாத்திரைகள் எட்டு.

### ३५. मल्लिकामोदः ।

ताळे तु मल्लिकामोदे लद्वयं खचतुष्टयम् ।

1 1 0 0 0 0 = (4)

### 35. MALLIKĀMŌDA

(454) In Mallikāmōda Tāla we have two laghus followed by four drutas comprising in all four mātras.

### 35. மல்லிகாமோதம்

(454) மல்லிகாமோத தாளத்தில் இரண்டு லகுவுக்

குப் பிறகு நான்கு த்ருதம் வரும். மாத்திரைகள் நான்கு.

## ३६. शरभलीलः ।

लघुद्रुतचतुष्कं लौ स्यातां शरभलीलके ॥ ४५४ ॥

1 0 1 0 1 0 1 0 1 1 = (8)

## 36. S'ARABHALĪLA [1]

In S'arabha Līla Tāla we have four groups, each consising of a laghu and druta, and then two laghus, thus making eight mātras.

## 36. சரபலீலம்[2]

சரபலீல தாளத்தில் ஒரு லகு, ஒரு த்ருதம் உள்ள நான்கு தொகுதிகளும் பிறகு இரண்டு லகுவும் வரும். மாத்திரைகள் எட்டு.

## ३७. रङ्गाभरणः ।

तगणो लप्लुतौ कार्यौ रङ्गाभरणसंज्ञके ।

S S 1 1 S̀ = (9)

## 37. RANGĀBHARAṆĀ

(455) In Rangābharaṇā Tāla we have first a Ta-gana i. e. two gurus and one laghu, then one laghu and then a pluta making nine mātras.

---

1. In Adibharata the last two laghus are absent. The text runs as follows:

लघुद्रुतचतुष्कं स्यात्तस्तं शरभलीलके ।

10101010 = (6)

2. 'ஆதிபரதம்' என்ற நூலில் கடைசியில் 2 லகு இல்லை, அதாவது 10101010 = (6) என்று சொல்லப்பட்டிருக்கிறது.

### 37. ரங்காபரணம்

(455) ரங்காபரண தாளத்தில் முதலில் ஒரு த-கணமும் (அதாவது இரண்டு குருவும், ஒரு லகுவும்), பிறகு ஒரு லகுவும், கடைசியில் ஒரு ப்லுதமும் வரும். மாத்திரைகள் ஒன்பது.

### ३८. तुरङ्गलीलः ।

तुरङ्गलीले ताळे स्यात् द्रुतद्वंद्वं लघुस्ततः ॥ ४५५ ॥

0 0 1 = (2)

### 38. TURAṄGA LĪLA

In Turaṅga Līla Tāla we have two drutas and then a laghu making up two mātras.

### 38. துரங்கலீலம்

துரங்கலீல தாளத்தில் இரண்டு த்ருதத்திற்குப் பிறகு ஒரு லகு வரும். மாத்திரைகள் இரண்டு.

### ३९. सिंहनन्दनः ।

तपौ लो गो द्रुतौ गौलपलपागश्चलद्वयम् ।
इत्येवं कीर्तितस्ताळे निःशब्दं सिंहनन्दने ॥ ४५६ ॥

S S 1 Ṡ 1 S 0 0 S S 1 Ṡ 1 Ṡ S 1 1 + = (32)

### 39. SIMHANANDANA

(456) In Simhanandana Tāla we have first a Ta-gana (i.e.), two gurus and a laghu, then a pluta and a laghu, then a guru and two drutas and two gurus, then a laghu and a pluta and again a laghu and pluta, then a guru and two laghus and lastly a kākapāda comprising in all thirty-two mātras.

### 39. ஸிம்ஹநந்தனம்

(456) ஸிம்ஹநந்தன தாளத்தில் முதலில் ஒரு த கணமும் (அதாவது இரண்டு குருவும் ஒரு லகுவும்) பிறகு ஒரு ப்லுதமும் ஒரு லகுவும் ஒரு குருவும், அடுத்து இரண்டு த்ருதமும் இரண்டு குருவும், பின்னர் ஒரு லகுவும் ஒரு ப்லுதமும் மறுபடியும் ஒரு லகுவும் ஒரு ப்லுதமும், பிறகு ஒரு குருவும் இரண்டு லகுவும் கடைசியாக ஒரு காகபாதமும் வரும். மாத்திரைகள் மொத்தம் முப்பத்திரண்டு.

### ४०. जयश्रीः ।

रगणो लो गुरुश्चैव जयश्रीरिति कथ्यते ।

S 1 S 1 S = (8)

### 40. JAYAS'RĪ

(457) In Jayas'rī Tāla we have first a ra-gana (i. e. a guru, laghu and guru) and then a laghu and guru making in all eight mātras.

### 40. ஜயஸ்ரீ

(457) ஜயஸ்ரீ தாளத்தில் முதலில் ஒரு ர-கணமும் (அதாவது ஒரு குருவும் லகுவும் குருவும்) பிறகு ஒரு லகுவும் குருவும் வரும். மாத்திரைகள் மொத்தம் எட்டு.

### ४१. विजयानन्दः ।

भवेयुर्विजयानन्दे लद्वयाद्गुरवस्त्रयः ॥ ४५७ ॥

1 1 S S S = (8)

### 41. VIJAYĀNANDA

In Vijayānanda Tāla we have two laghus followed by three gurus comprising eight mātras in all.

### 41. விஜயாநந்தம்

*விஜயாநந்த தாளத்தில் இரண்டு லகுவுக்குப் பிறகு மூன்று குரு வரும். மாத்திரைகள் மொத்தம் எட்டு.*

### ४२. प्रतिताळः ।

लौ द्रुतौ प्रतिताळे स्यात् ।

1 1 0 0 = (3)

### 42. PRATI TĀLA

(458) In Prati Tāla we have two laghus and two drutas and the total number of mātras is three.

### 42. பிரதிதாளம்

*(458) பிரதி தாளத்தில் இரண்டு லகுவுக்குப் பிறகு இரண்டு த்ருதம் வரும். மாத்திரைகள் மூன்று.*

### ४३. द्वितीयकः ।

द्रुतौ लश्च द्वितीयके ।

0 0 1 = (2)

### 43. DWITĪYAKA

In Dwitīyaka Tāla we have two drutas followed by one laghu making two mātras.

### 43. த்விதீயகம்

*த்விதீயக தாளத்தில் இரண்டு த்ருதத்திற்குப் பிறகு ஒரு லகு வரும். மாத்திரைகள் இரண்டு.*

### ४४. मकरन्दः ।

मकरन्दे द्रुतद्वंद्वं लत्रयश्च गुरुस्ततः ॥ ४५८ ॥

0 0 1 1 1 S = (6)

## 44. MAKARANDA

In Makaranda Tāla we have two drutas, three laghus and a guru making in all six mātras.

### 44. மகரந்தம்

மகரந்த தாளத்தில் இரண்டு த்ருதமும், மூன்று லகுவும், ஒரு குருவும் வரும். மாத்திரைகள் ஆறு.

## ४५. कीर्तिताळः ।

लगौ पगलपाश्चैव कीर्तिताळे प्रकीर्तितः ।

1 S Ṡ S 1 Ṡ = (12)

## 45. KĪRTI TĀLA

(459) In Kirti Tāla we have a laghu and guru, then a pluta, guru, laghu and pluta comprising twelve mātras.

### 45. கீர்த்தி தாளம்

(459) கீர்த்தி தாளத்தில் ஒரு லகு, ஒரு குரு பிறகு ஒரு ப்லுதம், குரு, லகு பிறகு ஒரு ப்லுதம் வரும். மாத்திரைகள் பன்னிரண்டு.

## ४६. विजयताळः ।

प्लुतो गश्च प्लुतो गश्च ताळे विजयसंज्ञके ॥ ४५९ ॥

Ṡ S Ṡ S = (10)

## 46. VIJAYA TĀLA

In Vijaya Tāla we have a pluta and guru and then a pluta and guru making ten mātras.

### 46. விஜய தாளம்

விஜய தாளத்தில் ஒரு ப்லுதம், ஒரு குரு பிறகு ஒரு ப்லுதம், ஒரு குரு வரவேண்டும். மாத்திரைகள் பத்து.

### ४७. जयमङ्गलः ।

**सकारश्च सकारश्च जयमङ्गळसंज्ञके ।**

1 1 S 1 1 S = (8)

### 47. JAYAMANGALA

(460) In Jayamaṅgala Tāla we have two sa-ganas, one following the other, i. e., we have first two laghus and a guru and then another two laghus and a guru making eight mātras.

### 47. ஜயமங்களம்

*(460) ஜயமங்கள தாளத்தில் இரண்டு ஸ-கணங்கள் ஒன்றன்பின் ஒன்ருக வரும். அதாவது முதலில் இரண்டு லகுவும் ஒரு குருவும் பிறகு மறுபடியும் இரண்டு லகுவும் ஒரு குருவும் வரும். மாத்திரைகள் எட்டு.*

### ४८. राजविद्याधरः ।

**लघुर्वक्रो द्रुतौ ताळे राजविद्याधराभिधे ॥ ४६० ॥**

1 S 0 0 = (4)

### 43. RĀJA VIDYĀDHARA

In Rāja Vidyādhara Tāla we have one laghu, one guru and two drutas making up four mātras.

### 48 ராஜ வித்தியாதரம்

*ராஜ வித்தியாதர தாளத்தில் ஒரு லகு, ஒரு குரு பிறகு*

இரண்டு த்ருதங்கள் வரும். மாத்திரைகள் நான்கு.

## ४९. मंठ [मठ्य] ताळः ।

सकारं मंठ [मठ्य] ताळे स्यात्तदग्रे लचतुष्टयम् ।

1 1 S 1 1 1 1 = (8)[1]

## 49. MAṬHYA TĀLA

(461) In Maṭhya Tāla, we have first a sa-gaṇa and then, four laghus, thus comprising eight mātras.[1]

## 49. மட்டிய தாளம்

(461) மட்டிய தாளத்தில் முதலில் ஒரு ஸ-கணமும், அதாவது இரண்டு லகுவும் ஒரு குருவும், பிறகு நான்கு லகுக்களும் வரும். மாத்திரை எட்டு[2]

## ५०. अन्यमंठः (नेत्रमंठः) ।

तकारतो गुरुद्वंद्वं नशब्दमन्यमंठके (नेत्रमठ्यके) ॥ ४६१ ॥

S S 1 S S + = (13)[3]

## 50. NĒTRA MAṬHYA

In Nētra maṭhya (anya manṭha), we have first a ta-gaṇa, that is, two gurus and a laghu, then two

---

1. Adibharata assigns 6 matras (1 1 S 0 0 0 0 = 6) to this tala. The Tamil work 'Tala Samudram' has two versions one giving 6 matras (1 1 S 0 0 0 0 = 6), and the other five matras (1 1 S 0 0 = 5).

2. இந்த தாளத்திற்கு ஆதிபரதத்தில் ஆறு மாத்திரைகள் (11S0000=6) சொல்லப்பட்டிருக்கிறது. தாள சமுத்திரத்தில் உள்ள இரண்டு பாடங்களுள் ஒன்றில் ஆறு (11S0000 = 6) மாத்திரைகளும் மற்றொன்றில் 5 மாத்திரைகளும் (11S00=5) கொடுக்கப்பட்டிருக்கின்றன.

3. This tala has been assigned twelve matras (S 1 1 S S + = 12) in Adibharata and in the Tamil works on Tala.

gurus and lastly a Kākapāda, thus making thirteen mātras.

### 50. நேத்திர மட்டியம்

நேத்திர மட்டியம் என்று சொல்லப்பட்ட 'மற்றொரு' மட்டிய தாளத்தில் முதலில் ஒரு த-கணமும், பிறகு இரண்டு குருக்களும், அதன் பிறகு ஒரு லகுவும், கடைசியாக ஒரு காகபாதமும் வரும். மாத்திரை பதின்மூன்று [1].

## ५१. प्रतिमंठः (प्रतिमठ्यः)।

**नगणो जगणो लश्च प्रतिमण्ठे (मठ्ये) नियोजितः ।**

1 1 1 1 S 1 1 = (8)

### 51. PRATI MAṬHYA

(462) In Prati Maṭhya Tāla we have first a Na-gaṇa (i. e., three laghus), then a Ja-gaṇa (i. e., one laghu, one guru and one laghu), and lastly one laghu, making up eight mātras.[2]

### 51. பிரதி மட்யம்

*(462) பிரதி மட்ய தாளத்தில் முதலில் ஒரு ந-கணமும் (அதாவது மூன்று லகு) பிறகு ஒரு ஜ-கணமும் (அதாவது ஒரு லகு, ஒரு குரு பிறகு ஒரு லகு) கடைசியில் ஒரு லகுவும் வரும். மாத்திரைகள் எட்டு[3].*

---

1. இந்தத் தாளத்திற்கு ஆதிபரதத்திலும் தமிழ் நூல்களிலும் பன்னிரண்டு மாத்திரைகள் (S 1 1 S S + = 12) சொல்லப்பட்டிருக்கின்றன.

2. This tala is called Tritiya Mathya in Adi Bharata and is given the same angas and matras as in Bharatarnava. In Talasamudram this is called Prakasa Mathya and is assigned seven matras.
(1 1 1 S 1 1 = 7)

3. ஆதி பரதத்தில் இந்தத் தாளத்திற்கு 'த்ருதீய மட்யம்' என்று பெயர் கொடுக்கப்பட்டிருக்கிறது. தாளத்தின் அங்கங்களும் மாத்திரை

## ५२. जयतालः ।

जगणो लौ द्रुतौ पश्च जयताले प्रकीर्तितः ॥ ४६२ ॥

1 S 1 1 1 0 0 Ṡ = (10)

### 52. JAYA TĀLA

In Jaya tāla we have a ja-gana (i. e., one laghu, one guru and one laghu), then two laghus and two drutas and lastly one pluta, thus making up ten mātras.

### 52. ஜயதாளம்

ஜய தாளத்தில் முதலில் ஒரு ஜ-கணமும் (அதாவது ஒரு லகு, ஒரு குரு, ஒரு லகு) பிறகு இரண்டு லகுவும் இரண்டு த்ருதமும் கடைசியாக ஒரு ப்லுதமும் வரும். மாத்திரைகள் பத்து.

## ५३. कुडुक्कः ।

द्रुतद्वंद्वं लघुद्वंद्वं भवेत्ताले कुडुक्के ।

0 0 1 1 = (3)

### 53. KUḌUKKA TĀLA

(463) In Kuḍukka tāla we have two drutas and two laghus making up three mātras.

### 53. குடுக்க தாளம்

(463) குடுக்க தாளத்தில் இரண்டு த்ருதத்திற்குப் பிறகு இரண்டு லகு வரும். மாத்திரைகள் மூன்று.

---

யும் இந்நூலில் கண்டுள்ளபடியே. தாளசமுத்திரத்தில் இத்தாளம் 'பிரகாச மட்யம்' என்று அழைக்கப்படுகிறது. அதன் அங்கங்கள் மூன்று லகு, ஒரு குரு, பிறகு இரண்டு லகு—மாத்திரைகள் ஏழு. (1 1 1 S 1 1 = 7)

## ५४. निस्सारुकः ।

लघुद्वंद्वं विरामान्तं ताळे निस्सारुकाभिधे ॥ ४६३ ॥

1 1̀ = (2$\frac{1}{4}$)

## 54. NISSĀRUKA

In Nissāruka tāla we have two laghus finished by a virāma, consisting of two and a quarter mātras.

## 54. நிஸ்ஸாருகம்

நிஸ்ஸாருக தாளத்தில் முதலில் ஒரு லகுவும் அடுத்து விராமத்தில் முடியும் ஒரு லகுவும் வரும். மாத்திரைகள் இரண்டேகால்.

## ५५. निस्सानुकः ।

समौ निस्सानुके ताळे कीर्तितौ भरतादिभिः ।

1 1 S S 1 1 = (8)

## 55. NISSĀNUKA [1]

(464) In Nissānuka tāla we have a sa-gaṇa (i. e. two laghus and a guru) and then a bha-gaṇa (i. e. one guru and two laghus) making eight mātras.

## 55. நிஸ்ஸானுகம்[2]

*(464) நிஸ்ஸானுக தாளத்தில் முதலில் ஒரு ஸ-கணமும் (அதாவது இரண்டு லகுவும், ஒரு குருவும்) பிறகு ஒரு*

---

1. This tala is not mentioned either in Adi Bharata or in the Tamil works on tala.

2. ஆதிபரதத்திலோ அல்லது தமிழ் நூல்களிலோ இந்தத் தாளம் கொடுக்கப்படவில்லை.

ப-கணமும் (அதாவது ஒரு குருவும், இரண்டு லகுவும்) வரும். மாத்திரைகள் எட்டு.

## ५६. क्रीडाताळः ।

द्रुतद्वंद्वं विरामान्तं क्रीडाताळे प्रकीर्तितम् ॥ ४६४ ॥

0 0̀ = (1¼)

## 56. KRĪḌĀ TĀLA

In Krīḍā Tāla we have two drutas finished by a virāma comprising one and a quarter mātras.

## 56. கிரீடா தாளம்

கிரீடா தாளத்தில் முதலில் ஒரு த்ருதமும் பிறகு லகு விராமமும் வரும். மாத்திரைகள் ஒன்றேகால்.

## ५७. त्रिभङ्गी ।

सकाराद्गुरुणैकेन त्रिभङ्गिरभिधीयते ।

1 1 S S = (6)

## 57. TRIBHANGĪ

(465) In Tribhangī Tāla we have sa-gaṇa (i. e., two laghus and a guru) and then a guru, thus making six mātras.

## 57. திரிபங்கி

*(465)* திரிபங்கி தாளத்தில் முதலில் ஒரு ஸ-கணமும் (அதாவது இரண்டு லகுவும் ஒரு குருவும்) பிறகு ஒரு குருவும் வரும். மாத்திரைகள்: ஆறு.

## ५८. कोकिलप्रियः ।

कोकिलप्रियताळे स्यात् क्रमाद्गुरुलघुप्लुताः ॥ ४६५ ॥

S 1 Ŝ = (6)

## 58. KŌKILAPRIYA

In Kōkilapriya Tāla we have a laghu, guru and pluta, making six mātras.

## 58. கோகிலப்ரியம்.

கோகிலப்ரிய தாளத்தில் ஒரு லகு, குரு, ப்லுதம் மூன்றும் வரும். மாத்திரைகள் ஆறு.

## ५९. श्रीकीर्तिताळः ।

श्रीकीर्तिसंज्ञके ताळे गुरुद्वंद्वं लघुद्वयम् ।

S S 1 1 = (6)

## 59. S'RĪ KĪRTI TĀLA

(466) In S'rī Kīrti Tāla we have two gurus and then two laghus comprising six mātras.

## 59. ஸ்ரீ கீர்த்திதாளம்.

(466) ஸ்ரீ கீர்த்தி தாளத்தில் முதலில் இரண்டு குருவும், பிறகு இரண்டு லகுவும் வரும். மாத்திரைகள் ஆறு.

## ६०. बिन्दुमाली ।

चत्वारो बिन्दवो गुर्वोर्मध्ये स्याद्बिन्दुमालिनि ॥ ४६६ ॥

S O O O O S = (6)

## 60. BINDU MĀLĪ

In Bindu Mālī Tāla there are four drutas with guru on either side making six mātras.

## 60. பிந்துமாலீ.

*பிந்துமாலீ தாளத்தில் முதலிலும் கடைசியிலும் ஒரு குருவும், இவற்றின் நடுவில் நான்கு த்ருதமும் வரும். மாத்திரைகள் ஆறு.*

## ६१. नन्दनः ।

**लौ द्रुतौ च प्लुतश्चान्ते ताळे स्यान्नन्दनाभिधे ।**

1 1 0 0 Ṡ = (6)

## 61. NANDANA

(467) In Nandana Tāla we have two laghus, then two drutas followed by a pluta making six mātras.

## 61. நந்தனம்.

*(467) நந்தன தாளத்தில் முதலில் இரண்டு லகுவும், பிறகு இரண்டு த்ருதமும் கடைசியில் ஒரு ப்லுதமும் வரும். மாத்திரைகள் ஆறு.*

## ६२. श्रीनन्दनः ।

**गुर्वोर्मध्ये द्रुतद्वंद्वं ताळे श्रीनन्दनाभिधे ॥ ४६७ ॥**

S 0 0 S = (5)

## 62. S'RĪ NANDANA TĀLA

In S'rī Nandana Tāla we have two drutas with a guru on either side making five mātras.

### 62. ஸ்ரீநந்நனம்.

ஸ்ரீ நந்தன தாளத்தில் முதலிலும் கடைசியிலும் ஒரு குருவும் நடுவில் இரண்டு த்ருதமும் வரும். மாத்திரைகள் ஐந்து.

### ६३. उद्वीक्षणः ।

उद्वीक्षणे लघुद्वंद्वं गुरुरेकस्ततः परम् ।

1 1 S = (4)

### 63. UDVĪKṢAṆA

(468) In Udvīkṣaṇa Tāla we have two laghus followed by a guru making four mātras.

### 63. உத்வீக்ஷணம்.

*(468) உத்வீக்ஷண தாளத்தில் இரண்டு லகுவுக்குப் பிறகு ஒரு குரு வரும். மாத்திரைகள் நான்கு.*

### ६४. मंठिकाताळः ।

मंठिकाया विधातव्या गुरुर्बिन्दुप्लुताःक्रमात् ॥ ४६८ ॥

S 0 Ṡ = 5½

### 64. MANṬHIKĀ TĀLA

In Manṭhikā Tāla we have first a guru, then a druta and then a pluta making five and a half mātras.

### 64. மண்டிகா தாளம்

*மண்டிகா தாளத்தில் முதலில் ஒரு குரு, பிறகு ஒரு த்ருதம் கடைசியில் ஒரு ப்லுதமும் வரும். மாத்திரைகள் ஐந்தரை.*

६५. आदिमध्यः ।

आदिमध्यकताळे तु लद्वयं द्वौ विरामकौ ।

1 1 1̀ 1̀ = (4½)

65. ĀDI MAṬHYA

(469) In Ādi Maṭhya Tāla we have first two laghus, and then two laghus each finished by a virāma, comprising, thus, four and a half mātras.

65. ஆதிமட்டியம்.

(469) ஆதிமட்டிய தாளத்தில் இரண்டு லகுவுக்குப் பிறகு விராமத்தில் முடியும் இரண்டு லகு வரும். மாத்திரைகள் நாலரை.

६६. वर्णमध्यकः ।

लौ बिन्दू लश्च बिन्दू च वर्णमध्याख्यताळके ॥ ४६९ ॥

1 1 0 0 1 0 0 = (5)

66. VARṆA MAṬHYA

In Varṇa Maṭhya Tāla, we have two laghus, two drutas and then a laghu and two drutas.

66. வர்ண மட்டிய தாளம்.

வர்ண மட்டிய தாளத்தில் இரண்டு லகு, இரண்டு த்ருதம், பிறகு ஒரு லகு, இரண்டு த்ருதங்களும் வரும்.

६७. ढेङ्कीताळः ।

ढेङ्किकाभिधताळे तु रगणः परिकीर्तितः ।

S 1 S = (5)

## 67. ḌHEṄKI TĀLA

(470) In Ḍheṅki Tāla we have a ra-gaṇa, that is a guru, a laghu and a guru, making five mātras.

## 67. டேங்கிதாளம்

(470) டேங்கிதாளத்தில் ஒரு ர-கணம் அதாவது ஒரு குரு, ஒரு லகு, ஒரு குரு வரும். மாத்திரைகள் ஐந்து.

## ६८. अभिनन्दनः ।

लद्वयं दद्वयं चैव गुरुश्चैवाभिनन्दने ॥ ४७० ॥

1 1 0 0 S = (5)

## 68. ABHINANDANA

In Abhinandana Tāla, we have two laghus, two drutas and then a guru.

## 68. அபிநந்தனம்.

அபிநந்தன தாளத்தில் இரண்டு லகு, இரண்டு த்ருதம், பிறகு ஒரு குருவும் வரும்.

## ६९. नवक्रीडः ।

विधातव्यं नवक्रीडे विरामान्तद्रुतद्वयम् ।

0 8 = (1¼)

## 69. NAVAKRĪḌA

(471) In Navakrīḍa Tāla we have two drutas finished by a virāma making up one and a quarter mātras.

### 69. நவக்ரீடம்

(471) நவக்கிரீட தாளத்தில் முதலில் ஒரு த்ருதமும் பிறகு விராமத்தில் முடியும் இன்னொரு த்ருதமும் வரும். மாத்திரைகள் ஒன்றேகால்.

### ७०. मल्लतालः ।

मल्लताले विधिलघुर्विरामान्तद्रुतद्वयम् ॥ ४७१ ॥

1 1 1 1 0 $\breve{0}$ = ($5\frac{1}{4}$)

### 70. MALLA TĀLA

In Malla Tāla we have first four laghus and then two drutas finished by a virāma, thus composing five and a quarter mātras

### 70. மல்லதாளம்

மல்லதாளத்தில் முதலில் நான்கு லகுவும் பிறகு ஒரு த்ருதமும், கடைசியில் விராமத்தில் முடியும் ஒரு த்ருதமும் வரும். மாத்திரைகள் ஐந்தேகால்.

### ७१. दीपकः ।

द्रुतद्वंद्वं लघुद्वंद्वं गुरुद्वंद्वं च दीपके ।

0 0 1 1 S S = (7)

### 71. DĪPAKA

(472) In Dīpaka Tāla we have first two drutas, then two laghus and then two gurus comprising seven mātras.

### 71. தீபகம்

(472) தீபகதாளத்தில் முதலில் இரண்டு த்ருதமும்,

பிறகு இரண்டு லகுவும், கடைசியில் இரண்டு குருவும் வரும். மாத்திரைகள் ஏழு.

## ७२. अनङ्गतालः ।

लघुः प्लुतः सकारश्चानङ्गताले ततः प्लुतः ॥ ४७२ ॥

1 S̀ 1 1 S S̀ = (11)

## 72. ANAṄGA TĀLA

In Anaṅga Tāla we have first a laghu, then a pluta, then a sa-gaṇa (i. e. two laghus and a guru) and then one pluta, thus making eleven mātras.

## 72. அனங்கதாளம்

அனங்கதாளத்தில் ஒரு லகு, பிறகு ஒரு ப்லுதம், பிறகு ஒரு ஸ-கணம் (அதாவது இரண்டு லகுவும் ஒரு குருவும்) கடைசியில் ஒரு ப்லுதமும் வரும். மாத்திரைகள் பதினொன்று.

## ७३. विषमतालः ।

वेदद्रुता विरामान्ताः पुनस्ते विषमे मताः ।

0 0 0 8 0 0 0 8 = (4½)

## 73. VIṢAMA TĀLA

(473) In Viṣama Tāla we have first four drutas finished by a virāma and again the same four drutas finished by a virāma, making thus four and a half mātras.

## 73. விஷமதாளம்

(473) விஷமதாளத்தில் விராமத்தில் முடியும் நான்கு த்ருதங்களும் மறுபடியும் அதேவிதமாக விராமத்தில் முடி

யும் நான்கு த்ருதங்களும் வரும். மாத்திரைகள் நாலரை.

७४. नान्दीतालः ।

नान्दीताले समुद्दिष्टा लो बिन्दू लौ गुरू ततः ॥ ४७३ ॥

1 0 0 1 1 S S = (8)

74. NĀNDĪ TĀLA

In Nāndī Tāla, we have first one laghu, then two drutas, and then two laghus and two gurus, thus making eight mātras.

74. நாந்திதாளம்

நாந்திதாளத்தில் ஒரு லகு, இரண்டு த்ருதங்கள், இரண்டு லகுக்கள் இரண்டு குருக்கள் வரும். மாத்திரைகள் எட்டு.

७५. मुकुन्दतालः ।

मुकुन्दसंज्ञके ताले लघुर्बिन्दू लघुर्गुरुः ।

1 0 0 1 S = (5)

अन्यो लघ्वादि गुर्वन्तं भवेद्बिन्दुचतुष्टयं ॥ ४७४ ॥

1 0 0 0 0 S = (5)

75. MUKUNDA TĀLA

(474) In Mukunda Tāla we have first a laghu, then two drutas, then a laghu and then a guru comprising five mātras. There is another version in which we have first a laghu then four drutas and a guru making five mātras.

### 75. முகுந்ததாளம்

*(474) முகுந்த தாளத்தில் இரண்டு வழிகள் உண்டு. ஒன்றில் முதலில் ஒரு லகு, பிறகு இரண்டு த்ருதம், பிறகு ஒரு லகு, பிறகு ஒரு குரு வரும். இன்னொரு முறையில் முதலில் ஒரு லகுவும் கடைசியில் ஒரு குருவும் நடுவில் நான்கு த்ருதமும் வரும். மாத்திரைகள் இரண்டு வழிகளிலும் ஐந்து ஆகும்.*

### ७६. कर्षुकः ।

लघुद्वंद्वं च सगणं कर्षुकः परिकीर्तितः ।

1 1 1 1 S = (6)

### 76. KARṢUKA

(475) In Karṣuka Tāla we have first two laghus and then a sa-gaṇa (i. e. two laghus and then a guru) making six mātras.

### 76. கர்ஷுகம்

*(475) கர்ஷுக தாளத்தில் முதலில் இரண்டு லகுவும் பிறகு ஒரு ஸ–கணமும் (அதாவது இரண்டு லகுவும் ஒரு குருவும்) வரும். மாத்திரைகள் ஆறு.*

### ७७. एकतालः ।

एकेनैव द्रुतेन स्यात् एकतालीतिसंज्ञके ॥ ४७५ ॥

0 = (½)

### 77. ĒKA TĀLA

In Ēka Tāla we have only one druta and it consists half a mātra.

### 77. ஏகதாளம்

ஏக தாளம் ஒரேஒரு த்ருதம் மட்டும் கொண்டது. அதன் மாத்திரை அரை.

### कङ्कालतालाः ।

चतुर्विधं स्यात्कङ्कालः पूर्णः खण्डः समोऽसमः ।

### VARIETIES IN KAṄKĀLA TĀLA

(476) There are four varieties in Kaṅkāla Tāla. They are (1) Pūrṇa Kaṅkāla (2) Khaṇḍa Kaṅkāla (3) Sama Kaṅkāla and (4) Asama Kaṅkāla.

### கங்காளதாளங்கள்

*(476)* கங்காள தாளம் நான்கு வகைப்படும். 1. பூர்ண கங்காளம் 2. கண்ட கங்காளம் 3. ஸம கங்காளம் 4. அஸம கங்காளம் என்பவையாம்.

### ७८. पूर्णकङ्कालः ।

पूर्णे द्रुतचतुष्केण गुरुणा लघुना क्रमात् ॥ ४७६ ॥

0 0 0 0 S 1 = (5)

### 78. PŪRṆA KAṄKĀLA

In Pūrṇa Kaṅkāla we have four drutas then a guru, and then a laghu making five mātras.

### 78. பூர்ண கங்காளம்

பூர்ண கங்காள தாளத்தில் முதலில் நான்கு த்ருதமும், பிறகு ஒரு குருவும் கடைசியில் ஒரு லகுவும் வரும். மாத்திரைகள் ஐந்து.

## ७९. खण्डकङ्काळः ।

द्रुतद्वंद्वं गुरू खण्डे

0 0 S S = (5)

## 79. KHANḌA KAṄKĀLA

(477) In Khaṇḍa Kaṅkāla we have two drutas and two gurus making five mātras.

## 79. கண்ட கங்காளம்

*(477) கண்ட கங்காளத்தில் இரண்டு த்ருதமும் இரண்டு குருவும் வரும். மாத்திரைகள் ஐந்து.*

## ८०. समकङ्काळः ।

गुरुद्वंद्वं लघुः समे ।

S S 1 = (5)

## 80. SAMA KAṄKĀLA

In Sama Kaṅkāla we have two gurus and then a laghu making five mātras.

## 80. ஸம கங்காளம்

*ஸம கங்காளத்தில் இரண்டு குருவும் ஒரு லகுவும் வரும். மாத்திரைகள் ஐந்து.*

## ८१. असमकङ्काळः ।

एको लघुर्गुरुद्वंद्वं कङ्काळे त्वसमे भवेत् ॥ ४७७ ॥

1 S S = (5)

## 81. ASAMA KAṄKĀLA

In Asama Kāṅkāla we have a laghu and two gurus comprising five mātras.

### 81. அஸம கங்காளம்

அஸம கங்காள தாளத்தில் ஒரு லகுவும் இரண்டு குருவும் வரும். மாத்திரைகள் ஐந்து.

### ८२. झोंवडः ।

**लघुत्रयं विरामान्तं झोंवडे परिकीर्तितम् ।**

1 1 1̀ = (3¼)

## 82. JHŌMBAḌA

(478) In Jhōmbaḍa Tāla we have three laghus finished by a virāma making three and a quarter mātras.

### 82. ஜோம்பட தாளம்

(478) ஜோம்பட தாளத்தில் இரண்டு லகுவும், பிறகு விராமத்தில் முடியும் ஒரு லகுவும் வரும். மாத்திரைகள் மூன்றேகால்.

### ८३. पणतालः ।

**लघ्वोर्मध्ये द्रुतं बद्ध्वा पणताल इति स्मृतः ॥ ४७८ ॥**

1 0 1 = (2½)

## 83. PAṆA TĀLA

In Paṇa Tāla we have a druta with a laghu on either side, comprising two and a half mātras.

### 83. பண தாளம்

பண தாளத்தில் இரண்டு லகுவும் நடுவில் ஒரு த்ருத மும் வரும். மாத்திரைகள் இரண்டரை.

### ८४. अभङ्गतालः ।

अभङ्गताले कर्तव्यं लघोरग्रे त्रिमात्रकम् ।

1 Ṡ = (4)

### 84. ABHANGA TĀLA

(479) In Abhanga Tāla we have one laghu and one pluta comprising four mātras.

### 84. அபங்க தாளம்

*(479) அபங்க தாளத்தில் ஒரு லகுவும் ஒரு ப்லுத மும் வரும். மாத்திரைகள் நான்கு.*

### ८५. रायरङ्गालः [रायवङ्कालः] ।

रगणो बिन्दुयुग्मश्च रायरङ्गाल [रायवङ्काल] इष्यते ॥

S 1 S 0 0 = (7)

### 85. RĀYA RANGĀLA (RĀYAVANKĀLA)

In Rāya Rangāla (Rāyavankāla) Tāla we have one ra-gana, that is one guru, one laghu and one guru and then two drutas, thus making seven mātras.

### 85. ராய ரங்காளம் (ராய வங்காளம்)

*ராயரங்காளம் என்னும் ராயகங்காளதாளத்தில் ஒரு ர-கணமும், அதாவது ஒரு குரு, ஒரு லகு, ஒரு குருவும், பிறகு இரண்டு த்ருதங்களும் வரும். மாத்திரைகள் ஏழு.*

८६. लघुशेखरः ।

एकेन सविरामेण लघुना लघुशेखरः ।

$\grave{1}$ = ($1\frac{1}{4}$)

86. LAGHU S'ĒKHARA

(480) Laghu s'ēkhara Tāla consists of a laghu finished by a virāma and comprises one and a quarter mātras.

86. லகு சேகர தாளம்

(480) லகு சேகர தாளத்தில் விராமத்தில் முடிகிற ஒரு லகு மட்டும் வரும். மாத்திரைகள் ஒன்றேகால்.

८७. द्रुतशेखरः ।

एकेन साविरामेण द्रुतेन द्रुतशेखरः ॥ ४८० ॥

$\grave{0}$ = ($\frac{3}{4}$)

87. DRUTA S'ĒKHARA

Druta s'ēkhara Tāla consists of a druta finished by a virāma and is of $\frac{3}{4}$ mātra.

87. த்ருத சேகரம்

த்ருத சேகர தாளம் விராமத்தில் முடிகிற ஒரு த்ருதத்தால் ஆயது. மாத்திரை $\frac{3}{4}$.

८८. प्रतापशेखरः ।

प्रतापशेखरस्त्यङ्को द्रुतद्वयन्तविरामकः ।

ऽ 0 $\grave{0}$ = ($4\frac{1}{4}$)

## 88. PRATĀPAS'ĒKHARA

(481) In Pratāpa s'ēkhara Tāla we have a pluta and then two drutas, the last being finished by a viirāma, thus making four and a quarter mātras.

## 88. ப்ரதாப சேகரம்

*(481) ப்ரதாப சேகர தாளத்தில் முதலில் ஒரு ப்லுத மும் பிறகு இரண்டு த்ருதங்களும் கடைசியில் விராமமும் வரும். மாத்திரைகள் 4¼.*

## ८९. जगज्झम्पा ।

जगज्झंपे गुरुस्त्वेको विरामान्तं द्रुतद्वयम् ॥ ४८१ ॥

S 0 ȣ = (3¼)

## 89 JAGAJHAMPĀ

In Jagajhampā Tāla, we have a guru and then two drutas, the last being finished off with a virāma, thus making three and a quarter matras.

## 89. ஜகஜெம்பை

*ஜெகஜெம்ப தாளத்தில் ஒரு ப்லுதமும் பிறகு இரண்டு த்ருதங்களும், அவற்றுள் இரண்டாவது த்ருதம் விராமத்தில் முடிகிறதாகவும் இருக்கும். மாத்திரைகள் 3¼.*

## ९०. चतुर्मुखतालः ।

चतुर्मुखाभिधे ताळे जगणानन्तरं प्लुतः ।

1 S 1 Ś = (7)

नगणश्च प्लुतश्चान्यश्चतुर्मुखसमाह्वये ॥ ४८२ ॥

1 1 1 Ś = (6)

## 90. CATURMUKHA TĀLA

(482) In Caturmukha Tāla we have first a jagana that is, a laghu, pluta and a laghu, and then a pluta, thus making seven mātras.

There is another variety of Caturmukha tāla in which we hava a na-gaṇa, that is three laghus, and then a pluta, thus making six mātras.

## 90. சதுர்முக தாளம்

*(482) சதுர்முக தாளத்தில் ஒரு ஜ-கணமும் அதாவது ஒரு லகு, ஒரு குரு, ஒரு லகுவும், பிறகு ஒரு ப்லுதமும் வரும். மாத்திரைகள் ஏழு. சதுர்முக தாளத்தில் மற்றொரு வகையுண்டு. அதில் ந-கணத்திற்குப் பிறகு அதாவது மூன்று லகுவுக்குப் பிறகு ஒரு ப்லுதம் வரும். மாத்திரைகள் ஆறு.*

## ९१. झंपाताळः ।

**व्योमद्वयं विरामान्तं लश्च झंपाभिधे भवेत् ।**

0 ौ 1 = $(2\frac{1}{4})$

## 91. JHAMPA TĀLA

(483) In Jhampā Tāla we have first two drutas finished by a virāma and then a laghu, thus comprising two and a quarter mātras.

## 91. ஜம்பை தாளம்

*(483) ஜம்பை தாளத்தில் முதலில் ஒரு த்ருதமும், அடுத்து விராமத்தில் முடியும் ஒரு த்ருதமும் கடைசியில் ஒரு லகுவும் வரும். மாத்திரைகள் இரண்டேகால்.*

## ९२. प्रतिमठ्यः ।

प्रतिमठ्ये तु सगगो भगगः परिकीर्तितः ॥ ४८३ ॥
ताळज्ञैरयमेवान्यैर्झम्पकः परिकीर्तितः ।

1 1 S S 1 1 = (8)

## 92. PRATIMAṬHYA

(483–484) In Prati Maṭhya Tāla we have a sa-gaṇa (i. e. two laghus and one guru) and a bha-gaṇa (i. e. one guru and two laghus) making eight mātras. This tāla is also called by another name 'Jhampaka'

## 92. பிரதிமட்யம்

*(483–484) பிரதிமட்ய தாளத்தில் ஒரு ஸ-கணமும் (அதாவது இரண்டு லகுவும் ஒரு குருவும்) ஒரு ப-கணமும் (அதாவது ஒரு குருவும் இரண்டு லகுவும்) வரும். மாத்திரைகள் எட்டு. இந்தத் தாளத்தை ஜம்பக தாளம் என்று அழைப்பதும் உண்டு.*

## ९३. तृतीयताळः ।

तृतीयताळे द्वौ लौ च सविरामद्रुतत्रयम् ॥ ४८४ ॥

1 1 0 0 $\breve{0}$ = (3¾)

## 93. TṚTĪYA TĀLA

In Tṛitīya Tāla we have first two laghus and then three drutas finished by a virāma, comprising three and three-quarter mātras.

## 93. த்ருதீய தாளம்

*த்ருதீய தாளத்தில் முதலில் இரண்டு லகுவும், பிறகு*

இரண்டு த்ருதமும், கடைசியில் விராமத்தில் முடியும் ஒரு த்ருதமும் வரும். மாத்திரைகள் மூன்றே முக்கால்.

## ९४. वसन्तः ।

वसन्तताळे कर्तव्यो नगणो मगणस्ततः ।

1 1 1 S S S = (9)

## 94. VASANTA TĀLA

(485) In Vasanta Tāla we have a Na-gaṇa (i. e. three laghus) and a Ma-gaṇa (i. e. three gurus) making nine mātras.

### 94. வஸந்த தாளம்

(485) வஸந்த தாளத்தில் ஒரு ந-கணமும் (அதாவது மூன்று லகு) ஒரு ம-கணமும் (அதாவது மூன்று குரு) வரும். மாத்திரைகள் ஒன்பது.

## ९५. ललितः ।

ताळे ललितसंज्ञे स्यात् द्रुतद्वंद्वं लघुर्गुरुः ॥ ४८५ ॥

0 0 1 S (4)

## 95. LALITA TĀLA

In Lalita Tāla we have two drutas, then a laghu and then a guru, making in all four mātras.

### 95. லலித தாளம்

லலித தாளத்தில் முதலில் இரண்டு த்ருதமும், பிறகு ஒரு லகுவும், பிறகு ஒரு குருவும் வரும். மாத்திரைகள் நான்கு.

## ९६. रतिताळः ।

रतिताळे लघुः कार्यो गुरुश्चैकः प्रकीर्तितः ।

1 S = (3)

## 96. RATI TĀLA

(486) In Rati Tāla we have a guru after a laghu making three mātras.

## 96. ரதி தாளம்

*(486) ரதி தாளத்தில் ஒரு லகுவுக்குப் பிறகு ஒரு குரு வரும். மாத்திரைகள் மூன்று.*

## ९७. करणताळः ।

ताळे करण इत्याख्ये भवेद्द्रुतचतुष्टयम् ॥ ४८६ ॥

0 0 0 0 = (2)

## 97. KARAṆA TĀLA

In Karaṇa Tāla we have four drutas only, making two mātras.

## 97. கரண தாளம்

*கரண தாளம் நான்கு த்ருதங்களை மட்டும் கொண்டது. அதன் மாத்திரைகள் இரண்டு.*

## ९८. षट्ताळः ।

द्रुतैष्षड्भिस्तु षट्ताळे

0 0 0 0 0 0 = (3)

## 98. ṢAṬ TĀLA

(487) Ṣaṭ Tāla consists of six drutas only, and comprises three mātras.

## 98. ஷட் தாளம்

*(487) ஷட் தாளம் ஆறு த்ருதங்களை மட்டும் கொண்டது. அதன் மாத்திரைகள் மூன்று.*

## ९९. वर्धनः ।

वर्धने द्वौ द्रुतौ लपौ ।

0 0 1 S̀ = (5)

## 99. VARDHANA TĀLA

In Vardhana Tāla we have first two drutas, then a laghu and then a pluta making in all five mātras.

## 99. வர்த்தன தாளம்

*வர்த்தன தாளத்தில் இரண்டு த்ருதமும், பிறகு ஒரு லகுவும், பிறகு ஒரு ப்லுதமும் வரும். மாத்திரைகள் ஐந்து.*

## १००. वर्णतालः ।

**वर्णे इत्यभिधे ताले लघुद्वंद्वं प्लुतद्वयम् ॥ ४८७ ॥**

1 1 S̀ S̀ = (8)

## 100. VARṆA TĀLA

In Varṇa Tāla we have two laghus and two plutas making eight mātras.

### 100. வர்ண தாளம்

வர்ண தாளம் இரண்டு லகுவும், இரண்டு ப்லுதமும் கொண்டது. மாத்திரைகள் எட்டு.

### १०१. राजनारायणताळः ।

राजनारायणे बिन्दुद्वितयं जगणो गुरुः ।

0 0 1 S 1 S = (7)

### 101. RĀJA NĀRĀYAṆA TĀLA

(488) In Rāja Nārāyaṇa Tāla, we have first two drutas, then a Ja-gaṇa (i. e. one laghu, one guru and a laghu) and then a guru making in all six mātras.

### 101. ராஜநாராயண தாளம்

*(488) ராஜநாராயண தாளத்தில் முதலில் இரண்டு த்ருதமும், பிறகு ஒரு ஜ-கணமும் (அதாவது ஒரு லகு, ஒரு குரு, ஒரு லகு), கடைசியில் ஒரு குருவும் வரும். மாத்திரைகள் ஏழு.*

### १०२. मदनताळः ।

द्रुतद्वंद्वं गुरुश्चैको मदने परिकीर्तितः ॥ ४८८ ॥

0 0 S = (3)

### 102. MADANA TĀLA

In Madana Tāla we have two drutas and then a guru comprising three mātras.

### 102. மதன தாளம்

*மதன தாளத்தில் இரண்டு த்ருதத்துக்குப் பிறகு ஒரு*

குரு வரும். மாத்திரைகள் மூன்று.

१०३. पार्वतीलोचनः ।

पार्वतीलोचने वृत्तौ लौ द्रुतौ तनभाः क्रमात् ।

0 0 1 1 0 0 S S 1 1 1 1 S 1 1 = (16)

103. PĀRVATĪLŌCANA

(489) In Pārvatīlōcana Tāla we have two drutas, two laghus, again two drutas, then a ta-gaṇa, (i. e., two gurus and a laghu), then a Na-gaṇa (i. e., three laghus) and then a bha-gaṇa (i. e., a guru and two laghus) making in all sixteen mātras.

103. பார்வதீலோசனம்

(489) பார்வதீலோசன தாளத்தில் முதலில் இரண்டு த்ருதம், பிறகு இரண்டு லகு, மறுபடியும் இரண்டு த்ருதம், பிறகு ஒரு த-கணம் (அதாவது இரண்டு குருவும் ஒரு லகுவும்), பிறகு ஒரு ந-கணம் (அதாவது மூன்று லகு மட்டும்), கடைசியாக ஒரு ப-கணம் (அதாவது ஒரு குருவும் இரண்டு லகுவும்) வரும். மாத்திரைகள் பதினாறு.

१०४. गारुगी ।

गारुगी कथ्यते प्राज्ञैर्विरामान्तं चतुर्द्रुतम् ॥ ४८९ ॥

0 0 0 0̆ = (2¼)

104. GĀRUGĪ TĀLA

In Gārugī Tāla we have four drutas finished by a virāma making two and a quarter mātras.

### 104. காருகி தாளம்

காருகி தாளத்தில் முதலில் மூன்று த்ருதமும், கடைசியில் விராமத்தில் முடியும் ஒரு த்ருதமும் வரும். மாத்திரைகள் இரண்டேகால்.

### १०५. श्रीनन्दनः ।

श्रीनन्दने भकारश्च प्लुतश्च परिकीर्तितः ।

S 1 1 Ṡ = (7)

### 105. S'RĪ NANDANA TĀLA

(490) In S'rī Nandana Tāla we have a bha-gaṇa (a guru and two laghus) and then a pluta, making seven mātras.

### 105. ஸ்ரீ நந்தன தாளம்

*(490) ஸ்ரீ நந்தன தாளத்தில் ஒரு ப-கணத்திற்குப் பிறகு (அதாவது ஒரு குரு இரண்டு லகுவுக்குப் பிறகு) ஒரு ப்லுதம் வரும். மாத்திரைகள் ஏழு.*

### १०६. जयतालः ।

जयस्य जगणो लश्च विन्दुयुग्मं प्लुतस्ततः ॥ ४९० ॥

1 S 1 1 0 0 Ṡ = (9)

### 106. JAYA TĀLA

In Jaya Tāla we have a Ja-gaṇa (i. e., a guru with two laghus on either side), then a laghu, then two drutas, and then a pluta, making in all nine mātras.

### 106. ஜய தாளம்

ஜய தாளத்தில் ஒரு ஜ-கணம் (அதாவது ஒரு லகு, ஒரு குரு, ஒரு லகு); பிறகு ஒரு லகு, பிறகு இரண்டு த்ருதம், கடைசியில் ஒரு ப்லுதம் வரும். மாத்திரைகள் ஒன்பது.

### १०७. लीलाताळः ।

लीलाताळे खलौ पश्च

0 1 S̀ = (4½)

### 107. LĪLA TĀLA

(491) In Līla Tāla we have a druta, a laghu and a pluta making four and a half mātras.

### 107. லீலா தாளம்

(491) லீலா தாளத்தில் ஒரு த்ருதம், ஒரு லகு, ஒரு ப்லுதம் இவை மூன்றும் வரும். மாத்திரைகள் நாலரை.

### १०८. विलोकितः ।

लो गौ खौ पौ विलोकिते ।

1 S S 0 0 S̀ S̀ = (12)

### 108. VILŌKITA TĀLA

In Vilōkita Tāla we have a laghu, two gurus, two drutas and two plutas making in all twelve mātras.

### 108. விலோகித தாளம்

விலோகித தாளத்தில் ஒரு லகுவுக்குப் பின் இரண்டு குரு, இரண்டு த்ருதம், இரண்டு ப்லுதம் இவை வரும்.

மாத்திரைகள் பன்னிரண்டு.

१०९. ललितप्रियः ।

ललितप्रियताळे स्यात्सगणानन्तरं लगौ ॥ ४९१ ॥

1 1 S 1 S = (7)

109. LALITAPRIYA TĀLA

In Lalitapriya Tāla we have first a sa-gaṇa (i. e. two laghus and a guru), then a laghu and then a guru making in all seven mātras.

**109.** லலிதப்ரியம்

லலிதப்ரிய தாளத்தில் ஒரு ஸ-கணம் (அதாவது இரண்டு லகுவும் ஒரு குருவும்), பிறகு ஒரு லகு, பிறகு ஒரு குரு இவை வரும். மாத்திரைகள் ஏழு.

११०. जनकः ।

जनकाभिधताळे च नयसेभ्यः परं गुरुः ।

1 1 1 1 S S 1 1 S S = (14)

110. JANAKA TĀLA

(492) In Janaka Tāla we have first a Na-gaṇa (i. e., three laghus), then a Ya-gaṇa (i. e., a laghu and two gurus), then a Sa-gaṇa (i. e., two laghus and a guru) and then a guru making in all fourteen mātras.

**110.** ஜனக தாளம்

(492) ஜனக தாளத்தில் ஒரு ந-கணம் (அதாவது மூன்று லகு), பிறகு ஒரு ய-கணம் (அதாவது ஒரு லகுவும்

இரண்டு குருவும்), பிறகு ஒரு ஸ-கணம் (அதாவது இரண்டு லகுவும் ஒரு குருவும்) கடைசியாக ஒரு குரு இவை வரும். மாத்திரைகள் பதினான்கு.

### १११. लक्ष्मीशः ।

बिन्दुत्रयं विरामान्तं लक्ष्मीशे लौ प्लुतौ तथा ॥

0 0 ὸ 1 1 S̀ S̀ = (9¾)

### 111. LAKṢMĪS'A TĀLA

In Lakṣmīs'a Tāla we have first two drutas finished by a Virāma, then two laghus, and then two plutas making in all nine and three quarters mātras.

### 111. லக்ஷ்மீச தாளம்

லக்ஷ்மீச தாளத்தில் முதலில் இரண்டு த்ருதமும், பிறகு விராமத்தில் முடியும் ஒரு த்ருதமும், பிறகு இரண்டு லகுவும், கடைசியில் இரண்டு ப்லுதமும் வரும். மாத்திரைகள் ஒன்பதே முக்கால்.

### ११२. भद्रवाणः (चद्धाभरगः) ।

भद्रवाणस्तु कथितो लघ्वोर्मध्ये द्रुतं भवेत् ॥ ४९२ ॥

1 0 1 = (2½)

इति नन्दिकेश्वरविरचिते भरतार्णवे सुमतिबोधके ताळाधिकरणं नाम

सप्तमोऽध्यायः ॥

---

## 112. [1]BHADRA BĀṆA ([2]BADDHĀBHARAṆA)

In Bhadrabāṇa Tāla we have a druta with a laghu on either side making two and a half mātras.

Here ends Chapter VII. of Bharatārṇava of Nandikeśwara addressed to Sumati, dealing with Tālas.

---

## 112. பந்ரபாணம்[3] (பத்தாபரணம்[4])

பத்ரபாண தாளத்தில் இரண்டு லகுவுக்கு நடுவில் ஒரு த்ருதம் வரும். மாத்திரைகள் இரண்டரை.

இத்துடன் ஸுமதிக்கு நந்திகேசுவரர் அருளிச் செய்த பரதார்ணவம் என்ற நூலில் தாளங்களைப் பற்றி விவரிக்கும் ஏழாவது அத்தியாயம் முற்றுப் பெற்றது.

---

# अष्टमोऽध्यायः ।

## चारीलक्षणम् ।

नन्दिकेश महाभाग चारीद्वयविवेचनम् ।
सम्यगालोच्य शास्त्राणि यथावत्प्रतिपाद्यताम् ॥ ४९३ ॥

---

1. Though the number of talas is found in excess of hundred and eight on account of some Talas which are found only in this work, the Tamil works on Tala contain exactly hundred and eight Talas.

2. This Tala is called Baddhabharana in Tala work in Tamil like Tala Samudram.

3. நூற்றெட்டுத் தாளங்களுக்குமேல் நான்கு தாளங்கள் இந்நூலில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. தாளம் பற்றிய தமிழ் நூல்களில் நூற்றெட்டுத் தாளங்களே உள்ளன.

4. தாள சமுத்திரம் போன்ற தமிழ் நூல்களில் இந்தத் தாளத்திற்குப் 'பத்தாபரணம்' என்ற பெயர் கொடுக்கப்பட்டிருக்கிறது.

तथाचेत्सुमते चारीद्वयलक्षणभावनाम् ।
विविच्य संप्रवक्ष्यामि सावधानमनाः शृणु ॥ ४९४ ॥

## CHAPTER. 8.

### DESCRIPTION OF CĀRĪS OR MOVEMENTS OF LIMBS BELOW THE HIP.

(493–494) "Blessed Nandikēs'wara, I request that Cārīs or movements of limbs below the hip may be classified under its two heads (namely, 'of Bhoomi' and Ākās'a—'on the ground' and 'off the ground'), and described in detail".

Thus addressed by Sumati, Nandikēs'wara said, "In that case, Sumati, I shall deal with the Cārīs of both kinds and describe their features. Listen with care".

*அத்தியாயம் 8.*

### 'சாரிகள்' அல்லது இடுப்பு, துடை, முழங்கால், பாதம் இவைகள் சேர்ந்த அசைவுகள்.

*(493–494) "இறைவன் அருள் பெற்ற நந்திகேசுவரரே! சாரிகளை அவற்றின் இருவகைகளாக, அதாவது 'பூமிசாரி' 'ஆகாச சாரி' என்று பிரித்து அவைகளை விளக்கிக்கூற வேண்டுகிறேன்." — இவ்வாறு ஸுமதியால் கேட்டுக்கொள்ளப்பட்ட நந்திகேசுவரர், "ஸுமதி! அவ்வண்ணமே இருவகைசாரிகளின் அம்சங்களைப்பற்றி விவரிக்கிறேன். கவனமாகக்கேட்பாயாக" என்று கூற ஆரம்பித்தார்.*

### आकाशचार्यः ।

पूर्वमाकाशचारिणां लक्षणं प्रतिपाद्यते ।

समप्रेंखणचारी च सारिकाचारिका मता ॥ ४९५ ॥

अग्रप्लुताभिधा चारी विद्युल्लीला ततः परम् ।
खड्गबन्धाभिधा चारी रेखाबन्धा ततो भवेत् ॥ ४९६ ॥

लुठितोल्ललिता चारी कुण्डलावर्तका ततः ।
विचित्रेति वियच्चार्यो नवधा परिकीर्तिताः ॥ ४९७ ॥

## ĀKĀS'A CĀRIS

(495–497) First the features of Ākās'a Cārīs (movements off the ground) are dealt with. They are:

1. Sama prēṅkhaṇa Cārī, 2. Sārikā Cārī, 3. Agraplutā Cārī, 4. Vidyullīla Cārī, 5. Khaḍgabandhā Cārī. 6. Ṛēkhābandhā Cārī, 7. Luṭhitōllalitā Cārī, 8. Kuṇḍalāvartakā Cārī and 9. Vicitrā Cārī.

Thus the Ākās'a Cārīs or movements in space are [1]nine in number.

---

1. In Natya Sastra, Caris are defined as the combined movements of feet, knees, thighs and hip: c. f:—

एवं पादस्य जङ्घाया ऊर्वोः कट्यास्तथैव च ।
समानकरणाच्चेष्टा सा चारीत्यभिधीयते ॥

(Sloka 1. Chap. 11. Natya Sastra.)

Sixteen Caris of the 'Bhauma' (on the floor) variety and sixteen Caris of the 'Akasiki' (off the floor) variety are then mentioned. These are Marga Caris or those of the classical variety.

In addition to these, Sangita Ratnakara mentions Desi Caris or those of 'Provincial Variety' on the authority of Kohala and other authors, later than Bharata. Of these, 35 Caris of Bhauma (on the floor) variety and 19 Caris of the Akasiki (off the floor) variety are detailed.

In addition to these, the commentator Kallinatha quotes Kohala who mentions 25 Caris known popularly as 'madhupa' Caris in which kuttana or stamping by the foot plays an important part.

All these Caris mentioned above differ from the Caris mentioned in our text. Kohala also sanctions the improvising of any number of

### ஆகாச சாரி

(495–497) முதலில் ஆகாச சாரிகள் (தரையைத் தொடாத சாரிகள்) விவரிக்கப்படுகின்றன. அவை ஒன்பது [2] வகைப்படும். அவை வருமாறு :— 1. ஸமப்ரேங்கண சாரி 2. ஸாரிகா சாரி 3. அக்ரப்லுத சாரி 4. வித்யுல்லிலா சாரி 5. கட்கபந்த சாரி 6. ரேகாபந்த சாரி 7. லுடிதோல்ல ஸிதா சாரி 8. குண்டலாவர்த்தகாசாரி 9. விசித்ரா சாரி.

---

new Caris by Dance-masters as circumstances require, (consistently, of course, with grace).

For further details vide Natya Sastra chapter 11 slokas 1 to 44 and Sangita Ratnakara chapter VII slokas 910 to 1026.

2. பரதரின் நாட்டிய சாஸ்த்ரத்தில் சாரி என்பதற்கு பாதம், முழங்கால், துடை இவை எல்லாம் சேர்ந்த அசைவுகள் என்று விளக்கம் கொடுக்கப்பட்டிருக்கிறது. (நாட்டிய சாஸ்திரம், அத்தியாயம் 11 சுலோகம் 1 பார்க்கவும்.)

தரையைத்தொடும் சாரிகள் பதினாறு என்றும், தரையைத் தொடாத சாரிகள் பதினாறு என்றும் நாட்டிய சாஸ்திரம் கூறுகிறது. இவற்றிற்கு மார்க்க சாரிகள் என்று பெயர். இவைகளே ஆதியில் ஏற்பட்டவை.

இவற்றோடுகூட, சங்கீத ரத்னாகரத்தில் கோஹலர் முதலிய நூலாசிரியர்கள் ஆதாரத்தைக்கொண்டு 'தேசிசாரிகள்' என்ற பிற்காலத்திய சாரிகள் சொல்லப்படுகின்றன. இவ்வகை தேசிசாரிகளுள் பூமி சாரிகள் என்னும் தரையைத் தொடுபவை முப்பத்தைந்தும், ஆகாச சாரிகள் என்னும் தரையைத் தொடாதவை பத்தொன்பதும் கூறப்பட்டிருக்கின்றன.

இவற்றோடுகூட சங்கீத ரத்னாகரத்தின் உரையாசிரியர் கல்லிநாதர் 'மதுபசாரிகள்' என்ற பெயரோடு தரையைத் தட்டுவதை முக்கியமான அம்சமாகக்கொண்ட இருபத்தைந்து சாரிகளைப்பற்றிக் கூறுகிறார். மதுபசாரிகளின் விவரம் அடங்கிய கோஹலர் நூலின் பகுதி மேற்கோளாகக் கூறப்பட்டிருக்கிறது.

மேற்கூறிய எல்லா சாரிகளும் இந்த நூலில் கூறப்பட்டிருக்கும் சாரிகளிலிருந்து வேறுபட்டவை ஆகும். இவையன்றி சந்தர்ப்பத்துக்கு ஏற்றவாறும் நாட்டிய ஆசிரியர்கள் தங்கள் யுக்திக்கேற்றவாறும்,

## १. समप्रेंखणचारी ।

आदौ पादौ समौ स्यातां पश्चात्प्रेङ्खणरूपगौ ।
नितंबहस्तौ चलितौ पौनःपुन्याद्विलोचने ॥ ४९८ ॥

उल्लोकिताख्ये कर्तव्ये पुरोभागे तु पञ्चधा ।
स्थित्वा तिर्यग्गतौ चापि तथा कुर्यान्नृतिक्रमे ॥ ४९९ ॥

समप्रेङ्खणचारी सा कीर्तिता भरतार्थगैः ।

## 1. SAMA PRĒṄKHAṆA CĀRĪ
(moving equally on either side)

(498–500) The feet starting from Sama pāda or normal position, change to 'Prēṅkhaṇa' or moving from side to side, the hands are placed at the back of the hip and moved forward and backward; the eyes look up. This combination is repeated five times in forward movement. Starting again from rest, it is repeated in oblique directions. This is called Sama-prēṅkhaṇa Cārī.

## 1. ஸமப்ரேங்கண சாரி
(இருபுறமும் அசைந்தாடும் நடை)

(498–500) பாதங்கள், 'ஸம பாதம்' என்னும் சாதாரண நிலையிலிருந்து ஆரம்பித்துப் பிறகு, 'ப்ரேங்

---

(ஆனால் அழகு கெடாமல்) பொருத்தமானதாகப் பலவகை சாரிகளைப் புதிதாகக் கற்பனை செய்துகொள்வதற்கு கோருலர் இடம் கொடுக்கிறார் என்பதும் இங்கு குறிப்பிடத்தக்கது.

மற்ற விவரங்களுக்கு நாட்டிய சாஸ்திரத்தில் பதினொராவது அத்தியாயத்தில் 1 முதல் 44 முடிய சுலோகங்களையும், சங்கீதரத்னாகரத்தில் ஏழாம் அத்தியாயத்தில் 910 முதல் 1026 முடிய சுலோகங்களையும் பார்க்க.

கணம்' அல்லது இருபுறமும் மாறி மாறி அசைவது என்னும் நிலைக்கு மாறும். அப்போது கைகளை இடுப்பின் பின்புறமாகவைத்து முன்னும் பின்னுமாக அசைக்கவேண்டும்; கண்களின் பார்வை நிமிர்ந்திருக்க வேண்டும். இவ்விதமாக ஐந்து முறை நேரே செல்ல வேண்டும். அதேவிதமாக ஐந்து முறை இருபுறங்களிலும் குறுக்காகச் செல்ல வேண்டும். இவ்வித சாரிக்கு 'ஸமப்ரேங்கண சாரி' என்று பெயர்.

## २. सारिकाचारी ।

आदौ चान्ते शैवनाम्ना कीर्तितं स्थानकं भवेत् ॥ ५०० ॥

हस्तौ तु शुकतुण्डाख्यौ पौनःपुन्येन चारितौ ।
पुरोभागे तु गमने सरणं दक्षिणाङ्घ्रिणा ॥ ५०१ ॥

वामाङ्घ्रिणा वर्तमाने सा चारी सारिकाऽभिधा ।

## 2. SĀRIKĀ CĀRI

(500–502) This cāri begins with the standing pose called 'S'aiva' (Sthānaka No. 27 in page 172), and ends with the same standing pose. The hands hold the 'S'ukatuṇḍa' mudrā (Asamyuta No. 8 in page 9) and are repeatedly moved forward; while the dancer moves forward on his right foot and rests on his left foot.

## 2. ஸாரிகா சாரி

(500–502) இந்த சாரியில் முதலிலும் கடைசியிலும் 'சைவம்' (ஸ்தானம் நெ. 27, பக்கம் 172) என்னும் நிலையில் நிற்க வேண்டும். 'சுக துண்ட முத்திரை' (அஸம்யுதம் நெ. 8. பக்கம் 9) யோடு கைகளை அடிக்கடி முன்புறம் நீட்ட வேண்டும். முன்னே செல்லும்போது வலது பாதமும், நிற்கும்போது இடது பாதமும் உபயோகப்பட

வேண்டும். இதற்கு 'ஸாரிகா சாரி' என்று பெயர்.

३. अग्रप्लुता चारी ।

निरालंबनमुष्टिभ्यां अग्रतः प्लुतमाचरेत् ॥ ५०२ ॥

स्थित्वाऽऽयतस्थानके च क्षणं सरणमाचरेत् ।
पादाग्राभ्यां तु नयने समे स्यातां तदा नृतौ ॥ ५०३ ॥

एवमग्रे सप्तधा तु रचयेन्नृत्तिभावनात् ।
आवृत्तियाने सरणं केवलं पादयुग्मतः ॥ ५०४ ॥

अग्रप्लुताऽभिधा चारी कीर्तिता नाट्यकर्मणि ।

3. AGRAPLUTĀ CĀRĪ (Leaping forward)

(502–505) With fists in the air, the dancer should jump forward and rest a while in the standing pose of Āyata (Sthānaka No. 1 in page 159); then move forward slowly on the fore-foot, the eyes assuming the 'Sama' or normal look. Moving forward slowly on both the fore-feet together is then begun and repeated seven times. This is called Agraplutā Cārī.

3. அக்ரப்லுதா சாரி

(502–505) கைகளில் முஷ்டி (அஸம்யுதம் நெ. 9. பக்கம். 10) என்னும் முத்திரையைத் தாங்கி முன்னே குதித்துச் சென்று 'ஆயதம்' (ஸ்தானகம் நெ. 1. பக்கம் 159) என்ற நிலையில் சிறிது நிற்க வேண்டும். பிறகு முன்னங்காலை ஊன்றி மெதுவாக முன்னே செல்ல வேண்டும். அப்போது பார்வை 'ஸமம்' என்ற சுபாவ நிலையில் இருக்க வேண்டும். பிறகு இரண்டு முன்னங்கால் களையும் சேர்த்து ஊன்றி முன்னே செல்லவேண்டும். இவ்

விதம் ஏழுமுறை செல்லவேண்டும். இதற்கு 'அக்ரப்லுதா சாரி' என்று பெயர்.

### ४. विद्युल्लीला चारी

समपादं समादाय स्थित्वा दक्षिणपादकम् ॥ ५०५ ॥

समुत्कम्प्य च वामाङ्घ्रिं पर्यायेण तदा क्रिया।
हस्तौ लताख्यौ ललितौ तत्तदौचित्यभावतः ॥ ५०६ ॥

एवं प्रणालिसंयुक्ता विद्युल्लीलाऽभिधा तु सा।

### 4. VIDYULLILA CARI

(505–507) Starting from Samapāda or normal pose, the dancer stands on the right foot and shakes the other foot upward; this is repeated with the feet changed. The hands hold the 'latā' mudra (Nṛtta Hasta No. 12 in p. 54), or 'Lalita' [1] mudra, according to circumstances.

### 4. வித்யுல்லீலா சாரி

(505–507) 'ஸமபாதம்' என்னும் சுபாவ நிலையில் ஆரம்பித்து, முதலில் வலது பாதத்தை ஊன்றி நின்று கொண்டு இடது பாதத்தை மேல்நோக்கி அசைத்தல் வேண்டும். பிறகு இடது பாதத்தை ஊன்றி வலது பாதத்தை மேல்நோக்கி அசைத்தல் வேண்டும். அப்போது கைகளில் லதாஹஸ்தமோ (ந்ருத்தஹஸ்தம் நெ. 12, பக்கம்

---

1. 'Lalita' — The description of this mudra is not found in our text. But it is described in Bharata's Natya Sastra as follows:— "When the hands with 'pallava' mudra are held about the head, it is called 'Lalita'." 'Pallava' mudra is defined thus:— 'When the pataka hand is allowed to hang freely from the wrist, it is called pallava'. — Vide Natya Sastra chap. 9, vv. 196 and 183 (Benares Edn.)

54), அல்லது [1] 'லலித' ஹஸ்தமோ சமயோசிதப்படி காட்டப்படலாம். இதற்கு 'வித்யுல்லீலா சாரீ' என்று பெயர்.

### ५. खड्गबन्धचारी ।

हस्तौ तु कर्तरीमुखौ ब्रह्मस्थानकमाचरेत् ॥ ५०७ ॥

ततो दक्षिणपादस्य पार्श्वाभ्यां चलनं पुनः ।
भावयेत्तत्पथा वामपादे पर्यायतस्ततः ॥ ५०८ ॥

आवृत्त्या भावसंभूता खड्गबन्धाख्यचारिका ।

### 5. KHAḌGABHANDHĀ CĀRĪ

(507–509) Starting from Brāhma Sthānaka (Sthānaka No. 25), both the hands holding Kartarīmukha mudra (Asamyuta Hasta No. 4), the dancer moves forward first on a side of the right foot (which had been bent for the Sthānaka) and then changing the position of the legs, on that of the left. A series of such repeated movements constitutes 'Khaḍgabandhā Cārī'.

### 5. கட்கபந்த சாரீ

(507–509) ப்ராம்ஹஸ்தானக (ஸ்தானகம் நெ. 25) த்தில் கைகளில் கர்த்தரீமுக முத்திரை (அஸம்யுத

---

1. 'லளித ஹஸ்தம்'—இந்த ஹஸ்தத்தின் விவரம் நமது நூலில் கிடைத்தவரையில் காணப்படவில்லை. ஆனால் அது பரதர் நாட்டியசாஸ்திரத்தில் அடியில் கண்டபடி விவரிக்கப்பட்டிருக்கிறது:— "கைகளை 'பல்லவ' முத்திரையுடன் தலைப்பக்கம் கொண்டுசென்றால் அதற்கு 'லளித ஹஸ்தம்' என்று பெயர்." 'பல்லவ' முத்திரையென்பது அடியிற்கண்டபடி விவரிக்கப்பட்டிருக்கிறது:—"பதாக முத்திரையோடு கூடிய கைகளை மணிக்கட்டிலிருந்து தொங்கவிட்டால் அதற்கு 'பல்லவம்' என்று பெயர்." நாட்டிய சாஸ்திரம் (காசிப்பதிப்பு) அத்தியாயம் 9, சுலோகம் 106, 183 இரண்டையும் பார்க்க.

ஹஸ்தம் நெ. 4) களைத்தாங்கி நிற்கும் நிலையில் ஆரம்பித்து, மடக்கி வைக்கப்பட்டிருக்கும் வலது காலின் பக்கத்தை ஊன்றி முன்னே செல்லவேண்டும். பிறகு கால்களை மாற்றிக்கொண்டு இடதுகாலின் புறத்தை ஊன்றிச்செல்ல வேண்டும். இப்படிச் செல்லும் சாரிக்குக் 'கட்கபந்த சாரி' என்று பெயர்.

## ६. रेखाबन्धचारी ।

विद्युल्लीला विपर्यासाद्रेखाबन्धाख्यचारिका ॥ ५०९ ॥

## 6. REKHĀBANDHA CĀRI

(509) If the movements in Vidyullila are reversed, that is to say, if the foot is shaken downward and backward or towards the sides instead of upward and forward, then the cāri is called Rēkhabandha cāri.

### 6. ரேகாபந்த சாரி

(509) வித்யுல்லிலா சாரியில் பாதங்களை அசைத்து மேலே முன்புறம் கொண்டுபோவதற்குப் பதிலாகக் கீழே பின்புறமாகவோ, அல்லது பக்கங்களிலோ செலுத்தினல் அதற்கு 'ரேகாபந்த சாரி' என்று பெயர்.

## ७. लुठितोल्ललिता चारी ।

उत्तानवञ्चितौ हस्तौ चरणौ लुठितौ तदा ।
दशधा नर्तनं कुर्यात् तस्य लक्षणमुच्यते ॥ ५१० ॥

लुठितौ चरणौ तत्र पर्यायेण प्रचालितौ ।
पुरोयाने पञ्चधा स्यात् पश्चाद्याने तथा भवेत् ॥ ५११ ॥

तस्माद्दशविधं प्रोक्तं लुठितोल्लालिता च सा ।

## 7. LUṬHITŌLLALITĀ CĀRI

(510–512) If the hands hold the Uttānavañcita (Samyuta Hasta No. 10, page 37) mudra and the legs are rotated in a wallowing manner and then shaken upward, and this is repeated by both the legs alternately proceeding five steps forward and five steps backward, then it is called 'Luṭhitōllalitā Cāri'.

## 7. லுடிதோல்லலிதா சாரி

*(510–512) கைகளில் உத்தான வஞ்சித முத்திரை (ஸம்யுத ஹஸ்தம் நெ. 10. பக்கம் 37) யைத்தாங்கிக் காலை நெளிவதுபோல் சுழற்றி நன்ருக அசைத்து மேலே கொண்டு செல்ல வேண்டும். இரண்டு கால்களையும் மாற்றி மாற்றி அசைத்து முன்புறம் ஐந்து அடிவைத்து, அதேவிதமாய்ப் பின்புறமும் ஐந்து அடிவைத்தால் அதற்கு 'லுடிதோல் லலிதா சாரி' என்று பெயர்.*

## ८. कुण्डलावर्तका चारी ।

हस्तौ च सूचिकाभिख्यौ कर्णदेशमुपागतौ ॥ ५१२ ॥

स्थित्वा वामांघ्रिणा भूमौ भ्रमणं दाक्षिणाङ्गतः ।
पश्चाद्विषमसञ्चारं कुर्यात्पर्यायतः पदोः ॥ ५१३ ॥

एवं त्रिधा विरचयेत् कुण्डलावर्तकेति सा ।

## 8. KUṆḌALĀVARTAKĀ CĀRI

(512–514) If the hands holding Sūcī mudra (Asamyuta Hasta No. 13) are held near the ears while the dancer rotates towards the right standing on the left foot, and then places the feet in the Viṣama Sañcāra manner, that is resting on a part of the foot,

and the movements are repeated thrice changing the legs, then the cāri is called 'Kuṇḍalāvartakā.'

8. குண்டலாவர்த்தகசாரி

(512–514) ஸூசி முத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 13) யுடன் கூடிய கைகளை காதுகளுக்குப் பக்கத்தில் வைத்துக்கொண்டு இடதுகாலால் நின்றுகொண்டு வலது புறமாகச் சுற்றிப் பிறகு விஷமசஞ்சரம் (அதாவது பாதங்களின் ஓர் பகுதியால் மட்டும் நடத்தல்) என்ற வகையில் அடிவைக்கவேண்டும். பிறகு கால்களை மாற்றிக்கொண்டு இடது பக்கமாகச் சுற்றி அதேவிதமாகப் பாதங்களை வைக்கவேண்டும். இப்படி மூன்று முறை செய்தால் அதற்குக் 'குண்டலாவர்த்தகசாரி' என்று பெயர்.

## ९. विचित्रा चारी ।

हस्तौ रेचितनामानौ स्थानमालीढनामकम् ॥ ५१४ ॥

प्रत्यालीढं स्थानकं च स्थाने चैते यथाक्रमात् ।
नवधा भावयेत्तत्र गत्योरावृत्तिभावतः ॥ ५१५ ॥

एवंविधैः समायुक्ता विचित्रा चारिका मता ।
एवमाकाशचारीणां लक्षणं कथितं मया ॥ ५१६ ॥

## 9. VICITRĀ CĀRI

(514–516) When the hands perform the movement called Rēcita,[1] that is to say, are briskly thrown

1. Recita or Recaka literally means 'throwing out'. They are four in number (i. e.) of the feet, of the hip, of the hands and of the neck. The word 'Recaka' is used in the sense of 'being separated', 'lifting up', or 'bending'. 'Hasta Recaka' the Recaka of the hands consists in contracting the arms up, and throwing them to and fro and from side to side, moving them about a fixed point, and moving

out repeatedly while the legs assume the standing pose of Ālīḍha (Sthānaka No. 12, page 164) and are then changed to Pratyālīḍha (Sthānaka No. 13, page 165) and these poses are changed alternately nine times, then the cāri is called ‘Vicitrā Cāri.’

Thus Ākasa Cāris have been described be me.

9. விசித்ரா சாரி

*(514–516) கைகளில் ரேசிதம்[1] என்ற உதறலோடு கூட ஆலீட (ஸ்தானகம் நெ. 12) நிலையில் நின்று பிறகு ப்ரத்யாலீடம் (ஸ்தானகம் நெ. 13) என்ற நிலைக்கு மாறி இவ்விதம் கால்களை மாற்றி 9 முறை நர்த்தனம் செய்வதற்கு ‘விசித்ராசாரி’ என்று பெயர்.*

*இவ்விதம் ஆகாசசாரிகள் என்னால் விவரிக்கப்பட்டன.*

## भूचार्यः ।

भूचार्यः कथिताः पूर्वं भरताद्यैर्मनीषिभिः ।

---

them away from the body by several short movements.

उद्वाहनात् पृथग्भावात् वलनाच्चाऽपि रेचकः ।
पादरेचक एकः स्यात् द्वितीयः कटिरेचकः ॥
कररेचस्तृतीयस्तु चतुर्थः कण्ठरेचकः ।
उद्वर्तनं परिक्षेपो विक्षेपः परिवर्तनम् ॥
विसर्पणं च हस्तस्य हस्तरेचकमुच्यते ॥

(Natya Sastra, Banaras Edn. Chapter IV verses 240, 241, 244, 245)

1. ‘ரேசிதம்’ என்பது வெளியே தள்ளுதல் என்ற பொருளுடையது. பிரித்தல், மேலே தூக்குதல், வெளியே உதறுதல், வளைத்தல் என்ற பொருளில் உபயோகப் படுத்தப்பட்டிருக்கிறது. ரேசகம் நான்கு வகைப்படும். பாதம், இடுப்பு, கைகள், கழுத்து, என்ற நான்கு அங்கங்களிலும் ப்ரயோகிக்கப்படும். ஹஸ்தரேசகம் என்பது கைகளைக் குறுக்குவது, வெளியே உதறுவது இங்குமங்கும் முன்னும் பின்னும், பக்கங்களிலும் அசைப்பது, சுற்றுவது உடம்பைவிட்டுப் பல அசைவுகளால் நகர்த்துவது இவைகளைக் குறிக்கும்.

तासां च लक्षणं वक्ष्ये हस्तपादानुसारतः ॥ ५१७ ॥

समपादश्चाषगतिः स्थितावर्ता तु विच्यवा ।
ऊरूद्वृत्ता त्वड्डिताऽऽस्यबन्धा च जनिताऽपि च ॥ ५१८॥

उत्स्यंदिता स्यन्दिता च शकटास्या ततः परम् ।
स्यादपस्यंदिता चारी कीर्तिता पूर्वशास्त्रगैः ॥ ५१९ ॥

समोत्सारितमत्तल्ली मत्तल्लीचारिकापि च ।
अध्यर्धिकाख्या चारी स्यात् एडकाक्रीडिताऽपि च ॥

एताः षोडश भूचार्यः कीर्तिता भरतार्थगैः ।

## THE MOVEMENTS OF THE LEGS ON THE GROUND

(517-521) I shall now describe the Bhū Carīs or the movements of the leg on the ground as mentioned by great authorities like Bharata. I shall explain not only the movements of the legs but also the movements of the hands that accompany them.

The movements of legs on the ground are:— 1. Sama Pāda 2. Cāṣa Gati 3. Sthitāvartā 4. Vicyavā 5. Ūrūdvṛttā 6. Aḍḍitā 7. Vaktra Bandhā 8. Janitā 9. Utsyanditā 10. Syandita 11. S'akaṭāsyā 12. Apasyanditā 13. Samōtsārita Mattallī 14 Mattalli 15. Adhyardhikā 16. Eḍakākrīḍitā.

These are the 16 Bhū Cāriṣ according to the authorities on the subject.

**பூமி சாரி**

(தரையைத் தொடும் சாரிகள்)

(517–521) இப்பொழுது பரதர் முதலியவர்களால் விவரிக்கப்பட்டிருக்கிறபடி பூமி சாரிகளை விவரிக்கப்போகிறேன். அப்பூமிசாரிகளோடு சேர்த்துக் காட்டப்பட வேண்டிய ஹஸ்த முத்திரைகளையும் விவரிக்கிறேன்.

பூமி சாரிகள் 16. அவையாவன:— 1. ஸம பாதம் 2. சாஷகதி 3. ஸ்திதாவர்த்தா 4. விச்யவா 5. ஊருத்வ்ருத்தா 6. அட்டிதா 7. வக்த்ரபந்தா 8. ஜனிதா 9. உத்ஸ்யந்திதா 10. ஸ்யந்திதா 11. சகடாஸ்யா 12. அபஸ்யந்திதா 13. ஸமோத்ஸரித மத்தல்லீ 14. மத்தல்லீ 15. அத்யர்த்திகா 16. ஏடகா க்ரீடிதா.

**चारीयुता हस्ताः ।**

यत्केवलेन पादेन नृत्तं सा चार्युदाहृता ॥ ५२१ ॥

एवं विचार्य कविभिः चारीहस्तास्तु कीर्तिताः ।
अनुज्ञया महेशस्य भूचारीणां यथाक्रमम् ॥ ५२२ ॥

सुमते हस्तभेदोऽत्र विशेषेण मयोच्यते ।
अतः परं प्रवक्ष्यामि तासामेव निरूपणम् ॥ ५२३ ॥

दोलाख्यौ त्रिपताकौ च सार्धचन्द्रौ च हस्तकौ ।
हंसपक्षौ करौ स्यातां ततोऽप्यर्धपताककौ ॥ ५२४ ॥

कर्तरीस्वस्तिकौ हस्तौ रेचिताख्यौ ततः परम् ।
अर्धरेचितहस्तौ तु मुष्टिश्च शिखरोऽपि च ॥ ५२५ ॥

वैष्णवाभिधहस्तौ तु नलिनीपद्मकोशकौ ।
सिंहाख्यौ च कपित्थौ च स्यातामाविद्धवक्त्रकौ ॥ ५२६ ॥

एते हस्तास्समाख्याता भूचारीणां यथाक्रमम् ।

(521-527) That part of the dance movements that pertains to the leg is called Cāri. It has therefore been found necessary to describe separately the poses of the hand that accompany the cāris. With the permission of Lord S'iva, I shall now give you the names of those Hastas:—

1. Dōla Hasta (Samyuta Hasta No. 6) 2. Tripatāka Hasta (Asamyuta Hasta No. 2) 3. Ardhacandra Hasta (Asamyuta No. 6) 4. Hamsapakṣa Hasta (Asamyuta No. 24) 5. Ardha Patāka (Asamyuta Hasta No. 3) 6. Kartarīmukha Hasta (Asamyuta No. 4) 7. Rēcita Hasta (Nṛtta Hasta No. 7) 8. Ardha Rēcita Hasta (Nṛtta Hasta No. 8) 9. Muṣṭi Hasta (Asamyuta No. 9) 10. S'ikhara (Asamyuta No. 10) 11. Vaiṣṇava Hasta (Samyuta Hasta No. 16) 12. Naḷinīpadmakōs'a Hasta (Nṛtta Hasta No. 20) 13. Simha Hasta (Asamyuta No. 18) 14 Kapittha Hasta (Asamyuta No. 11) 15. Āviddha Vaktra Hasta (Nṛtta No. 5)

I have now serially given you the names of the poses of the hands that are used with the cāris.

(521–527) காலினால் மட்டும் செய்யப்படும் நர்த்தனத்தின் பகுதிக்குச் 'சாரி' என்று பெயர். ஆகையால் அந்தந்த சாரிகளோடு சேரக்கூடிய ஹஸ்தங்களைத் தனியாக விவரித்திருக்கிறார்கள். சிவபெருமானின் அனுமதியின்பேரில் அவ்விதம் சாரிகளோடு சேரும் ஹஸ்தங்களை உனக்கு விவரிக்கிறேன். அவை பின்வருமாறு :—

1. டோல ஹஸ்தம் (ஸம்யுத ஹஸ்தம் நெ. 6) 2. த்ரி

பதாக ஹஸ்தம் (அஸம்யுத ஹஸ்தம் நெ. 2) 3. அர்த்த சந்திர ஹஸ்தம் (அஸம்யுதம் நெ. 6) 4. ஹம்ஸபக்ஷ ஹஸ்தம் (அஸம்யுதம் நெ. 24) 5. அர்த்தபதாகம் (அஸம்யுதம் நெ. 3) 6. கர்த்தரீமுக ஹஸ்தம் (அஸம் யுதம் நெ. 4) 7. ரேசித ஹஸ்தம் (ந்ருத்த ஹஸ்தம் நெ. 7) 8. அர்த்தரேசித ஹஸ்தம் (ந்ருத்த ஹஸ்தம் நெ. 8) 9. முஷ்டி ஹஸ்தம் (அஸம்யுதம் நெ. 9) 10. சிகர ஹஸ் தம் (அஸம்யுதம் நெ. 10) 11. வைஷ்ணவ ஹஸ்தம் (ஸம்யுத ஹஸ்தம் நெ. 16) 12. நளினீ பத்மகோச ஹஸ் தம் (ந்ருத்த ஹஸ்தம் நெ. 20) 13. ஸிம்ஹ ஹஸ்தம் (அஸம்யுதம் நெ. 18) 14. கபித்த ஹஸ்தம் (அஸம்யுதம் நெ. 11) 15. ஆவித்தவக்த்ர ஹஸ்தம் (ந்ருத்த ஹஸ்தம் நெ. 5).

சாரிகளோடு சம்பந்தப்பட்ட ஹஸ்தங்கள் வரிசை யாகச் சொல்லப்பட்டன.

## १. समपादचारी ।

एतत्स्वरूपं संवक्ष्ये लक्ष्यलक्षणपूर्वकम् ॥ ५२७ ॥
पश्चात्पुरस्तात्पार्श्वे च पादयोः श्लिष्टयोर्यदा ।
चलनं स्यात्तदा चारी समपादोदिता बुधैः ॥ ५२८ ॥

(527–528) I shall now describe in detail the movements of the cāris on the ground as laid down by authorities and observed in practice.

## 1. SAMA PĀDA CĀRĪ

When the feet are kept close while proceeding forward, backward or sideways then the cāri is called 'Sama Pāda'.

### 1. ஸமபாத சாரி

*(527–528)* இப்போது பூமிசாரிகளின் அசைவுகளை

சாஸ்திரப்படியும் சம்பிரதாயப்படியும் பாதங்களை முன்னும், பின்னும், பக்கங்களிலும் நகர்த்தும்போது இரு பாதங்களும் சேர்ந்தே இருக்குமானால் அதற்கு 'ஸமபாத சாரி' என்று பெயர்.

## २. चाषगतिः ।

त्रितस्तिमात्रप्रसृतो दक्षिणश्चरणोऽग्रतः ।
अनेनैव क्रमेण स्याच्चारी चापकनिर्मिता ॥ ५२९ ॥

## 2. CĀṢA GATI

(529) When the feet that are kept close to each other are moved forward one after the other by allowing each foot to advance by one span, and the right foot starts the movement, then it is called 'Cāṣa Gati'.

## 2. சாஷ கதி

*(529)* இரண்டு பாதங்களையும் சேர்த்து வைத்துக் கொண்டு ஒவ்வொன்றையும் ஒரு சாண் முன்னே நகர்த்திக் கொண்டு செல்வதற்குச் 'சாஷ கதி' என்று பெயர். இந்த சாரியில் வலது காலை முதலில் நகர்த்த வேண்டும்.

## ३. स्थितावर्ता चारी ।

अङ्घ्रिणा क्षितिघृष्टेन विधायान्तरमण्डलम् ।
तदन्यमुत्क्षिपेद्यत्र स्थितावर्ता तु सा भवेत् ॥ ५३० ॥

## 3. STHITĀVARTA

(530) When one of the feet is made to move describing a circular curve and the other foot is then joined with the former, it is called 'Sthitāvarta Cārī'.

3. ஸ்திதாவர்த்தா சாரி

(530) ஒரு பாதத்தை ஓர் வட்டமார்க்கமாக நகர்த்தி, மற்றொரு பாதத்தை அதனோடு சேர்த்துக்கொண்டு இவ்வாறு செல்லுவதற்கு 'ஸ்திதாவர்த்தா சாரி' என்று பெயர்.

## ४. विच्यवा चारी ।

विश्लिष्टयोश्चरणयोस्समयोरत्र भागतः ।
भूमेः स्यात्कुट्टनं यत्र सा चारी विच्यवोच्यते ॥ ५३१ ॥

## 4. VICHYAVĀ CĀRĪ

(531) When one of the feet that are kept close together is separated and that foot stamps on the ground, such a movement is called 'Vichyavā Cārī'.

4. விச்யவா சாரி

(531) சேர்ந்திருக்கும் இரு பாதங்களில் ஒன்றைப் பிரித்து அதனால் பூமியைத் தட்டினால் அதற்கு 'விச்யவா சாரி' என்று பெயர்.

## ५. ऊरूद्वृत्ता चारी ।

पार्ष्णिर्बाह्योन्मुखो यत्र पादोऽग्रतलसंचरः ।
जङ्घा तु कुञ्चिता किञ्चिदूरूद्वृत्तेति सा मता ॥ ५३२ ॥

## 5. ŪRŪDVṚTTA CĀRĪ

(532) If one of the feet is raised as if the heel is ready to go out, the knee is bent, and the foot is then brought to rest on the ground on its fore-foot, such a movement is called 'Ūrūdvṛtta'.

5. ஊருத்வ்ருத்த சாரி

(532) குதிகால் வெளிவரத் தயாராக இருப்பதுபோல் பாதத்தை உயர்த்தி, முழங்காலை மடக்கிப் பிறகு முன்னங் காலில் நின்ருல் அதற்கு 'ஊருத்வ்ருத்தசாரி' என்றுபெயர்.

## ६. अड्डिता चारी ।

श्लिष्टाभ्यां चरणाग्राभ्यामग्रतः पृष्ठतोऽपि वा ।
भवेत्सञ्चरणं यत्र सैषा स्यादड्डिताऽभिधा ॥ ५३३ ॥

6. AḌḌITĀ CĀRĪ

(533) When the fore-feet are kept closed and the dancer moves forward or backward on the ground resting on such fore-feet (that is by short movements) then it is called 'Aḍḍitā Cārī'.

6. அட்டிதா சாரி

(533) இரு நெருங்கிய முன்னங்கால்களில் நின்று கொண்டு மெதுவாகக்கால்களை நகர்த்தி முன்புறம் சென்ருல் அதற்கு 'அட்டிதா சாரி' என்று பெயர்.

## ७. वक्त्रबन्धा चारी ।

सव्यापसव्यौ चरणौ असकृत्स्वस्तिकीकृतौ ।
जानुदेशे प्रचलितौ वक्त्रबन्धेति सा मता ॥ ५३४ ॥

7. VAKTRA BANDHĀ CĀRĪ

(534) If the right and left foot are frequently crossed and the knees are shaken it is called 'Vaktra Bandhā Cārī'.

### 7. வக்த்ர பந்தா சாரி

(534) பாதங்களை ஒன்றுக்கொன்று அடிக்கடி குறுக்காக வைத்து முழங்கால்களை அசைத்தால் அதற்கு 'வக்த்ரபந்தாசாரி' என்று பெயர்.

### ८. जनिता चारी ।

वक्षसः पार्श्वभागे च हस्तस्तु खटकामुखः ।
रेचितस्त्वमितस्त्वन्यपादोऽग्रतलसञ्चरः ॥ ५३५ ॥
इयं तु जनिता प्रोक्ता भरतार्थविचक्षणैः ।

### 8. JANITĀ CĀRĪ

(535–536) If one of the hands holding Khaṭakāmukha mudrā at the level of the chest is thrust out by a Rēcita or cutting movement while the leg on the other side is moved forward on its fore-foot, then it is called 'Janitā Cārī'.

### 8. ஜனிதா சாரி

ஒரு கையில் கடகாமுக முத்திரையை மார்புக்கு நேரே தாங்கி வெட்டுவதுபோல அசைவு கொடுத்து மற்றொரு பக்கத்து முன்னங்காலால் நகர்ந்தால் அதற்கு 'ஜனிதா சாரி' என்று பெயர்.

### ९. उत्स्यन्दिता चारी ।

अङ्घ्रेर्विवर्तनं शीघ्रं अन्तर्वा बहिरेव वा ॥ ५३६ ॥
रेचकस्यानुकारेण यत्र सोत्स्यंदिता मता ।

### 9. UTSYANDITĀ

(536–537) If the feet are quickly turned inward

or outward as in a Rēcaka[1] movement then the cārī is called 'Utsyandita'.

### 9. உத்ஸ்யந்திதா

(536–537) கால்களை உட்புறமாகவோ, வெளிப்புறமாகவோ வேகமாக ரேசக[2] அசைவுகளைப்போல் திருப்பினுல் அதற்கு 'உத்ஸ்யந்திதா சாரி' என்று பெயர்.

## १०. स्यंदिता चारी ।

वामस्समो निषण्णोऽत्र यत्रान्योऽङ्घ्रिः प्रसारितः ॥ ५३७ ॥
पंचतालांतरं तिर्यक् यत्र सा स्यंदिता मता ।

### 10. SYANDITA CĀRĪ

(537–538) When the left foot is placed in the normal position and the weight of the body is rested on it and the other foot is extended in an oblique direction to a distance of five spans then it is called 'Syandita Cārī'.

### 10. ஸ்யந்திதா சாரி

(537–538) இடது பாதத்தை சுபாவமான நிலையில் ஊன்றி உடம்பின் பாரத்தை அதன்மேல் பொருத்தி மற்றொரு காலைக் குறுக்காக ஐந்துசாண் தூரத்தில் நீட்டினுல் அதற்கு 'ஸ்யந்திதா சாரி' என்று பெயர்.

---

1. Recaka of the foot is described as follows in Natya Sastra :— 'Going from side to side with slippery or shaken feet and other movements of varied kinds constitute Pada Recaka'. Vide :- Natya Sastra Chapter 1V verses 242 and 243.

2 பாதரேசகம் என்பது நாட்டிய சாஸ்திரத்தில் அடியிற்கண்டபடி விவரிக்கப்பட்டிருக்கிறது. "பாதங்களை வழுக்கினுற்போலவோ அல்லது அசைவுகளுடனே பக்கத்துக்குப்பக்கம் நகர்த்தினுலும் அல்லது விசித்திரமான அசைவுகளைக்கொடுத்தாலும் அதற்கு பாதரேசகம் என்று பெயர்".

## ११. शकटास्या चारी ।

प्रसारिताग्रचरणं चारेदंगं ससौष्ठवं ॥ ५३८ ॥
भवेद्यस्यामियं चारी शकटास्याभिधीयते ।

## 11. S'AKAṬĀSYĀ CĀRI

(538-539) When the body is held in well-formed posture while the fore-foot is extended, the Cāri is called 'S'akaṭāsyā Cārī'.

## 11. சகடாஸ்ய சாரி

*(538–539) உடம்பு நிமிர்ந்த நிலையில் முன்னங்கால் முன்புறமாக நீட்டப்பட்டால் அதற்கு 'சகடாஸ்யா' சாரி என்று பெயர்.*

## १२. अपस्यंदिता चारी ।

स्यंदिताया विपर्यासात्स्यादपस्यंदिता मता ॥ ५३९ ॥

## 12. APASYANDITA CĀRĪ

(539) If the feet are interchanged in Syanditā Cārī then it is called 'Apasyandita Cāri'.

## 12. அபஸ்யந்திதா சாரி

*(539) ஸ்யந்திதா சாரியில் கால்களை மாற்றி உபயோகித்தால் அதற்கு 'அபஸ்யந்திதாசாரி' என்று பெயர்.*

## १३. समोत्सरितमत्तल्ली चारी ।

पादाभ्यां सरणाच्छीघ्रं चरणाच्चोपसर्पणे ।
समोत्सरितमत्तल्ली चारीयं परिकीर्तिता ॥ ५४० ॥

## 13. SAMŌTSARITA MATTALLI

(540) When the feet are first slowly moved and then quick steps are taken by way of approach the Cārī is called 'Samōtsarita Mattallī'.

## 13. ஸமோத்ஸரித மத்தல்லீ

(540) பாதங்களை முதலில் மெதுவாக நகர்த்திப் பிறகு வேகமாக அடிவைத்து நெருங்கினால் அதற்கு 'ஸமோத்ஸரித மத்தல்லீ' என்று பெயர்.

## १४. मत्तल्ली चारी ।

पादद्वयस्य चलनात् यत्र स्यादुपसर्पणे ।
उद्वेष्टितापविद्धाख्यौ हस्तौ मत्तल्लिका च सा ॥ ५४१ ॥

## 14. MATTALLĪ CARĪ

(541) When both the feet are moved forward in a shaky manner while at the same time the winding motion of Udvēṣṭita [1] and the free motion of Apaviddha [2] are performed, then the Cārī is called 'Mattallī Cārī'.

---

1. The winding motions of the hand called 'Hasta Karanas' which are generally employed while changing from one mudra to another are four in number and are described as follows in Natya Sastra. They are (1) Udvestita (2) Apasvestita, Avestita, or Parivestita (3) Udvartita (4) Avartita or Parivartita. The 2 Vestitas are winding motions where the first finger moves first. In the 2 vartitas the little finger moves first; the winding motion is directed upward in karanas of Udvestita and Udvartita and they are directed towards the sides in the others. And it is laid down that when the karanas are performed, the face, the eye-brows and the eyes should follow the movements of the hand, both in Abhinaya and Nartana.

— Natya Sastra Chapter X verses 199 to 204.

2. Apaviddha is one of the free movements of the hands that are detailed in Natya Sastra. They are (1) Tiryaggatam (obique direction) (2) Urdvagatam (upward) (3) Adhomukham (down-

### 14. மத்தல்லீ சாரி

(541) பாதங்கள் இரண்டையும் அசைத்துக் கொண்டு முன்னே செல்லும்போது கைகள் இரண்டையும் உத்வேஷ்டிதம்[3] என்ற முறையில் சுழற்றி அபவித்தம்[4] என்ற முறையில் கையை வீசினால் அதற்கு 'மத்தல்லீ சாரி' என்று பெயர்.

## १५. अध्यर्धिका चारी ।

पश्चाद्दक्षिणपादस्य गमनादितरस्य तु ।
अपसर्पणयोगेन भवेदध्यर्धिकाह्वया ॥ ५४२ ॥

### 15. ADYARDHIKĀ

(542) When the right foot is placed behind the left as if in an attempt to go back, the Cārī is called 'Adyardhikā'.

---

ward) (4) Aviddham (inward) (5) Apaviddham (outward) (6) Mandalam (circular) (7) Swastikam (crossed) (8) Ancitam (bent) (9) Kuncitam (shortened) (10) Prsthakam (backward).

— Natya Sastra Chapter IX verses 199 to 204.

3. பொதுவாக முத்திரைகளை ஒன்றிலிருந்து மற்றொன்றுக்கு மாற்றும் போது கைகளை அழகாகச் சுழற்றுவதற்கு ஹஸ்தகரணங்கள் என்று பெயர். அவை நான்கு (1) உத்வேஷ்டிதம் (2) அபவேஷ்டிதம், ஆவேஷ்டிதம் அல்லது பரிவேஷ்டிதம் (3) உத்வர்த்திதம் (4) ஆவர்த்திதம் அல்லது பரிவர்த்திதம். உத்வேஷ்டிதம், உத்வர்த்திதங்களில் கைகள் மேலே செல்ல வேண்டும். மற்ற இரண்டிலும் பக்கங்களில் செல்லவேண்டும். வேஷ்டிதம் இரண்டிலும் ஆள்காட்டிவிரல் முன்னே செல்லவேண்டும். வர்த்திதம் இரண்டிலும் சுண்டுவிரல் முன்னே செல்லவேண்டும்.

4. அபவித்தம் என்பது 10 வகைக் கைவீச்சுக்களில் ஒன்று. அவைகள் 1. திர்யக்கதம் (குறுக்கே வீசுதல்) 2. ஊர்த்வகதம் (மேல் நோக்கி வீசுதல்) 3. அதோமுகம் (கீழ் நோக்கி வீசுதல்) 4. ஆவித்தம் (உட்புறம் வீசுதல்) 5. அபவித்தம் (வெளிப்புறம் வீசுதல்) 6. மண்டலம் (வட்டமாக வீசுதல்) 7. ஸ்வஸ்திகம் (இருகைகளையும் குறுக்காக இருக்கும்படி வீசுதல்) 8. அஞ்சிதம் (மடக்குதல்) 9. குஞ்சிதம் [குறுக்கல்] 10. ப்ருஷ்டகம் [பின்புறம் வீசுதல்]. —நாட்டிய சாஸ்திரம் IX அத்தியாயம் 205-206.

### 15. அத்யர்த்திகா

(542) பின்னால் செல்ல யத்தனிப்பதுபோல் வலது பாதத்தை இடது பாதத்தின் பின் பிறமாக வைத்தால் அதற்கு 'அத்யர்த்திகா சாரி' என்று பெயர்.

### १६. एडकाक्रीडिता चारी ।

पादयोस्सरणं यत्र भवेदुत्पतितो यदि ।
एडकाक्रीडिता प्रोक्ता नाट्ययोगविशारदैः ॥ ५४३ ॥
एवं षोडश भूचार्यः कथिता लक्षणैः पृथक् ।

इति नन्दिकेश्वरविरचिते भरतार्णवे सुमतिबोधके चारीद्वयप्रकरणं नाम अष्टमोऽध्यायः ॥

---

### 16. ḚḌAKĀKRĪḌITĀ CĀRI

(543) When the feet first move slowly and then step forward with a bound, the Cārī is called 'Ēḍakā-krīḍita '.

Thus the 16 Bhū Cārīs have been described by me in detail.

**Here ends the Chapter VIII dealing with the two kinds of Cārīs in Bharatārṇava of Nandikeśwara addressed to Sumati.**

---

### 16. ஏடகாக்ரீடிதம்

(543–544) பாதங்களை மெதுவாக நகர்த்திப் பிறகு குதித்துச் சென்றால் அதற்கு 'ஏடகா க்ரீடிதம்' என்று

பெயர். இவ்வாறு 16 வித பூமிசாரிகளும் என்றால் விரிவாக விவரிக்கப்பட்டன.

இதனுடன் ஸாமதிக்கு நந்திகேசுவரரால் அருளப்பட்ட பரதார்ணவத்தில் சாரிகளைப் பற்றிய எட்டாவது அத்தியாயம் முற்றுப் பெற்றது.

---

## नवमोऽध्यायः ।

## अङ्गहारप्रकरणम् ।

ललितो विक्रमश्चैव पश्चात्कारुणिको भवेत् ॥ ५४४ ॥

विचित्रो विकलश्चैव भीमश्च तदनन्तरः ।
विकृतोग्रतरौ चैव शान्तजश्च ततः परम् ॥ ५४५ ॥

इत्येवमङ्गहाराणां नामलक्षणमीरितम् ।
ललितः पञ्चधा प्रोक्तो विक्रमस्त्रिविधो भवेत् ॥ ५४६ ॥

चतुर्विधः कारुणिको विचित्रोऽपि द्विधा भवेत् ।
विकलोऽपि द्विधा प्रोक्तो भीमश्च द्विविधो भवेत् ॥ ५४७ ॥

विकृतो द्विविधः प्रोक्तस्तथैवोग्रतरो भवेत् ।
शान्तजश्च द्विधा प्रोक्तो भरतार्थविवेकिभिः ॥ ५४८ ॥

## CHAPTER IX

### AṄGAHĀRAS [1]

(544–548) Aṅgahāras are finished pieces of Pure Dance and are of nine kinds.

---

1. Angaharas are finished pieces of pure dance that originally formed part of Lord Siva's and Sri Parvati's Dances. The mudras of hand in pure dance have generally no definite significance as in abhinaya or gesticular representation, but are intended only to add

They are :— 1. Lalita (corresponding to Sṛngāra Rasa) 2. Vikrama (corresponding to Vīra Rasa) 3. Kāruṇika (corresponding to Karuna Rasa) 4. Vicitra (corresponding to Adbhuta Rasa) 5. Vikala (corresponding to Hāsya Rasa) 6. Bhīma (corresponding to Bhayānaka Rasa) 7. Vikṛta (corresponding to Bhībhatsa Rasa) 8. Ugratara (corresponding to Roudra Rasa) and 9. S'āntaja (corresponding to S'ānta Rasa). Lalita Angahāra has five forms. Vikrama Angahara has three forms. Kārunika Angahāra has four forms. Vicitra Angahāra has two forms. Vikala Angahāra has two forms. Bhīma Angahāra has two forms. Vikrita Angahāra has two forms. Ugratara Angahāra has two forms and S'āntaja Angahara has two forms.

## அத்தியாயம் 9

## அங்கஹாரங்கள் [2]

*அங்கஹாரங்கள் அல்லது நர்த்தனப்பகுதிகள் ஒன்பது*

---

grace to the dance movements. But the total effect of each Angahara or finished piece has still an emotional appeal of its own and the above classification of Angaharas into the nine varieties, each corresponding to a rasa or aesthetic appeal is therefore quite justified. It is a rare and valuable addition to the description of the Angaharas in the Natya Sastra and later texts where they are merely classified into two groups according to the internal gait of the talas pertaining to them whether they are of 4 steps or 3 steps. Each group in that classification consists of 16 Angaharas. Those 32 Angaharas are not however so simple as the nine groups mentioned here, but are more complex, each Angahara consisting of a number of 'karanas' or dance units of which 108 are described in text books. Finding out the particular aesthetic appeal of each of the 32 angaharas has yet to be attempted; and in such attempt the 9 classes given here may serve as a guiding factor.

2. அங்கஹாரம் என்பது சிவபெருமானும் பார்வதிதேவியும்

வகைப்படும். அவை வருமாறு ;—

(544–548) 1. லலிதம் (ச்ருங்கார ரஸப்ரதானமானது) 2. விக்ரமம் (வீரரஸப்ரதானமானது) 3. காருணிகம் (கருண ரஸப்ரதானமானது) 4. விசித்திரம் (அத்புத ரஸப்ரதானமானது) 5. விகலம் (ஹாஸ்ய ரஸப்ரதான மானது) 6. பீமம் (பயாநக ரஸப்ரதானமானது) 7. விக்ருதம் (பீபத்ஸ ரஸப்ரதானமானது) 8 உக்ரதரம் (ரௌத்ர ரஸப்ரதானமானது) 9. சாந்தஜம் (சாந்த ரஸப்ரதான மானது). லலித அங்கஹாரத்தில் ஐந்து உட் பிரிவுகளும், விக்ரம அங்கஹாரத்தில் மூன்று உட்பிரிவுகளும், காருணிக அங்கஹாரத்தில் நான்கு உட்பிரிவுகளும், விசித்திர அங்க ஹாரத்தில் இரண்டு உட்பிரிவுகளும், விகல அங்கஹாரத் தில் இரண்டு உட்பிரிவுகளும், பீம அங்கஹாரத்தில் இரண்டு உட்பிரிவுகளும், விக்ருத அங்கஹாரத்தில் இரண்டு உட்பிரிவுகளும், உக்ரதர அங்கஹாரத்தில் இரண்டு உட் பிரிவுகளும், சாந்தஜ அங்கஹாரத்தில் இரண்டு உட்பிரிவு களும் அடங்கியுள்ளன.

---

செய்த நர்த்தனத்தின் ஓர் பகுதிக்குப் பெயர். நர்த்தனத்தில் உப யோகப்படும் முத்திரைகளுக்கு அபிநயத்தில் உள்ளதுபோல் ஒரு குறிப்பிட்ட பொருள் கிடையாது. முத்திரைகள் நர்த்தனத்திற்கு அழகு செய்யவே சேர்க்கப்பட்டிருக்கின்றன. ஆயினும் ஒவ்வொரு நர்த்தனப்பகுதியிலுமுள்ள அசைவுகள் சேர்ந்து ஓர் தனியான ரஸ பாவத்தையுடையதாக அமையும். இந்தக்காரணத்தினுல் இந்த நூலில் அங்கஹாரங்களை நவரஸங்களுக்கு உரித்தான ஒன்பது வகைகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. இவ்விதப்பிரிவினை இந்த நூலில் மட்டும் காணப்படுகிறதேயல்லாமல் அங்கஹாரங்களைப்பற்றி நாட்டிய சாஸ் திரம் முதலிய நூல்களில் இவ்விதப்பிரிவினை காணப்படவில்லை. நாட்டிய சாஸ்திரத்தில் விவரிக்கப்பட்டிருக்கும் 32 அங்கஹாரங்களை இரண்டு பிரிவுகளாகப் பிரித்து அவைகள் முறையே சதுரச்ரம் (4) திரியச்ரம் (3) என்ற உள் நடையையுடைய தாளங்களுடையவை என்று, சொல்லப்பட்டிருக்கிறது. அந்த 32 அங்கஹாரங்களும் இங்கு விவரிககப்படுகிற அங்கஹாரங்களைப்போல் எளிதானவையல்ல. ஒவ்வொன்றிலும் பல காணங்கள் அல்லது நாத்தனப்பகுதிகள்

## १. ललितः (प्रथमः)।

आयतस्थानके स्थित्वा नृत्येन सुलुमाश्रयेत्।
समदृष्ट्या समायुक्तो ललितः प्रथमो भवेत्॥ ५४९॥

## 1. LALITA No. 1

(549) Standing in Āyata Sthānaka (Sthānaka No. 1 in page 176) the dancer has to perform a 'Sulu' [1] or a gentle wavy motion of the body, with the eyes assuming the normal look. This is the first variety of Lalita Aṅgahāra.

## 1. லலிதம் (முதல் வகை)

*(549) ஆயதஸ்தானகத் (ஸ்தானகம் நெ. 1 பக்கம் 176) தில் நின்றுகொண்டு ஸுலு [2] என்னும் அழகான அசைவுகளுடன், சுபாவமான பார்வையுடன் நர்த்தனம் செய்தால் அது லலித அங்கஹாரத்தின் முதல் பிரிவாகும்.*

## २. ललितः (द्वितीयः)।

अवहित्थस्थानकेन सुलूनर्तनभाविकः।

---

*சேர்ந்திருக்கின்றன. அவைகளின் ரஸபாவங்களைப்பற்றி ஆராய்ச்சி செய்து இனி நிச்சயிக்கப்படவேண்டியிருக்கின்றன. அவ்வித ஆராய்ச்சியில் இங்கே விவரிக்கப்பட்ட அங்கஹாரங்கள் பெரிதும் உதவக்கூடியவை.*

1. 'Sulu' is defined in Sangita Darpana as the graceful wavy motion of the whole body as a flame in a soft breeze.

मन्दानलचलद्दीपशिखेवाङ्गस्य चालनम्।
सुलूशब्देन तत्वज्ञैः नटैस्तत् प्रतिपाद्यते॥

—(Sangita Darpanam chap. 7, verse 27.)

2. *மெதுவான காற்றில் ஓர் தீபச்சுடரைப்போல் அழகாக உடம்பை அசைப்பதற்கு 'ஸுலு' என்று பெயர். [ஸங்கீத தர்ப்பணம் 7-வது அத்தியாயம் 27-வது சுலோகம்] இதையே நாம் 'மேனி மினுக்குதல்' என்று சொல்வதுண்டு.*

सूचनादृष्टिसंभूतो ललितश्च द्वितीयकः ॥ ५५० ॥

## 2. LALITA No. 2

(550) Standing in Avahittha (Sthānaka No. 2 page 176) posture and assuming the look of Sūcana or 'pointing out', the dancer performs dance movements maintaining the 'Sulū' movement of the body. This is the second variety of Lalita Aṅgahāra.

**2. லலிதம் *(இரண்டாவது வகை)***

*(550) லலித அங்கஹாரத்தின் இரண்டாவது பிரிவில் அவஹித்த ஸ்தானகத் (ஸ்தானகம் நெ. 2 பக்கம் 176) தில் நின்றுகொண்டு 'ஸூசனம்' என்ற குறிப்பான பார்வையுடன், 'ஸூலூ' என்ற அழகான அசைவுகளுடன் நர்த்தனம் செய்யவேண்டும்.*

## ३. ललितः (तृतीयः)।

पादाभ्यां कुट्टनयुतो हंसहस्तौ तु चालितौ ।
अग्रतः पार्श्वयोश्चैव ललिताख्यस्तृतीयकः ॥ ५५१ ॥

## 3. LALITA No. 3

(551) When the dance is accompanied by stamping of the foot and the waving of the hands holding Hamsapakṣa mudra (Asamyuta Hasta No. 24) forward and sideward, it is the third variety of Lalita.

**3. லலிதம் *(மூன்ருவது வகை)***

*(551) காலைப் பூமியில் தட்டி கைகளில் ஹம்ஸபக்ஷ முத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 24) யைத்தாங்கி முன்புறமாகவும் பக்கங்களிலும் அசைத்துக்கொண்டு நர்த்தனம் செய்வது லலிதத்தின் மூன்ருவது பிரிவாகும்,*

## ४. ललितः (चतुर्थः)।

हस्तौ तु रेचिताकारौ सुलूनृत्तानुभाविनौ।
वामपादाग्रसरणाल्ललितश्च चतुर्थकः ॥ ५५२ ॥

## 4. LALITA No 4

(552) If the hands are held in the manner of 'Rēcita', that is of the cutting or turning pose while the dancer performs the dance with 'Sulu' movements, and proceeds by slowly moving the left foot on the ground, it is called Lalita of the fourth variety.

## 4. லலிதம் (நான்காவது வகை)

(552) கைகளை 'ரேசிதம்' என்ற அசைவு வகையில் அசைத்துக்கொண்டு, அதாவது, திருப்புவது, வெட்டி உதறுவது போன்ற அசைவுகளோடும், 'ஸுலூ' என்ற அழகிய மேனிமினுக்குடனும், நர்த்தனம் செய்துகொண்டு, இடதுகாலை பூமியின் பேரில் நகர்த்திக்கொண்டு மெதுவாக முன்னே செல்லுவதே லலித அங்கஹாரத்தின் நான்காவது வகையாகும்.

## ५. ललितः (पञ्चमः)।

कटिस्थशशिहस्तेन लंबिना शिखरेण च।
चलनाभिधपादौ च ललितः पञ्चमो भवेद् ॥ ५५३ ॥

## 5. LALITA No. 5

(553) When one of the hands holding 'Ardhacandra' mudra (Asamyuta No. 6), is placed at the hip, and the other hand holding 'S'ikhara' mudra (Asamyuta No. 10) is allowed to hang freely down, while the dancer dances with the foot movement of 'Calana'

( Pāda No. 1 in page 135 ), then it is the 'Lalita' of the fifth variety.

5. லலிதம் (ஐந்தாவது வகை)

*(553) ஒரு கையை அர்த்த சந்திர முத்திரையுடன் (அஸம்யுதம் நெ. 6) இடுப்பில் வைத்துக்கொண்டு, மற்றொரு கையை சிகர முத்திரை (அஸம்யுதம் நெ. 10) யுடன் தொங்கவிட்டுக்கொண்டு, பாதங்களில் 'சலனம்' (பாதம் நெ. 1 பக்கம் 135) என்ற அசைவுடன் நர்த்தனம் செய்தால் அதுவே லலிதத்தின் ஐந்தாவது வகையாகும்.*

## ६. विक्रमः (प्रथमः)।

पताकौ मुष्टिसहितौ द्रुतदृष्ट्या च पादयोः।
दक्षिणः सरणाकारो वामः स्यात्तु स्वभाविकः।
एवंप्रकारनटनं विक्रमः प्रथमो भवेत् ॥ ५५४ ॥

## 6. VIKRAMA No. 1

(554) When Patāka mudra (Asamyuta Hasta No. 1) is held by one hand and Muṣṭi mudra (Asamyuta No. 9) in the other, and the feet are hurried while the right foot is ready to move on the ground and the left is kept in the normal pose, then it is the Vikrama Angahāra of the first variety.

6. விக்ரமம் (முதல் வகை)

*(554) ஒரு கையில் பதாக முத்திரையும், மற்றொரு கையில் முஷ்டி முத்திரையும் தாங்கி, பார்வையும் பாதங்களும் வேகத்தைக் காட்டக்கூடியதாக இருக்க, இடது பாதத்தை சுபாவ நிலையில் வைத்து வலது பாதத்தை பூமியில் மெதுவாக நகர்த்தத் தயாராக வைத்துக் கொண்டு*

நர்த்தனம் செய்தால் அதுவே 'விக்ரம' அங்கஹாரத்தின் முதல் வகையாகும்.

७. विक्रमः (द्वितीयः)।

ललितं चरणं भूयात् समदृष्टिस्तथा भवेत् ।
इत्यादि नटनं कुर्यात् विक्रमस्य द्वितीयके ॥ ५५५ ॥

7. VIKRAMA No 2.

(555) In Vikrama Aṅgahāra of the 2nd variety, the foot movement called 'Lalita' (Pāda No. 5 in page 155) with its accompaning features is performed in the dance, with the eyes assuming the normal look.

7. விக்ரமம் (இரண்டாவது வகை)

(555) விக்கிரம அங்கஹாரத்தின் இரண்டாவது வகையில் சுபாவமான பார்வையுடன் 'லலிதம்' (பாதம் நெ. 5 பக்கம் 156) என்ற பாத வகைக்குரிய அசைவுகளுடன் நர்த்தனம் செய்ய வேண்டும்.

८. विक्रमः (तृतीयः)।

पादाभ्यां तत्र कलयेत् समोत्सरितमण्डलम् ।
शुकतुण्डौ पुरोभागौ चलितौ समदृष्टितः ॥ ५५६ ॥

8. VIKRAMA No. 3.

(556) In the third variety of Vikrama Aṅgahāra, the foot movement called 'Samōtsarita Maṇḍala'[1] is performed, that is the feet follow circular paths on

---

1. Samotsarita Mandala is the 3rd among the last 5 varieties of 'Pada-bhedas' mentioned in page 155. Its definition is missing in the manuscript. The term has been interpreted according to its etymology.

the ground one after the other, while the hands holding S'ukatuṇḍa Mudrā (Asamyuta No. 8) are shaken forward.

### 8. விக்கிரமம் (மூன்ருவது வகை)

(556) விக்கிரம அங்கஹாரத்தின் மூன்ருவது வகையில் சுகதுண்ட முத்திரை (அஸம்யுதம் நெ. 8) களோடு கூடிய கைகளை முன்புறம் அசைத்துக் கொண்டு ஸமோத்ஸரித மண்டலம்[1] என்ற பாத வகைப்படி ஒவ்வொரு பாதத்தாலும் பூமியின் மேல் வட்டமிட்டு நர்த்தனம் செய்யவேண்டும்.

### ९. कारुणिकः (प्रथमः ।

पादश्चंक्रमणाभिख्यः करौ तु मुकुलाभिधौ ।
करुणासहितो ह्यादौ नृतिः कारुणिकस्य तु ॥ ५५७ ॥

### 9. KĀRUṆIKA No. 1

(557) In the first variety of Kāruṇika Aṅgahāra, the feet perform the movement Caṅkramaṇa,[2] the hands hold the mudra of Mukula, and the facial expression is one of pity.

---

1. 'ஸமோத்ஸரித மண்டலம்' என்ற பாதவகை பக்கம் 155-ல் சொல்லப்பட்டிருக்கிற கடைசி 5 பாதவகைகளில் மூன்ருவது. அதன் விவரம் சுவடிகளில் கிடைக்கவில்லை. அதன் பொருள் சொல்லமைப்பைக் கொண்டு நிச்சயிக்கப்பட்டிருக்கிறது.

2. Cankramana is not described in this text. There is a description of it quoted (in page 198 of Bharata Kosa of Ramakrishna Kavi. No. 30, Venkateswara Oriental Series) from Natya Darpana which is as follows :—

पादयोर्बाह्यपार्श्वाभ्यां उत्क्षिप्योत्क्षिप्य यत्नतः ।
गतिर्भवेच्चंक्रमणं वर्तितं नाट्यकोविदैः ॥

If the feet are raised and the steps are taken with effort walking on the outer side of the feet, then it is called 'Cankramana',

### 9. காருணிகம் (முதல் வகை)

(557) காருணிக அங்கஹாரத்தின் முதல் வகையில் பாதங்களைச் 'சங்கிரமணம்'[1] என்ற முறையில் அடிவைத்துக்கைகளில் 'முகுள' முத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ 26, பக்கம் 25) யைத்தாங்கி நர்த்தனம் செய்யவேண்டும். முகபாவம் கருணரஸத்திற்குரியதாக இருத்தல் வேண்டும்.

### १०. कारुणिकः (द्वितीयः)।

हस्तौ तलमुखाभिख्यौ पादौ चाञ्चितनामकौ।
प्रलोकितदृशा भूयात् सुलूनृत्तं विभावयेत् ॥ ५५८ ॥

इति कारुणिके नृत्ये द्वितीयः क्रमणो मतः।

### 10. KĀRUṆIKA No 2

(558–559) In the second variety of Kāruṇika Aṅgahāra, the hands hold the Talamukha mudra (Nṛtta Hasta No. 2, page 46), the feet assume the pose of Añcita (Pāda Bhēda No. 1, page 142) and the look is Pralōkitā or directed towards the side, and the dance is performed with 'Sulū' movements.

### 10. காருணிகம் (இரண்டாவது வகை)

(558–559) காருணிக அங்கஹாரத்தின் இரண்டாவது வகையில் கைகளில் 'தலமுக' முத்திரை (ந்ருத்த ஹஸ்தம் நெ. 2 பக்கம் 46) யும், கால்கள் அஞ்சித (பாத வகை நெ. 1 பக்கம் 142) மாகவும், பார்வை 'ப்ரலோகிதம்'

---

1. சங்கிரமணம் என்ற பாதவகை இந்த நூலில் விவரிக்கப்படவில்லை. 'நாட்டிய தர்ப்பணம்' என்ற நூலிலிருந்து அதைப் பற்றிய மேற்கோள் 'பரதகோசம்' என்ற தொகுப்பில் காணப்படுகிறது. (திருப்பதி வெங்கடேச்வரா ஓரியண்டல் ஸிரிஸ் பதிப்பு) அது வருமாறு:–"கால்களை நன்றாகத் தூக்கிப் பாதங்களின் வெளிப்புறத்தால் அடிவைத்து கிரமத்துடன் செல்வதற்கு 'சங்கிரமணம்' என்று பெயர்"

என்ற பக்கப்பார்வையாகவும், 'ஸாசி' என்ற அழகான அசைவுகளுடனும் நர்த்தனம் செய்யவேண்டும்.

११. कारुणिकः (तृतीयः)।

आदौ तु चलितौ पादौ स्थित्वाऽपसरणो भवेत् ॥ ५५९ ॥

कलशाभिधहस्तौ तु चलितौ च पुनःपुनः।
आलोकितदृशा भूयात् तृतीयक्रमणोद्यते ॥ ५६० ॥

11. KĀRUṆIKA No. 3

(559–560) In the third variety of Kāruṇika Aṅgahara, the feet perform the movement of 'Calita' or shaking in its own place, and then move back on the ground, while the hands holding 'Kalas'a Hasta' (Samyuta Hasta No. 11 page 38) are shaken repeatedly, and the look assumed is 'Ālōkitā' or 'a sudden glance'.

11. காருணிகம் (மூன்றாவது வகை)

(559–560) காருணிக அங்கஹாரத்தின் மூன்றாவது வகையில் பாதங்களைச் 'சலிதம்' என்ற முறையில் இருந்த இடத்திலேயே அசைத்துப் பிறகு தரையின் மீது பின்புறமாக நகரவேண்டும். கலச முத்திரை (ஸம்யுத ஹஸ்தம் நெ. 11 பக்கம் 38) யோடு கூடிய கைகளை அடிக்கடி அசைத்துக்கொண்டு 'ஆலோகிதம்' என்ற திடீரென்று பார்க்கும் பார்வையுடன் நர்த்தனம் செய்யவேண்டும்.

१२. कारुणिकः (चतुर्थः)।

पादयोः पार्श्वभागाभ्यां नटनं तु करौ तदा।
उद्वृत्तनाम्ना कथितौ साचिदृष्टिस्तदा भवेत् ॥ ५६१ ॥
एवं नटनसंयुक्तं तुर्यकारुणिकस्य तु ।

12. KĀRUṆIKA No. 4

(561–562) In the fourth variety of Kāruṇika Aṅgahāra the dance is performed by placing the feet on their sides while the hands perform the winding motion called 'Udvṛtta' i e., the winding movement upward with the little finger going out first, and the look assumed is 'Sāci' or the side-long glance with fixed eye-lids.

12. காருணிகம் (நான்காவது வகை)

(561–562) காருணிக அங்கஹாரத்தின் நான்காவது வகையில் கால்களின் பக்கங்களைப் பூமியில் வைத்துக் கைகளை உத்வ்ருத்தமாக, அதாவது கைகளை சுண்டுவிரல் முதலில் செல்லும்படி மேல்நோக்கிச் சுழற்ற வேண்டும். 'ஸாசி' என்ற முறையில் அதாவது கண்ணிமைகளை அசைக்காமல் கடைக்கண்ணால் பார்க்கும் பார்வையுடன் இருக்கவேண்டும்.

१३. विचित्रः ( प्रथमः ) ।

सूचीवक्त्राभिधौ हस्तौ पदोस्तु तलकुट्टनम् ॥ ५६२ ॥

प्रलोकितदृशा भूयाद्विचित्रः प्रथमो भवेत् ।

13. VICITRA No. 1

(562–563) In the Vicitra Aṅgahāra of the first variety, the hands hold the mudra of Sūcīvaktra (Asamyuta No. 13, page 14), the feet stamp the ground with the entire sole of the foot and the eyes assume the look of 'Pralōkita' or 'looking at the side'.

13. விசித்திரம் (முதல் வகை)

(562–563) விசித்திர அங்கஹாரத்தின் முதல்வகை

யில் கைகளில் 'ஸூசிவக்த்ரம்' என்னும் 'ஸூசி முத்திரை' (அஸம்யுதம் நெ. 13 பக்கம் 14) யைத்தாங்கிப் பாதம் முழுவதும் தரையில் படும்படி தட்டி, பக்கப்பார்வையுடன் நர்த்தனம் செய்யவேண்டும்.

## १४. विचित्रः ( द्वितीयः ) ।

हस्तौ संदंशनामानौ पादौ विषमसंचरः ॥ ५६३ ॥
दृष्टिभ्यां समसाचिभ्यां विचित्रस्य द्वितीयके ।

## 14. VICITRA No. 2

(563–564) In the Vicitra Aṅgahara of the second variety the hands hold the mudra of Sandams'a (Asamyuta No. 25 Page 25), the feet undergo the movements of Viṣama sañcara ( Pāda Bhēda No. 7 page 139, 140 ) and the eyes assume the look of Sama and Sāci alternately i. e., the normal and the side-long look.

## 14. விசித்திரம் (இரண்டாவது வகை)

(563–564) விசித்திர அங்கஹாரத்தின் இரண்டாவது வகையில் கைகளில் 'ஸந்தம்ச முத்திரை' (அஸம்யுதம் நெ. 25 பக்கம் 25) யோடும், பாதங்களில் 'விஷமசஞ்சரம்' (பாதவகை நெ. 7 பக்கம் 140) என்ற அசைவுகளோடும், கண்களில் 'ஸமம்' 'ஸாசி' அதாவது மாற்றி மாற்றி ஸ்வபாவமான பார்வையோடும், கடைக்கண் பார்வை யோடும் நர்த்தனம் செய்யவேண்டும்.

## १५. विकलः ( प्रथमः ) ।

हस्तौ तु मुष्टिसंभूतौ पार्ष्णिभ्यां वा तदग्रतः ॥ ५६४ ॥
पार्श्वद्वयाभ्यामथवा कुट्टनं नृतिमाश्रयेत् ।
समदृष्टिस्समाख्याता प्रथमे विकलस्य तु ॥ ५६५ ॥

## 15. VIKALA No. 1

(561–565) In Vikala Aṅgahāra of the first variety the hands hold 'Muṣṭi Mudra' (Asamyuta No. 9 Page 10) and the feet stamp the ground either with the heel or by the sides. The eyes assume the normal look.

## 15. விகலம் (முதல் வகை)

(564–565) விகல அங்கஹாரத்தின் முதல் வகையில் கைகளில் முஷ்டி முத்திரை (அஸம்யுதம் நெ. 9, பக்கம் 10) யோடும் கண்களில் ஸ்வபாவமான பார்வையுடனும், குதி காலால் அல்லது பாதங்களின் பக்கங்களால் பூமியில் தட்டி நர்த்தனம் செய்யவேண்டும்.

## १६. विकलः (द्वितीयः)।

बाणाभिधानौ हस्तौ तु पादयोः पार्श्वभागतः।
स्वभावकुट्टनं पश्चात् प्रलोकितदृशा भवेत् ॥ ५६६ ॥
समदृष्टिश्च विज्ञेयो द्वितीये विकलस्य तु।

## 16. VIKALA No. 2

(566–567) In the Vikala Aṅgahāra of the second variety the hands assume the Bāṇa mudra (Asamyuta No .15 page 16) and the feet first stamp the ground with their sides and then with the whole of the foot, and the look is towards the side.

## 16. விகலம் (இரண்டாவது வகை)

(566–567) விகல அங்கஹாரத்தின் இரண்டாவது வகையில் கைகளில் பாணமுத்திரை (அஸம்யுதம் நெ. 15 பக்கம் 16) யோடும், பக்கப்பார்வையோடும், பாதங்களின்

பக்கங்களால் முதலில் தட்டிப் பிறகு பாதம் முழுவதாலும் பூமியில் தட்டி, நர்த்தனம் செய்யவேண்டும்.

### १७. भीमः (प्रथमः)।

हस्तौ नितंबनामानौ पादौ प्रेङ्खणकुट्टनैः ॥ ५६७ ॥

उल्लोकितदृशा भूयात् समदृष्ट्या च भावयेत्।
इतीव नटनं कुर्यात् भीमस्य प्रथमे तदा ॥ ५६८ ॥

### 17. BHĪMA (No. 1)

(567–568) In the Bhīma Aṅgahāra of the first variety the hands assume the pose of Nitamba mudra (Nṛtta Hasta No. 10 page 52, 53), the feet are moved this side and that and then stamp the ground, while the eyes assume the Ullōkita or upward look and then the normal look.

### 17. பீமம் (முதல் வகை)

*(567–568) பீம அங்கஹாரத்தின் முதல்வகையில் கைகளில் நிதம்ப முத்திரை (ந்ருத்த ஹஸ்தம் நெ. 10 பக்கம் 53) யின் அசைவுகளோடும் பாதங்களை இரு புறமும் அசைத்துப் பிறகு பூமியைத்தட்டி மேற்பார்வை யுடனும் பிறகு ஸ்வபாவமான பார்வையோடும் நர்த்தனம் செய்யவேண்டும்.*

### १८. भीमः (द्वितीयः)।

मूर्ध्नि देशे पुरोभागे पौनःपुन्यात्प्रचालितौ।
पताकाभिधहस्तौ तु तस्यां तदनुगौ पदौ ॥ ५६९ ॥

आलोकितदृशा भूयाद्भीमस्यैव द्वितीयके।

## 18. BHĪMA (No. 2)

(569–570) In the second variety of Bhīma Aṅgahāra the hands holding Patāka mudra (Asamyuta No. 1) are shaken repeatedly in front at the level of the head. The movements of the feet follow those of the hands. The eyes assume the Ālōkita look, i. e., a sudden glance.

## 18. பீமம் ( இரண்டாவது வகை )

*(569–570) பீம அங்கஹாரத்தின் இரண்டாவது வகையில் கைகளைப் பதாக முத்திரை (அஸம்யுதம் நெ. 1) யோடு தலைக்கு நேராக அடிக்கடி அசைத்துக் கொண்டும், கைகளின் போக்குக்குத் தகுந்தாற்போல் கால்களை நகர்த்திக்கொண்டும், திடீரெனப் பார்க்கும் பார்வையோடும் நர்த்தனம் செய்யவேண்டும்.*

## १९. विकृतः ( प्रथमः ) ।

**अरालो दक्षिणे हस्ते वामे स्याच्छिखरः करः ॥ ५७० ॥**
**पादौ संक्रमणाभिख्यौ प्रथमे विकृतस्य तु ।**

## 19. VIKṚTA (No 1)

(570–571) In the first variety of Vikṛta Aṅgahāra, the right hand holds Arāla mudra (Asamyuta No. 7, pages 8, 9) and the left hand holds S'ikhara mudra (Asamyuta No. 10, page 11) and the feet perform the movement called Saṅkramaṇa (Pāda Bheda No. 2 at p. 136)

## 19. விக்ருதம் (முதல் வகை)

*(570–571) விக்ருத அங்கஹாரத்தின் முதல் வகை*

யில் வலது கையில் அராள முத்திரையும் (அஸம்யுதம் நெ. 7 பக்கம். 9) இடதுகையில் சிகர முத்திரை (அஸம் யுதம் நெ. 10 பக்கம் 11) யும் தாங்கி ஸங்கிரமணம் (பாத பேதம் நெ. 2 பக்கம் 136) என்னும் முறையில் பாதங்களை வைக்கவேண்டும்.

## २०. विकृतः ( द्वितीयः ) ।

अपसव्येऽर्धचन्द्रः स्याद्वामे स्यादलपल्लकः ॥ ५७१ ॥
पादौ विषमसञ्चारो विकृतस्य द्वितीयके ।

## 20. VIKṚTA No. 2

(571–572) In the second variety of Vikṛta Aṅgahāra the right hand holds Ardhacandra mudra (Asamyuta No. 6 at pages 7 and 8) and the left hand Alapallava (Asamyuta No. 20 page 20) and the feet perform the movement of Viṣama sañcara (Pāda Bhēda No. 7 pages 139, 140).

## 20. விக்ருதம் (இரண்டாவது வகை)

(571–572) விக்ருத அங்கஹாரத்தின் இரண்டாவது வகையில் வலதுகையில் அர்த்தசந்திர முத்திரை (அஸம் யுதம் நெ. 6 பக்கம் 8) யோடும் இடது கையில் அலபல்லவ முத்திரை (அஸம்யுதம் நெ. 20 பக்கம் 20) யோடும், பாதங் களை விஷம சஞ்சரம் (பாதவகை நெ. 7 பக்கம் 140) என்ற முறையிலும் அசைத்து நர்த்தனம் செய்யவேண்டும்.

## २१. उग्रतरः ( प्रथमः ) ।

हस्तौ तु नागबन्धाख्यौ रुद्रदृष्टिरुदीरिता ॥ ५७२ ॥
पादाग्राभ्यां तु सरणं चादौ चोग्रतरस्य तु ।

## 21. UGRATARA No. 1

(572-573) In the first variety of Ugratara Aṅgahāra the hands assume the Nāgabandha mudra (Samyuta Hasta No. 15 page 41), the look is fierce and the feet are moved on the ground resting on the fore-foot.

## 21. உக்ரதரம் (முதல் வகை)

*(572–573) உக்ரதர அங்கஹாரத்தின் முதல் வகையில் கைகளில் நாகபந்த முத்திரை (ஸம்யுதம் நெ. 15 பக்கம் 141) யோடும் குரூரமான பார்வையோடும், முன்னங் காலால் நகர்ந்து கொண்டும் நர்த்தனம் செய்யவேண்டும்.*

## २२. उग्रतरः ( द्वितीयः ) ।

हस्तौ सिंहमुखाभिख्यौ ऊर्ध्वाधश्च प्रचालितौ ॥ ५७३ ॥

अनुवृत्तदृशा भूयाल्लोलनाख्यपदौ तदा ।
एतादृशक्रमं कुर्याद्द्वितीये चोग्रभावजे ॥ ५७४ ॥

## 22. UGRATARA No. 2

(573-574) In the second variety of Ugratara Aṅgahāra the hands hold the Simhamukha mudra (Asamyuta No. 18. pages 18, 19) and are moved up and down, the look is a steady gaze and the feet perform the movement called Lōlana (Pāda Bhēda No. 6 page 139).

## 22. உக்ரதரம் (இரண்டாவது வகை)

*(573–574) உக்ரதர அங்கஹாரத்தின் இரண்டாவது வகையில் கைகளில் ஸிம்ஹ முத்திரை (அஸம்யுதம் நெ. 18 பக்கம் 19) யோடு மேலும் கீழும் அசைத்துக்கொண்டும்,*

ஊன்றின பார்வையுடனும், பாதங்களை லோலனம் (பாத வகை நெ. 6 பக்கம் 139) என்ற முறையில் அசைத்தும் நர்த்தனம் செய்யவேண்டும்.

## २३. शान्तिजः (प्रथमः)।

जानुयुग्मयुतौ हस्तौ करुणादृष्टिरेव च ।
पादयोश्चैव बन्धाख्या चारीनटनमात्मना ॥ ५७५ ॥

एवंप्रकारनटनं प्रथमे शान्तिजस्य तु ।

## 23. S'ĀNTIJA No. 1

(575–576) In the S'āntija Aṅgahāra of the 1st variety the hands are in contact with the knee joints, the look is 'Karuṇa' or 'pathetic' (Dṛṣṭi No. 3 p. 111) the feet are placed in the form called 'bandha' or Vaktra bandha (Bhū cāri No. 7 at p. 282) and the Nartana involves many cārīs.

## 23. சாந்திஜம் (முதல் வகை)

(575–576) சாந்திஜ அங்கஹாரத்தின் முதல் வகையில் கைகளை முழங்கால்களில் வைத்து, கருணரஸமுள்ள பார்வை (திருஷ்டி நெ. 3 பக்கம் 111) யுடன், பாதங்களை 'வக்த்ரபந்தம்' (பூமிசாரி நெ. 7 பக்கம் 283) என்னும் சாரியின் அசைவுகளுடன் நர்த்தனம் செய்யவேண்டும்.

## २४. शान्तिजः (द्वितीयः)।

हस्तावुत्सङ्गनामानौ पादावूरुप्रवर्तकौ ॥ ५७६ ॥

चारी स्यान्नटनं व्याप्तौ चक्षुषोरवलोकितम् ।
एतादृशनृत्तिं कुर्याच्छान्तिजस्य द्वितीयके ॥ ५७७ ॥

## 24. S'ĀNTIJA No. 2

(576–577) In the S'āntija Aṅgahāra of the second variety the hands hold the mudra of Utsaṅga (Samyuta No. 13 page 39), the feet are made to come near the thighs, the look is avalōkita or downward and the dance is performed with a number of cārīs.

## 24. சாந்திஜம் ( இரண்டாவது வகை )

*(576–577) சாந்திஜம் இரண்டாவது வகையில் கைகளால் 'உத்ஸங்கம்' (ஸம்யுதம் நெ. 13 பக்கம் 140) என்னும் முத்திரையைத் தாங்கி, பாதங்களை துடைகளுக்கருகே கொண்டுவந்து, கீழ்ப்பார்வையுடன் பல சாரிகளுடன் நர்த்தனம் செய்யவேண்டும்.*

### अङ्गहाराणां सामान्यलक्षणं उत्पत्तिश्च ॥

इत्येवमङ्गहाराणां लक्षणं पृथगीरितम् ।
एतेषां निर्णयं कुर्यात् तत्तदौचित्यतः क्रमात् ॥ ५७८ ॥

आश्चर्यशब्दवचनैस्तत्तत्ताललयोद्यतैः ।
करणानां मेळनं स्यादङ्गहारन्त्वतिक्रमः ॥ ५७९ ॥

वदन्ति केचिद्विबुधा भरतार्थविचक्षणाः ।
प्रातर्नृत्तप्रकटनैरङ्गहारो विधीयते ॥ ५८० ॥

एवं वदन्ति च परे तयोरुत्पत्तिरिष्यते ।
अर्थाभिनयमार्गेण संभूतो यो नृतिक्रमः ॥ ५८१ ॥

औचित्यहस्तसहितप्रान्तनृत्तक्रमस्य तु ।
तत्राङ्गहारजनिता तत्तल्लक्षणमीरितम् ॥ ५८२ ॥

रमानां संख्यया रूढो ह्यङ्गहारनृतिक्रमः ।

इति नन्दिकेश्वरविरचिते भरतार्णवे सुमतिबोधके अङ्गहारप्रकरणं नाम

नवमोऽध्यायः ॥

---

## GENERAL DESCRIPTION AND ORIGIN OF AṄGAHĀRAS

(578–583) Thus have the Aṅgahāras been described in detail. These are to be employed by a happy choice to suit particular occasions.

Aṅgahāras are formed of artistic groups of karaṅas performed to variegated tālas or time-measures.

Some authorities are of opinion that Aṅgahāras are to be danced in the morning programmes.

The origin of Aṅgahāras according to certain authorities is as follows:—

The dances that follow as an addition, after the end of a piece of Abhinaya or gesticular representation of ideas, with poses suited to the occasion is the origin of Aṅgahāras.

The names of these varieties of Aṅgahāras have come into use by long usage from the particular aesthetic sentiments they subserve.

**Thus ends Chapter IX dealing with Aṅgahāras, of Bharatarṅava of Nandikeśwara addressed to Sumati.**

---

## அங்கஹாரங்களின் பொதுவான லக்ஷணங்களும், அவற்றின் உற்பத்தியும்.

(578-583) இவ்விதமாக அங்கஹாரங்கள் ஒவ்வொன்றும் விவரமாக விவரிக்கப்பட்டன. இவைகளை இடத்துக்குத்தக்க உசிதப்படி தேர்ந்தெடுத்து பிரயோகிக்க வேண்டும்.

அங்கஹாரம் என்பது பல விசித்திரமான தாளங்களில் நர்த்தனம் செய்யப்படும் சிறிய நர்த்தனப்பகுதிகளாகிய கரணங்களை அழகாகத் தொகுப்பதன் மூலம் உண்டாகியிருக்கின்றன.

சிலர் அங்கஹாரங்களைக் கால நர்த்தனத்தில் பிரயோகிக்க வேண்டும் என்று அபிப்பிராயப்படுகிறார்கள். அங்கஹாரங்களின் உற்பத்தி வருமாறு:—

பொருள்களை அபிநயத்தினால் விவரித்து ஆடியபிறகு அதைத் தொடர்ந்தாற்போல் நர்த்தனம் செய்யப்படும் போது அதே ரஸபாவத்திற்கு ஒத்தபடி முத்திரைகளுடன் நர்த்தனம் ஏற்படுமாகையால் அப்போது அங்கஹாரங்களும் உண்டாகிவிட்டன.

அங்கஹார வகைகளின் பெயர்கள் ரஸங்களின் பெயராலேயே பழக்கத்தில் வந்தவை.

**இதனுடன் நந்திகேசுவரரால் சுமதிக்கு அருளப்பட்ட பரதார்ணவம் என்ற நூலில் அங்கஹாரங்களைப் பற்றிய ஒன்பதாவது அத்தியாயம் முற்றுப்பெற்றது.**

---

## दशमोऽध्यायः ।

### नानार्थहस्ताः ।

अङ्गहारक्रमश्चाथ नानार्थकरनिर्णयः ॥ ५८३ ॥

तद्द्वयं सुमते पूर्वं पार्वत्या बोधितं मम ।
उक्तं तदङ्गहाराणां लक्षणं तदशेषतः ॥ ५८४ ॥

अथ नानार्थहस्तानां निर्णयक्रमचातुरी ।
तत्रापि यदि वाञ्छा ते श्रोतुञ्च सुमते शृणु ॥ ५८५ ॥

वक्ष्ये नानार्थहस्तानां निर्णयक्रमभावनाम् ।

## CHAPTER X

### NĀNĀRTHA HASTĀS

(Mudras expressing varied ideas)

(583–586) The special use of Hasta mudras for expressing particular ideas have also been taught to me by Sri Pārvati Dēvi along with the Aṅgahāras classified according to the nine rasas.

I have just now explained to you the Aṅgahāras. I shall deal with the special uses of Hasta mudras hereafter, if you so desire.

## அத்தியாயம் 10

### நானார்த்த ஹஸ்தங்கள்

(583–586) ஸ்ரீ பார்வதிதேவி அங்கஹாரங்களை ஒன்பது வகையாகப் பிரித்து எனக்குச் சொல்லும்போது பல பொருள்களைக் குறிக்கும் ஹஸ்த முத்திரைகளைப் பற்றியும் எனக்கு உபதேசம் செய்தார். அங்கஹார லக்ஷணங்களை சொல்லிவிட்டேன். பல பொருள் ஹஸ்தங்களை நிச்சயித்து அவைகளை சாமர்த்தியமாய் உபயோகிக்கும் முறையை அறியவேண்டுமென்று உனக்கு விருப்பமிருந்

தால் அவைகளை உனக்கு வரிசையாகச் சொல்லுகிறேன். கேட்பாயாக.

१. संदंशः ।

संदंशहस्तो निनदे नानागंधे रसे भवेत् ॥ ५८६ ॥

1. SANDAMS'A

(586) If Samdams'a mudra (Asamyuta No. 25) is shaken at the ears, at the nose, or at the lips, it denotes sound, smell or taste respectively.

1. ஸந்தம்சம்

(586) ஸந்தம்ச முத்திரை (அஸம்யுதம் நெ. 25) யைக் காதுக்கருகிலோ, மூக்குக்கருகிலோ அல்லது உதட்டுக் கருகிலோ அசைத்தால் அது முறையே சத்தத்தையோ வாசனையையோ அல்லது ருசியையோ குறிக்கும்.

२. हंसपक्षः ।

अधस्तिर्यक् च सोर्ध्वादौ भागेषु च निवेशितः ।
हंसहस्तो विरचितो रेखाधारासु युज्यते ॥ ५८७ ॥

2. HAMSAPAKṢA

(587) Hamsapakṣa mudra (Asamyuta No. 24) when held horizontally or upward or downward, denotes a line or the flow of liquid.

2. ஹம்ஸ பக்ஷம்

(587) ஹம்ஸபக்ஷ முத்திரை (அஸம்யுதம் நெ. 24) யைக் குறுக்காகவோ, மேல்முகமாகவோ அல்லது கீழ்முக மாகவோ பிடித்தால் கோடுகளையோ நீர்த்தாரையையோ குறிக்கும்.

## ३. मृगशीर्षः ।

अधोभुजान्तरे तिर्यक्स्थायी चेन्मृगशीर्षकः ।
पतिचेतश्शरीरार्धभावनासु निरूप्यते ॥ ५८८ ॥

## 3. MṚGAS'ĪRṢA

(588) Mṛgas'īrṣa Hasta (Asamyuta No. 17) when held horizontally, facing downward, between the shoulders, is used to express the idea of the two halves of the union of the body and soul of the husband and wife into one.

## 3. ம்ருகசீர்ஷம்

(588) ம்ருகசீர்ஷ முத்திரை (அஸம்யுதம் நெ. 17) யைத் தோள்களுக்கிடையே குறுக்காகக் கீழ்நோக்கிப் பிடித்தால் 'மாதொருபாதி' என்ற பொருளைக் குறிக்கும்.

## ४. अर्धमुकुलः ।

कनिष्ठिके मुकुलयोः सम्यगेवाप्रसारिते ।
नाम्नाऽर्धमुकुलो हस्तः तयोर्योगोऽभिधीयते ॥ ५८९ ॥

अन्योन्याभिमुखीभावाच्चलाच्चोपरिचालनात् ।
वक्षःस्थानप्रचलनात्करोऽर्धमुकुलाभिधः ॥ ५९० ॥

संदर्भपरिपाट्यां स्यात् आत्मन्यारोपणेऽपि च ।

## 4. ARDHA MUKULA

(589–591) When Mukula mudra (Asamyuta No. 26) with the little fingers stretched out, held in both the hands, are joined together, then it is called 'Ardhamukula'.

When they are held facing each other or high up or at the level of the chest and shaken, they are used to denote one's self, or taking over one-self or other similar ideas according to circumstances.

#### 4. அர்த்த முகுளம்

(589–591) முகுள முத்திரை (அஸம்யுதம் நெ. 26) யில் சுண்டுவிரலை நீட்டி இரு கைகளையும் சேர்த்தால் அதற்கு 'அர்த்த முகுள ஹஸ்தம்' என்று பெயர்.

அர்த்த முகுள முத்திரையை ஒன்றுக்கொன்று எதிராகவோ அல்லது உயர்த்தியோ அல்லது மார்புக்கு நேராகவோ அசைத்தால் அது தன்னையோ தன்மீது ஏற்றிக்கொள்வது போன்ற பொருள்களையோ குறிப்பிட உதவும்.

#### ५. मुकुलः ।

अधोभागे मुखस्याग्रे वक्षःस्थाने निवेशिता ॥ ५९१ ॥
मुकुलो दानसाध्व्यर्थे मनःप्रीतिषु युज्यते ।

#### 5. MUKULA

(591–592) When Mukula mudra (Asamyuta No. 26) is held lower down or in front of the face or at the level of the chest, it is used to denote the act of giving, the idea of goodness and to denote the idea of being pleased.

#### 5. முகுளம்

(591–592) முகுளமுத்திரை (அஸம்யுதம் நெ. 26) யைக் கீழே அல்லது முகத்துக்கெதிரே அல்லது மார்புக்கெதிரே பிடித்தால் அது கொடையையோ, 'நல்லது' என்ற பொருளையோ, மனமகிழ்ச்சியையோ குறிக்கும்.

## ६. अर्धचन्द्रः ।

अधोभागे दक्षिणाङ्गे मुखस्याग्रे निवेशितः ॥ ५९२ ॥
व्याघ्रानने च विस्तीर्णे पटस्यालोकनेऽपि च ।
अर्धचन्द्रकरस्सोऽयं युज्यते योजनापरैः ॥ ५९३ ॥
दक्षिणाङ्गे चोर्ध्वभागे ललाटे च निवेशितः ।
ब्रह्मचर्ये निश्चितार्थे करो लिप्यां च सूचकः ॥ ५९४ ॥
युज्यते कविभिर्नाट्यमर्मार्थचतुरैः पुरा ।

## 6. ARDHACANDRA

(592–595) When Ardhacandra (Asamyuta No. 6) mudras are held lower down at the right side or in front of the mouth, they denote the mouth of a tiger opened wide, or the examination of cloth. When it is held near the upper part of the body at the right side or near the fore-head, then it denotes the state of a bachelor or a settled fact or to denote any script.

## 6. அர்த்த சந்திரம்

*(592–595) அர்த்தசந்திர முத்திரையை வலது பக்கத்தில் கீழே அல்லது வாய்க்கருகே பிடித்தால் அது புலி வாயைப் பிளந்துகொண்டிருப்பதையோ அல்லது துணியைப்பரீக்ஷித்துப் பார்ப்பதையோ குறிக்கும். வலது புறத்தில் சரீரத்தின் மேல் பாகத்திலோ அல்லது நெற்றிக்கருகிலோ பிடித்தால் அது ப்ரம்மசரிய நிலையையோ, முடிவான தீர்மானத்தையோ, அல்லது எழுத்தையோ குறிக்கும்.*

## ७. वैष्णवः ।

पुरोभागेऽप्यूर्ध्वदेशे ह्यधोभागे च निश्चलः ॥ ५९५ ॥

वैष्णवाभिधहस्तोऽयं गार्हस्थ्येऽपि कलौ युगे ।
आघातार्थेऽपि युज्येत योजनाचतुरैस्तथा ॥ ५९६ ॥

## 7. VAIṢṆAVA

(595–596) If Vaiṣṇava Hasta (Samyuta No. 16) is held steadily in front, or above or below, then it denotes the state of a house-holder or the kaliyuga or the striking of objects against each other.

## 7. வைஷ்ணவம்

*(595–596) வைஷ்ணவ ஹஸ்தத்தை (ஸம்யுதம் நெ. 16) அசைக்காமல் எதிராகவோ, மேலேயோ அல்லது கீழாகவோ பிடித்தால் இல்லறத்தில் உள்ளவரையோ, கலி யுகத்தையோ, இரண்டு பொருள்கள் ஒன்றோடொன்று அடிபடுவதையோ குறிக்கும்.*

## ८. पताकचतुरः ।

अन्योन्याभिमुखीभावात्पुरोभागेऽपि चालनात् ।
ऊर्ध्वाग्रयुग्मसंयोगात्पताकचतुरौ करौ ॥ ५९७ ॥

वानप्रस्थाभिगमने दिव्यनीराजनाविधौ ।
युज्यते पर्णशालायां भरतक्रमवेदिभिः ॥ ५९८ ॥

## 8. PATĀKA CATURA

(597–598) If Patāka Catura (Sankara Hasta No. 16, page 199) hasta in both the hands are held facing each other or shaken in front or their upper ends are joined together, they denote the reception to a Vānaprasṭha (a preparatory ascetic) or in worship-

ping dieties with burning camphor, or to denote a hermitage of leaves and creepers.

8. பதாக சதுரம்

*(597–598) இரு கைகளிலும் பதாக சதுர முத்திரை (ஸங்கர ஹஸ்தங்கள் நெ. 16 பக்கம் 199) களை ஒன்றை யொன்று பார்த்துக் கொள்ளும்படி பிடித்தோ, அசைத்தோ, அல்லது நுனிபாகங்களைச் சேர்த்தோ வைத்துக்கொண்டால் வானப்ரஸ்த ஆச்ரமத் (ஸந்நியாஸத்திற்குத்தயாராகும் நிலை) தில் இருப்பவர் வருகையையும், தேவர்களுக்குக் கற்பூர நீராஜனம் செய்வதையும், பர்ண சாலையையும் குறிக்கும்.*

९. शिखरः ।

दक्षिणांसे पुरोभागे तिर्यक्च स तु निश्चलः ।
संन्यासे च स्थितार्थे च समालभ्येति भाषणे ॥ ५९९ ॥
शिखराख्यकरस्सोऽयं युज्यते योजनापरैः ।

9. S'IKHARA

(599–600) If S'ikhara (Asamyuta No. 10) hasta is placed on the right shoulder or held in front horizontally and kept steady, it denotes an ascetic or the idea of permanence or the idea of the expression 'having obtained'.

9. சிகரம்

*(599–600) சிகர முத்திரை (அஸம்யுதம் நெ. 10)யை வலது தோளின் மீதோ அல்லது முன்புறமாக அசைக்காமல் குறுக்காகவோ பிடித்தால் அது ஸந்நியாசியையும், ஸ்திரத்தன்மையையும், ஒரு பொருளை அடைந்ததையும் குறிக்கும்.*

## १०. कपित्थः ।

ऊर्ध्वाधोमुखविन्यासात्पुरोभागे प्रसारणात् ॥ ६०० ॥
वक्षःस्थाने निश्चलत्वात्कपित्थाख्यकरो यदा ।
दुदोहेति पदे चापि मथने धूमयानके ॥ ६०१ ॥
युज्यते योगकुशलैः नाट्यविद्याविवेकिभिः ।

## 10. KAPITTHA

(600–602) If Kapittha hastas ( Asamyuta No. 11 ) face upward and downward alternately, or extended in front or held steady at the level of the chest, they denote the action of milking or the act of churning or steam.

## 10. கபித்தம்

(600–602) கபித்த முத்திரை ( அஸம்யுதம் நெ. 11 ) களோடு கூடிய கைகளை மேலும் கீழுமாக மாற்றி மாற்றி அசைத்தால் அல்லது முன்புறமாக நீட்டினுல் அல்லது மார்புக்கு நேராக அசைக்காமல் பிடித்தால் அவைகள் முறையே பால் கறப்பதையும், தயிர் கடைவதையும், நீராவியையும் குறிக்கும்.

## ११. षड्तुहस्ताः ।

त्रिपताकः करस्सोऽयमूर्ध्वभागे च चालितः ॥ ६०२ ॥
करोऽप्यर्धपताकाख्यः पर्यायेणाऽग्रतश्चलः ।
पताकाख्यकरश्चोर्ध्वभागे पार्श्वद्वये चलः ॥ ६०३ ॥
वसन्तघर्मसमयवर्षाकालेषु च क्रमात् ।
युज्यन्ते योगचतुरैर्भरतार्णववेदिभिः ॥ ६०४ ॥

अलपद्मोऽपसव्याख्यः कर्णदेशे प्रचालितः ।
अधोमुखस्सर्पशीर्षः पुरोऽर्धमुकुळस्तथा ॥ ६०५ ॥

शरद्धेमन्तशिशिरसमयेषु यथाक्रमम् ।
युज्यन्ते सुमते सम्यगवधानयुतः शृणु ॥ ६०६ ॥

## 11. THE MUDRAS FOR THE SIX SEASONS

(602–606) If Tripatāka hasta (Asamyuta No. 2) is held high, and shaken, it denotes Vasanta (spring season).

If Ardhapatāka (Asamyuta No. 3) is shaken at its top on both sides then it denotes the Grīṣma (summer).

If Patāka mudra (Asamyuta No. 1) is held high and shaken on both sides it denotes the Varṣā (rainy season).

If Alapadma mudra (Asamyuta No. 20) in the right hand is placed at the ear it denotes a S'arat (autumn).

If Sarpas'īrṣa mudra (Asamyuta No. 16) is held facing downward then it denotes Hēmanta (dewy season).

And if Ardhamukula (see Nānārtha Hasta No. 4 above) is held in front it denotes the S'is'ira (cold season).

## 11. ஆறு பருவங்களைக் குறிக்கும் முத்திரைகள்

(602–606) த்ரிபதாக முத்திரை (அஸம்யுதம்

நெ. 2) யை உயரத்தூக்கி அசைத்தால் இளவேனிற் காலத்தைக் குறிக்கும்.

அர்த்தபதாக முத்திரை (அஸம்யுதம் நெ. 3) யின் நுனியை இரண்டு பக்கங்களிலும் அசைத்தால் அது முதுவேனிற்காலத்தை குறிக்கும்.

பதாக முத்திரை (அஸம்யுதம் நெ. 1) யை உயரே பிடித்து இரு பக்கங்களிலும் அசைத்தால் கார் காலத்தைக் குறிக்கும்.

அலபத்ம முத்திரை (அஸம்யுதம் நெ. 20) யோடு கூடிய வலதுகையைக் காதுக்கருகில் வைத்துக்கொண்டால் கூதிர்ப் பருவம் என்னும் இலையுதிர்காலத்தைக் குறிக்கும்.

ஸர்ப்பசீர்ஷ முத்திரை (அஸம்யுதம் நெ. 16) யை கீழ் முகமாகப்பிடித்தால் முன்பனிக் காலத்தைக் குறிக்கும்.

அர்த்தமுகுள முத்திரை (நானார்த்த ஹஸ்தம் நெ. 4 மேலே பார்க்கவும்) யை முன்னால் பிடித்தால் பின்பனிக் காலத்தைக் குறிக்கும்.

## कालमानहस्ताः ।

निमेषार्थे युज्यतेऽसौ हंसास्यो विकचानन ।
अग्रे सूची निश्चलश्चेत् काष्ठार्थे विनियुज्यते ॥ ६०७ ॥

संदंशः स्यात्कलार्थेऽपि नखहंसः क्षणे भवेत् ।
मुहूर्ते मुकुलो ज्ञेयः स हस्तक्रमवेदिभिः ॥ ६०८ ॥

घटिकार्थेऽर्धमुकुलः तिर्यग्रूपो निरूप्यते ।
ततः संख्याभियोगेन युज्यन्ते घटिकाक्रमात् ॥ ६०९ ॥

चतुरोऽप्यर्धयामार्थे यामार्थे हंसवक्त्रकः ।

द्वियामार्थे पताकाख्यः त्रियामे ताम्रचूडकः ॥ ६१० ॥
दिवाऽपि रात्रौ युञ्येत नलिनीमुकुलाभिधौ ।
दिनार्थे युज्यते सूची नाट्यशास्त्रविचक्षणैः ॥ ६११ ॥
पक्षार्थे युज्यते सर्पशीर्षश्चेत्तिर्यगाश्रितः ।
मासार्थे निश्चलः सूची चालितश्चेद्युगे भवेत् ॥ ६१२ ॥
शुकतुण्डो निश्चलश्चेदूर्ध्वं वर्षे नियुज्यते ।

## 12. HASTĀS FOR UNITS OF TIME

(607-613) Hamsapakṣa mudra (Asamyuta No. 24) denotes a Nimēṣa (2/135 of a second).

Sūcī mudra (Asamyuta No. 13) pointing forward denotes a kāṣṭhā [1] (4/15 of a second).

Sandams'a mudra (Asamyuta No. 25) denotes a kalā (8 seconds).

The Nakhahamsa (Saukara Hasta No. 12 page 195) mudra denotes a kṣaṇa (4 minutes).

The Mukula mudra (Asamyuta No. 26) denotes a muhūrta (48 minutes).

The Ardhamukula mudra (Nānārtha Hasta No. 4 page 313) denotes a Ghaṭika [2]; and a number of

1. The units of time given here agree with those given by Amarasimha in his lexicon (Vide Kalavarga, Varga No. 4, verses 118 to 121). According to this authority,

| | | | |
|---|---|---|---|
| 18 Nimeshas | make | 1 Kastha | = (4/15 of a second) |
| 30 Kasthas | ,, | 1 Kala | = (8 seconds) |
| 30 Kalas | ,, | 1 Ksana | = (4 minutes) |
| 12 Ksanas | ,, | 1 Muhurta | (48 minutes) |
| 30 Muhurtas | ,, | 1 Day. | |

The units of time for the purpose of Tala are different from these.

2. A Ghatika is another name for Nadika or 24 minutes.

Ghaṭikās is denoted by showing the number along with the mudra.

Catura Hasta (Asamyuta No. 21) denotes a half yāmā (1½ hours).

Hamsāsya Hasta (Asamyuta No. 23) denotes a yāmā (3 hours).

Patāka mudra (Asamyuta No. 1) denotes a double yāmā (6 hours).

Tāmracūda (Asamyuta No. 27) denotes three yāmās (9 hours).

Alapadma mudra (Asamyuta No. 20) denotes the day-time and Mukula mudra (Asamyuta No. 26) the night.

One full day is indicated by Sūcī mudra (Asamyuta No. 13). A fortnight is denoted by Sarpas'īrṣa mudra (Asamyuta No. 16) held horizontally. Sūcī (Asamyuta No 13) held motionless denotes a month, and if shaken, two months.

If steady S'ukatuṅda mudra (Asamyuta No. 8) is held high, it denotes a year.

**12. கால அளவையைக் குறிக்கும் முத்திரைகள்.**

*(607—613) ஹம்ஸபக்ஷ முத்திரை (அஸம்யுதம் நெ. 24) ஒரு நிமேஷம் அல்லது 1/1620 விநாடியைக் குறிக்கும். ஸூசி முத்திரை (அஸம்யுதம் நெ. 13) யை முன்புறமாக நீட்டினால் காஷ்டையை[1] அல்லது 1/90 விநாடியைக்*

---

1. இங்கு கொடுக்கப்பட்டிருக்கும் அளவையின் அங்கங்கள் அமரசிம்ஹரால் எழுதப்பட்ட நிகண்டுவில் கொடுக்கப்பட்டிருக்கும்

குறிக்கும். ஸந்தம்சமுத்திரை (அஸம்யுதம் நெ. 25) ஒரு கலை அல்லது 1/3 விநாடியைக் குறிக்கும். நகஹம்ஸ முத்திரை (ஸங்கர ஹஸ்தம் நெ. 12 பக்கம் 196) க்ஷணம் அல்லது 10 விநாடி நேரத்தைக்குறிக்கும். முகுள முத்திரை (அஸம்யுதம் நெ. 26) ஒரு முகூர்த்தம் அல்லது இரண்டு நாழிகையைக் குறிக்கும். அர்த்த முகுள முத்திரை (நாஞர்த்த ஹஸ்தம் நெ. 4 பக்கம் 313) ஒரு கடிகை அல்லது நாழிகையைக் குறிக்கும். ஒன்றுக்கு மேற்பட்ட கடிகைகளைக்[2] குறிப்பிட இந்த முத்திரையோடு கூட எண்ணையும் முத்திரையால் குறிப்பிடவேண்டும். சதுர ஹஸ்தம் ( அஸம்யுதம் நெ. 21 ) அரைஜாம நேரத்தைக் குறிக்கும் ( 1½ மணி நேரம்). ஹம்ஸாஸ்ய ஹஸ்தம் ( அஸம்யுதம் நெ. 23 ) ஒரு ஜாமத்தைக் குறிக்கும் (3மணி நேரம்). பதாக முத்திரை ( அஸம்யுதம் நெ. 1 ) 2 ஜாமங்களைக் குறிக்கும் (6 மணி நேரம் ). தாம்ரசூட ஹஸ்தம் ( அஸம்யுதம் நெ. 27 ) 3 ஜாமங்களைக் குறிக்கும் ( 9 மணி நேரம்). அலபத்ம முத்திரை ( அஸம்யுதம் நெ. 20) பகல் பொழுதைக் குறிக்கும். முகுள முத்திரை ( அஸம்யுதம் நெ. 26) இரவைக்குறிக்கும். ஒருநாள் என்று குறிப்பிட ஸூசி முத்திரை (அஸம்யுதம் நெ. 13 ) யைப் பிடிக்க வேண்டும். ஒரு பக்ஷத்தைக் ( 15 நாட்கள் ) குறிக்க ஸர்ப்பசீர்ஷ முத்திரை ( அஸம்யுதம் நெ. 17 ) யைக் குறுக்காகப்பிடிக்கவேண்டும். ஸூசி முத்திரை ( அஸம்யுதம்

---

கால அளவைகளை ஒத்திருக்கிறது. அதன்படி

| | | |
|---|---|---|
| 18 நிமேஷம் | கொண்டது– | 1 காஷ்டை, |
| 30 காஷ்டைகள் | ,, | 1 கலா. |
| 30 கலைகள் | ,, | 1 க்ஷணம். |
| 12 க்ஷணம் | ,, | 1 முகூர்த்தம். |
| 30 முகூர்த்தங்கள் | ,, | 1 நாள். |

** 2. கடிகை என்பது ஒரு நாழிகை, அதாவது 60 விநாடி.

தாளங்களுக்கு உபயோகப்படுத்தும் கால அளவைகள் இவைகளினின்றும் மாறுபட்டவை,

நெ. 13 ) யை அசைக்காமல் பிடித்தால் ஒரு மாதத்தையும், அசைத்தால் இரண்டு மாதங்களையும் குறிக்கும். சுக துண்ட முத்திரை (அஸம்யுதம் நெ. 8 ) யை உயர்த்தி ஸ்திரமாகப் பிடித்தால் ஒரு வருடத்தைக் குறிக்கும்.

## १३. पुष्पहस्ताः ।

इन्दीवरे च कल्हारे चंपके च वराटिके ॥ ६१३ ॥

तापिञ्छे बुद्बुदार्थे च कोरकाणां च भावने ।
ऊर्ध्वीकृताननो हस्तः काङ्गुलो युज्यते क्रमात् ॥ ६१४ ॥

## 13. HASTA FOR DENOTING FLOWERS

(613–614) Kāngūla hasta (Asamyuta No. 19) pointing upward is used to denote Indīvara (the blue lotus), Kalhāra (white water-lily), champaka, a cowrie, Tāpiñcha, (a tamāla flower), a bubble, and tender shoots.

## 13. பூக்களைக் குறிக்கும் முத்திரை.

*(613–614)* காங்கூல ஹஸ்தத்தை (அஸம்யுதம் நெ. *19)* மேல் நோக்கிப்பிடித்தால் நீலத்தாமரையையும், அல்லிப்பூவையும், சண்பக புஷ்பத்தையும், சோழியையும் தமால விருக்ஷத்தின் பூவையும், நீர்க்கொப்புளத்தையும், மொக்குகளையும் குறிக்கும்.

## १४. ताडनहस्ताः ।

सक्थ्यन्तिकचलौ गण्डभागयोरांतिके स्थितौ ।
तत्रैव रेचितौ नाम्ना पताकाभिधहस्तकौ ॥ ६१५ ॥

मर्दलार्थे कपोलार्थे तद्द्वयीताडनक्रमे ।

किणजक कुथा· तद्धिताढें- थो थरिकुथधितढें ।

इदं शब्दं आश्चर्येण उच्यते ।

**क्रमोयं शुद्धनाट्यस्य लक्षितो लक्षणैः पृथक् ॥ ८२४ ॥**

ŪRDHVA TĀṆḌAVA

(821–824) The next is Ūrdhva Tāṇḍava. Standing on the left foot and assuming the Ullōkita (slightly upward) look, the dancer lifts the left leg and holds it up in front of the right ear; the right hand holding S'ikhara mudra (Asamyuta No. 10) is held at the chest and the left hand holding the same mudra is held over the head clasping the right foot. And in this posture the dance takes place.

The Tāla for this Tāṇḍava is jhampa which consists of a druta, a druta virāma and a laghu making up $2\frac{1}{4}$ mātras. The dance syllables are :—

kiṇa jakaku thā – taddhita ḍhēm thō thari ku tha dhi ta ḍhēm.

These syllables are uttered in a wonderstruck manner. Thus is described S'uddha Nāṭya with all its features.

7. ஊர்த்வ தாண்டவம்

*(821–824)* இடது காலில் நின்றுகொண்டு உல்லோகிதம் என்ற மேற் பார்வையுடன் நாட்டியம் ஆடுபவர் வலது காலை வளைத்து உயர்த்தி வலக்காதுக்கருகில் பிடித்துக் கொள்ளவேண்டும். சிகர முத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. *10*) யோடு கூடிய வலதுகையை மார்பில் வைக்க

வேண்டும். அதே முத்திரையுடன் கூடிய இடது கையைத் தலைக்குமேல் உயர்த்தி வலது காலைப்பிடித்துக் கொள்ள வேண்டும். இந்த நிலையில் நர்த்தனம் செய்ய வேண்டும்.

இந்தத் தாண்டவத்திற்கான தாளம் ஜம்பை. இது ஒரு த்ருதமும், த்ருத விராமமும், ஒரு லகுவும் கொண்டது. மாத்திரைகள் $2\frac{1}{4}$.

இந்தத் தாளத்தின் சொல்லுக்கட்டு :—

கிணஜகதுதா—தத்திதாடேம் தோதரிகுததிதடேம்.

இந்தச் சொல்லுக்கட்டுக்களை ஆச்சரியபாவத்தோடு உச்சரிக்கவேண்டும். இவ்வாறு சுத்தநாட்டியம் அதன் எல்லா அங்கங்களோடும் விவரிக்கப்பட்டது.

## देशिनीताण्डवम् ।

देशिनीनाख्यभेदस्य लक्षणं कथ्यते क्रमात् ।
पञ्चभिर्गतिभेदैश्च सहितानि यथाक्रमात् ॥ ८२५ ॥

तत्संख्यया तांडवानि युज्यंते तदनन्तरम् ।
करणैस्तादृशैर्युक्तं तादृशैश्चारिकाचयैः ॥ ८२६ ॥

एवंप्रकारनटनाद्देशिनाख्यं विदुर्बुधाः ।
ततः कथमित्युक्ते तत्र—
पार्वतीतांडवानीह पंचैव तदनुक्रमात् ॥ ८२७ ॥

गतयः पञ्च तदनुकरणान्यथ पञ्च च ।
चार्यश्च पञ्च । तत्र तांडवानां नामानि कथं ?
निकुंचितं कुंचितं च सम्यगाकुंचितं तथा ॥ ८२८ ॥

पार्श्वकुंचितमेव स्यादर्धकुंचितकं तथा ।

वक्ष्ये निकुंचितादीनां तांडवानां यथाक्रमम् ॥ ८२९ ॥
मतांतरं समालोक्य लक्षणं पूर्वसंमतम् ।

DES'INI TĀṆḌVAS

(825–830) The features of different forms of Dēs'inī Tāṇḍavas are now described: These five are accompanied by five gatis and then are added to it five karaṇas and five Cāris. This combination is called Dēs'inī Nāṭyam. They are now described in greater detail. The five Tāṇḍavas of Pārvati which are each accompanied by gati, a karaṇa and a cāri are: (1) Nikuñcita (2) Kuñcita (3) Ākuñcita (4) Pārs'va kuñcita and (5) Ardha kuñcita.

These are described in order according to tradition hereunder, taking into account all the authorities on the subject.

தேசினி தாண்டவம்

*(825–830) தேசினி தாண்டவத்தின் பல்வேறு வகைகள் இப்பொழுது விவரிக்கப்படுகின்றன. இவ்வைந்து தாண்டவங்களோடு ஐந்து கதிகளும், ஐந்து கரணங்களும், ஐந்து சாரிகளும் சேர்க்கப்படுகின்றன. இந்தத் தொகுப்புக்கே 'தேசினி நாட்டியம்' என்று பெயர். அவைகள் ஒவ்வொன்றும் இப்பொழுது விரிவாக விளக்கப்படுகின்றன. கதி, கரண, சாரிகளோடு கூடிய, பார்வதிதேவியின் ஐந்து தாண்டவங்கள் வருமாறு :– (1) நிகுஞ்சிதம் (2) குஞ்சிதம் (3) ஆகுஞ்சிதம் (4) பார்ச்வ குஞ்சிதம் (5) அர்த்த குஞ்சிதம்.*

*நாட்டியக்கலையில் தேர்ந்த பூர்வாசாரியர்களின் அபிப்*

பிராயங்களையும் அநுசரித்து இவைகள் விளக்கப் படுகின்றன.

## १. निकुञ्चितम् ।

तत्र प्रथमं निकुंचिततांडवस्य लक्षणं कथमिति चेत् —

पद्मकोशाभिधौ हस्तौ पुरः पश्चादधोमुखौ ॥ ८३० ॥

दक्षिणः कुंचितः पादो जानुदेशमुपागतः ।
समदृष्टया समायुक्तं तन्निकुंचितमुच्यते ॥ ८३१ ॥

### अथ दर्पणताळः

दर्पणे द्रुद्वयं गश्च (0 0 S)

तस्य शब्दाः —

किढकिढझें थकंकिण झें झें धिद्दा ।

एतस्य मयूरी गतिर्यथा —

### मयूरी गतिः ।

हस्तौ तु कर्तरीकाख्यौ नागबन्धस्थितिर्भवेत् ।
पादाग्राभ्यां तु सरणं मयूरीगतिरीरिता ॥ ८३२ ॥

एतस्य ताळशब्दो यथा —

मयूरीगतिभेदस्य राजनारायणो भवेत् ।

राजनारायण ताळो यथा —

राजनारायणो बिन्दुद्वितयं जगणो गुरुः ॥ ८३३ ॥

(0 0 1 S 1 S)

तस्य शब्दाः —

धरि थकिकुथ कुथां- थोथरिकुथकुझें- किटझनकुकिटथों ।

मन्मथकरणं यथा —

## मन्मथकरणं ।

आलीढस्थानकं यत्र त्रिपताकौ करौ तथा ।
करः प्रसारिते वामः करोऽन्योंसनिवेशितः ॥ ८३४ ॥
पर्यायेण नतं गात्रं उन्नतं तनु मान्मथम् ।

चाषगतिर्यथा —

## चाषगतिचारी ।

वितस्तिमात्रप्रसृतो दाक्षिणश्चरणोऽग्रतः ॥ ८३५ ॥
अनेनैव क्रमेण स्याच्चारी चाषगतिर्मता ।

अनेनैव क्रमेणेति पदात्पूर्वोक्तसमपादचार्या संबंधः ।

## 1. NIKUÑCITA

(830–836) In this Tāṇḍava the hands hold Padmakōs'a mudra (Asamyuta hasta No. 14) facing downward, first in front, then behind. The right leg is bent and rests on the other knee, and the look is normal.

The tāla for this Tāṇḍava is Darpaṇa tāla which consists of two drutas and one guru. The dance-syllables are :—

kiḍha kiḍha jhēm thakankiṇa jhēm jhēm dhiddā.

The gati for this Tāndava is Mayūri gati.

## MAYŪRI GATI

The hands assume Kartarī mudra (Asamyuta No. 4) the dancer starts with the standing posture of Nāgabandha (sthānaka No. 32) and the movement of the foot is S'araṇa or moving in contact with the ground, on the fore-feet.

The tāla for Mayūri gati is Rājanārāyaṇa. It is composed of two drutas, one laghu, one guru, one laghu and lastly a guru, the number of mātras being seven.

The dance-syllables are :—

dhadi thakikutha ku thām – thō thariku thaku-jhēm – kiṭa jhanaku kiṭathōm.

The karaṇa for this combination is Mānmatha karaṇa.

## MĀNMATHA KARAṆA

Starting from Ālīḍha Sthānaka (Sthānaka No. 12) the hands holding Tripatāka mudra (Asamyuta No. 2) the left-hand is extended while the other hand is placed over the shoulder. The body is alternately bowed down and held erect. This is Mānmatha karaṇa. The cāri to be taken is Cāṣa gati.

## CĀṢA GATI CĀRI

In this Gati the right fore-foot is extended to a distance of one span and the movement of the feet is continued in the same manner. Along with this cāri, Samapāda cāri has also to be added as laid down for Mayūra gati in Dakṣiṇa bhramaṇa.

## 1. நிகுஞ்சிதம்

(830–836) இந்தத் தாண்டவத்தில் கீழ்நோக்கிய பத்மகோச முத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 14) களோடு கூடிய கைகளை முதலில் முன்புறத்திலும், பிறகு பின்புறத்திலும் பிடிக்க வேண்டும். வலதுகாலை வளைத்து இடது முழங்காலின்மீது வைத்துக்கொள்ள வேண்டும். சுபாவமான பார்வையோடு இருக்கவேண்டும்.

இதற்கான தாளம் தர்ப்பணம். இதில் இரண்டு த்ருதங்களும் ஒரு குருவும் உண்டு. மாத்திரைகள் 3.

இந்தத் தாளத்தின் சொல்லுக்கட்டு :—

கிட கிட ஜேம் தகம்கிணஜேம் ஜேம் தித்தா.

இந்தத் தாண்டவத்திற்கான கதி மயூரீ கதி.

### மயூரீ கதி

ஆரம்பத்தில் நாகபந்தம் (ஸ்தானகம் நெ. 32) என்ற நிலையில் நின்றுகொண்டு கைகளில் கர்த்தரீ முத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 4) யுடன் இருக்கவேண்டும். முன் பாதங்களின் மேல் 'ஸரணம்' (பாதபேதம் நெ. 3 பக்கம் 137) என்ற முறையில் நகரவேண்டும்.

இந்த கதிக்கான தாளம் ராஜநாராயணம். இதற்கு இரண்டு த்ருதம் ஒரு லகு, ஒரு குரு, ஒரு லகு, ஒரு குரு ஆக ஏழு மாத்திரைகள் உண்டு. இதன் சொல்லுக்கட்டு :—

தரி தகிகுத குதாம்—தோ தரிகுதகுஜேம்—கிடஜனகு கிடதோம்.

இந்தத் தொகுப்பிற்கான கரணம் மன்மத கரணமாகும்.

**மன்மதகரணம்**

ஆரம்பத்தில் ஆலீட ஸ்தானகத்தில் (ஸ்தானகம் நெ. 12) நின்றுகொண்டு கைகளில் த்ரிபதாக முத்திரை (அஸம்யுதம் நெ. 2) யோடு இருக்கவேண்டும். இடது கையை நீட்டி மற்றொருகையை தோளின் மீதும் வைத்துக் கொள்ளவேண்டும். மாற்றி மாற்றி குனிந்தும் நிமிர்ந்தும் நிற்கவேண்டும்.

இந்தத் தொகுப்பில் உபயோகப்படும் சாரி சாஷகதி

**சாஷகதி சாரி**

இந்த கதியில் வலது முன்னங்காலால் ஒரு சாண் தூரம் நகர வேண்டும்; இதேவிதமாக நகர்ந்து கொண்டே செல்லவேண்டும். இந்த சாரியோடு தக்ஷிணப்ரமணத்தில் மயூரகதியோடு சேர்க்கப்படும் ஸமபாதசாரியையும் உபயோகப்படுத்த வேண்டும்.

## २. कुञ्चित ताण्डवम् ।

पश्चात्कुंञ्चितताण्डवं यथा —

हस्तौ संदंशनामनौ पुरःपश्चादधोमुखौ ॥ ८३६ ॥

दाक्षिणायास्तु जंघाया मध्यमाश्रित्य कुंचितः ।
वामपादः परिज्ञेयं कुंचिताभिधताण्डवम् ॥ ८३७ ॥

एतस्य चाचपुटताळो यथा (S11S)

तस्य शब्दाः —

थोंगिटथो तथा- किटाथकणकञ्जें ।

एतस्य हंसगतिर्यथा —

### हंसगतिः ।

करौ तु हंसपक्षाख्यौ मण्डलस्थानकं तथा ।
वामपादेन गोमूत्रगत्या संचरणं भवेत् ॥ ८३८ ॥

हंसी गतिरिति ख्याता देशीनाट्यविशारदैः ।

एतस्य ताळो यथा —

हंसीगतेस्तु ताळोऽयं हंसलीलो भवेच्चथा ॥ ८३९ ॥

हंसलीले विरामान्तं लघुद्वयमुदाहृवम् ।

तस्य शब्दाः —

थिटथकुकुकुथा- नकुथरिथकुह्ले ।

एतस्य सौन्दरकरणं यथा —

### सौन्दरकरणम् ।

वामपादस्थितोऽन्यस्तु कुंचितो जानुमस्तके ॥ ८४० ॥

हस्तौ तु चतुरौ सम्मुखिनौ पार्श्वनिवेशितौ ।
भवेतां यत्र करणं सौन्दरं तदुदाहृतम् ॥ ८४१ ॥

एतस्य विच्यवा चारी ।

विश्लिष्टयोश्चरणयोः समयोरत्र भागतः ।
भूमेः स्यात्कुट्टनं यत्र सा चारी विच्यवोच्यते ॥ ८४२ ॥

### 2. KUÑCITA.

(836–842) In this Tāṇḍava the hands hold Sandams'a mudra (Asamyuta hasta No. 25) facing downward, first in front and then behind; and the

left foot is bent and rests at the middle of the other knee.

The tāla for this Tāṇḍava is Cācapuṭa which is composed of one guru, two laghus and a guru making up six mātras. The dance-syllables are :–

thōngiṭa thō ta thā – kiṭa tha kaṇa ka jhēm.

The gati to be adopted is Haṁsinī gati.

## HAMSINĪ GATI

In this Gati the hands hold Hamsapakṣa mudra (Asamyuta hasta No. 24), the dancer starts from the standing posture of Manḍala (Sthānaka No. 11) and the steps are taken with the left foot moving from side to side.

The tāla for this gati is Hamsa Līla which is composed of two laghus, ending in a virāma making 2¼ matras. The dance-syllables are :—

thiṭathakukukuthā – nakutharithakujhē.

The karaṇa for this combination is Soundara karaṇa.

## SOUNDARA KARAṆA

In this karaṇa the dancer stands on the left foot, the other foot is bent and rested on the top of the knee, the hands assume Catura mudra (Asamyuta hasta No. 21) facing each other and held at the sides.

The cāri in this combination is Vicyavā cāri.

## VICYAVĀ CĀRI

In this cāri the feet are placed first in the normal position, then one of them is separated and stamps on the ground. This is repeated with the other foot also.

### 2. குஞ்சிதம்

*(836–842) இந்தத் தாண்டவத்தில் கீழ்நோக்கிய ஸந்தம்சமுத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 25) களோடு கூடிய கைகளை முதலில் முன்பக்கத்திலும் பிறகு பின்புற மாகவும் பிடிக்க வேண்டும். இடது காலை மடித்து வலது முழங்காலின்மீது வைத்துக் கொள்ளவேண்டும்.*

*இந்தத் தாண்டவத்திற்கான தாளம் சாசபுடமாகும். இது ஒரு குரு, இரண்டு லகு, பிறகு ஒரு குரு கொண்டது. மாத்திரைகள் 6.*

*இதற்கான கதி ஹம்ஸிநீ கதி.*

### ஹம்ஸிநீ கதி

*இந்த கதியில் ஆரம்பத்தில் மண்டல ஸ்தானகத்தில் (ஸ்தானகம் நெ. 11) நின்று கொண்டு ஹம்ஸபக்ஷ முத்திரையுடன் இருக்கவேண்டும். இடது பாதத்தால் அசைந்து அசைந்து நடக்க வேண்டும்.*

*இதற்கான தாளம் ஹம்ஸ லீலை. இது இரண்டு லகுக்கள், ஒரு விராமம் கொண்டது. மாத்திரைகள் 2½.*

*இந்தத் தாளத்திற்கான சொல்லுக்கட்டு :—*

*திட தகுகுகுதா–நகுதரி தகுஜே.*

*இந்தத் தொகுப்பில் உபயோகப்படும் கரணம் ஸௌஷ்ர கரணம்.*

### ஸௌந்தர கரணம்

இந்தக் கரணத்தில் இடது காலில் நின்றுகொண்டு, மற்ரொரு பாதத்தை வளைத்து முழங்காலின்மீது வைத்துக் கொள்ளவேண்டும். சதுர முத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 21) களோடு கூடிய கைகளை ஒன்றையொன்று பார்த்துக் கொண்டிருக்கும்படி பக்கங்களில் பிடிக்க வேண்டும்.

இந்தத் தொகுப்பிற்கான சாரி விச்யவா சாரி.

### விச்யவா சாரி

இந்த சாரியில் பாதங்களை முதலில் சாதாரண நிலையில் வைத்துக் கொண்டு பிறகு ஒரு பாதத்தைப் பிரித்து அதனால் பூமியைத் தட்ட வேண்டும். இதேவிதமாக மற்ரொரு காலாலும் செய்யவேண்டும்.

## ३. आकुञ्चितम् ।

पश्चात् आकुञ्चितताण्डवम् ।

**दक्षिणश्चरणस्तिर्यक्कुंचितो वामसक्थिगः ।**
**पताकाख्यकरौ स्यातां तदाकुंचितताण्डवम् ॥ ८४३ ॥**

रंगताले यथा-रंगश्चतुर्द्रुतीगश्च (00 00S) — इति रंगः ।

तस्य शब्दाः —

थटकिण- थटकिण- किटथक- किणनक- तधिकाकिणथा ।

एतस्य हरिणी गतिर्यथा —

### हरिणीगतिः ।

**हस्तावर्धपताकाख्यौ स्थानं कूर्मासनं ततः ।**
**वामपादाग्रतस्तिर्यक्प्रसार्य च पुनः पुनः ॥ ८४४ ॥**

संचरेद्धरिणीनां तु गतिः कविभिरीरिता ।

एतस्य ताळो यथा —

हरिणीगतेस्तु ताळः स्यात्सिंहनादो निरूपितः ॥ ८४५ ॥

सिंहनादे यगणश्च लघुर्गुरुः (1 S S 1 S)

तस्य शब्दाः —

धिकगुण थकगकु तधिककिण्गथा- किटकिगकुजनथरिकुथों-
तथा- थगुथरिथरिथरिकुथा ।

एतस्या वारुणं करणं यथा —

## वारुणकरणम् ।

कर्तरीस्वस्तिकौ हस्तौ स्थानकं वर्धमानकम् ।
जानुनी नमिते किंचिद्भूयो भूयः प्रसारिते ॥ ८४६ ॥

भवेतां यत्र करणं तद्वारुणमुदाहृतम् ।

एतस्य अड्डिता चारी यथा —

## अड्डिता चारी ।

श्लिष्टाभ्यां चरणाग्राभ्यामग्रतः पृष्ठतोऽपि वा ॥ ८४७ ॥
भवेत्संचरणं यत्र सैषा स्यादड्डिताभिधा ।

## 3. ĀKUÑCITA

(843–848) In this Tāṇḍava the right leg is bent and is placed over the thigh and the hands hold Pataka mudra (Asamyuta hasta No. 1).

The tāla for this Tāṇḍava is Raṅga tāla. It is

composed of four drutas and one guru making four mātras. The dance-syllables are :—

thaṭakiṇa – thaṭakiṇa – kiṭathaku – kiṇanaka – thadhikakiṇathā.

The gati prescribed for this combination is Hariṇī gati.

## HARIṆĪ GATI

In this gati the hands hold Ardhapatāka mudra (Asamyuta hasta No. 3), the dancer starts with the standing posture of Kūrmāsana (Sthānaka No. 31) and the steps are repeatedly taken with the left fore-foot in an oblique direction.

The tāla for this gati is Simhanāda. It is composed of one laghu, two gurus, and then one laghu and one guru, making 8 mātras. The dance-syllables are :—

dhikaguṇa thakaṇaku tadhikakiṇṇathā – kiṭakiṇa ku janatharikuthōm–tathā – thagutharitharitharikuthā.

The karaṇa for this combination is Vāruṇa karaṇa.

## VĀRUṆA KARAṆA

In this karaṇa the hands hold Kartarī Swastika mudra (Samyuta hasta No. 5), the standing posture is Vardhamāna, (Sthānaka No. 16) the knees are bent a little and are extended repeatedly.

The cāri following the karaṇa is Aḍḍitā cāri.

## ADDITA CARI

In this cari the dancer moves forward or backward with the fore-feet in contact with each other.

### 3. ஆகுஞ்சிதம்

(843–848) இந்தத் தாண்டவத்தில் வலது காலை வளைத்துத் துடைக்கு மேலே வைத்துக்கொண்டு கைகளில் பதாகமுத்திரை (அஸம்யுதம் நெ. 1) யோடு இருக்க வேண்டும்.

இந்தத் தாண்டவத்திற்கான தாளம் அரங்கதாளம். இது நான்கு த்ருதங்களும் ஒரு குருவும் கொண்டது. மாத்திரைகள் 4.

இந்தத் தாளத்தின் சொல்லுக்கட்டு :—

தடகிண–தடகிண–கிடதக–கிணனக–ததிக கிணதா.

இந்தத் தொகுப்பில் உபயோகப்படும் கதி ஹரிணீகதி.

### ஹரிணீ கதி

இந்த கதியில் கைகளில் அர்த்தபதாக முத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 3) களோடு கூர்மாஸனம் (ஸ்தானகம் நெ. 31) என்ற நிலையிலிருந்து நர்த்தனத்தை ஆரம்பிக்க வேண்டும். இடது முன்னங்காலால் குறுக்காக நடக்கவேண்டும். இந்த கதிக்கான தாளம் ஸிம்ஹநாதம். இது ஒரு லகு, இரண்டு குரு, பிறகு ஒரு லகுவும், ஒரு குருவும் கொண்டது. மாத்திரைகள் 8.

இந்தத் தாளத்தின் சொல்லுக்கட்டு :—

திகுண தகணகு ததிக கின்னதா–கிடகிணகு ஜனதரி குதோம்–ததா–தகுதரிதரி தரிகுதா.

இந்தத் தொகுப்பில் வாருணகரணத்தை உபயோகப் படுத்தவேண்டும்.

**வாருண கரணம்**

இந்தக் கரணத்தில் கைகளில் கர்த்தரீ ஸ்வஸ்திக முத்திரை (ஸம்யுத ஹஸ்தம் நெ. 5) யுடன் வர்த்தமானம் (ஸ்தானகம் நெ. 16) என்ற நிலையில் நின்றுகொண்டு, முழங்காலைச் சிறிது வளைத்து அடிக்கடி நீட்ட வேண்டும்.

இந்தத் தொகுப்பிற்கான சாரி அட்டிதா சாரி.

**அட்டிதா சாரி**

இந்த சாரியில், ஆடுபவர் முன்னங்கால்களை ஒன்று சேர்த்து அவற்றின்பேரில் முன்னும், பின்னுமாக நகர வேண்டும்.

## ४. पार्श्वकुञ्चिततान्डवम् ।

पश्चात्पार्श्वकुंचिततान्डवं यथा—

हस्तौ तु शुकतुंडाख्यौ शिरोऽप्याकुंचितं भवेत् ॥ ८४८ ॥

उल्लोकिता च दृष्टिः स्यादवलोकितमेव च ।

कुञ्चितो दक्षिणांघ्रिः स्याद्वामोरौ पश्चिमाश्रिताः ॥ ८४९ ॥

प्रलोकितं ततः कुर्यात्पार्श्वताण्डवनर्तने ।

विन्दुमाली तालो यथा —

गुर्वोर्मध्ये तु चत्वारो बिंदवो विन्दुमालिनि ॥ ८५० ॥

(S0000S) – इति विन्दुमाली ।

तस्य शब्दाः —

झें झें किटथों- किटथकुणकुनकु थोंगिटा कथोंगा ।

एतस्य करिणी गतिर्यथा—

## करिणी गतिः ।

करिहस्तयुतौ हस्तौ दाक्षिणांघ्रिः समस्थितः ।
वामांघ्रिणाप्यर्धचंद्रं लिखित्वा तरसा व्रजेत् ॥ ८५१ ॥

पुरोभागे च पश्चात्तु गमने दक्षिणांघ्रिणा ।
एवं लिखित्वा गमनं करिणी गतिरेव सा ॥ ८५२ ॥

एतस्य तालो यथा —

करिणीगतिभेदस्य गजलीलः प्रकीर्तितः ।
गजलीलो विरामांतमुक्तं लघुचतुष्टयम् ॥ ८५३ ॥
(1 1 1 1ं)—इति गजलीलः ।

तस्य शब्दाः —

झे कुणककुझाकुकुजगतांथा- कुतिटतातरिकुजगणां ।

एतस्य गजविक्रीडितकरणं यथा —

## गजविक्रीडितं करणम् ।

कश्चिचितः करो वामस्त्रिपताकामुपागतः ।
दक्षिणश्चलतारूपो लुठितं चरणं भवेत् ॥ ८५४ ॥

एवंविधगुणैर्युक्तं तद्गजक्रीडनं भवेत् ।

## जनिता चारी ।

वक्षसः पार्श्वभागे च हस्तस्तु खटकामुखः ॥ ८५५ ॥

रेचितत्वाद्द्रुतस्त्वन्यः पादोऽग्रतलसंचरः ।
इयं तु जनिता प्रोक्ता विचार्य परमेष्ठिना ॥ ८५६ ॥

## 4. PĀRS'VAKUÑCITA

(848–856) The hands hold S'ukatuṇḍa mudra (Asamyuta hasta No. 8) the head is shaken leisurely up and down, the look is first upward and then changes to downward, the right leg is bent and the back of that foot rests on the left thigh and the look then changes toward the side.

The tāla for this Tāṇḍava is Bindu Māli. It is composed of four drutas with a guru on either side, making six mātras. The dance syllables are:—

jhēm jhēm kiṭa thōm – kiṭathakuṇakunaku thōm giṭā kathōnga.

The gati for this combination is kariṇī gati.

## KARIṆĪ GATI

In this gati the hands assume Kari hasta mudra (Nṛtta hasta No. 13), the right foot is placed in the normal position, the left foot describes a half-moon on the ground and quickly proceeds forward; and the movements are repeated changing the feet for proceeding backward.

The tāla for this gati is Gaja Līla. It is composed of four laghus finished by a Virāma making 4½ mātras. The dance-syllables are:—

jhēkuṇakaku jhakuku jaga tāmthā kutiṭa tātariku jagaṇām.

The karaṇa for this combination is Gajavikrīḍita.

## GAJAVIKRĪḌITA KARAṆA

In this karaṇa the left hand holds Tripatāka mudra (Asamyuta hasta No. 2) and is placed at the hip, the right hand holds Latā mudra (Nṛtta hasta No. 12) and the feet perform the movement of Luṭhita (Pāda bhēda No. 5 page 138).

The cāri that comes after is Janitā cari.

## JANITĀ CĀRI

In this cāri, one of the hands holding Khaṭakā mukha mudra (Asamyuta hasta No. 12) is placed at the side of the chest while the other performs 'rēcita' or cutting or throwing motion in quick succession. The feet performs the movement of Agratalasañcara (Pāda bhēda No. 4 page 144).

### 4. பார்ச்வகுஞ்சிதம்.

*(848–856) சுகதுண்டமுத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 8) யைக் கைகளில் தாங்கி தலையை அடிக்கடி மேலும் கீழுமாக அசைக்கவேண்டும். பார்வை முதலில் மேல் நோக்கியும் பிறகு கீழ் நோக்கியும் இருக்கவேண்டும். வலது காலை வளைத்து அதன் பின்புறத்தை இடது தொடையின் மீது வைத்துக்கொள்ளவேண்டும். பிறகு பார்வை பக்கப் பார்வையாக மாறவேண்டும்.*

*இந்தத் தாண்டவத்திற்கான தாளம் 'பிந்துமாலி'. இது ஒரு குரு, நான்கு த்ருதங்கள், மற்றொரு குரு கொண்டது. மாத்திரைகள் 6.*

*இந்தத்தாளத்தின் சொல்லுக்கட்டு வருமாறு:—*

*ஜேம் ஜேம் கிடதோம்–கிடதகுண குநகு தோங் கிடாக தோங்கா,*

இந்தத் தொகுப்பில் கரிணிகதியும், கஜவிக்ரீடித கரணமும், ஜனிதாசாரியும் உபயோகப்படுகின்றன.

### கரிணிகதி

இந்த கதியில் கைகளில் கரிஹஸ்தமுத்திரை (ந்ருத்த ஹஸ்தம் நெ. 13) யோடு, வலதுபாதத்தைச் சாதாரண நிலையிலும், இடது பாதத்தால் தரையில் ஓர் அரை வட்டமிட்டு முன்னால் அடிவைக்கவேண்டும். இதேவிதமாகக் கால்களை மாற்றிப் பின்னால் அடிவைக்கவேண்டும்.

இந்த கதிக்கான தாளம் கஜலீலை. இது நான்கு லகுக்களும், ஒரு விராமமும் கொண்டது. மாத்திரைகள் 4¼.

இந்தத்தாளத்தின் சொல்லுக்கட்டு வருமாறு:—

ஜேகுணககு ஜகுகு ஜகதாம்தா குதிடதா தரிகு ஜகணும்.

### கஜவிக்ரீடிதகரணம்

இந்தக்கரணத்தில் த்ரிபதாக முத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 2) யோடு இடதுகையை இடுப்பிலும், வலது கையில் லதாமுத்திரை (ந்ருத்த ஹஸ்தம் நெ. 12)யும் வைத்துக்கொள்ளவேண்டும். பாதங்களை லுடிதம் (பாத வகைகள் நெ. 5 பக்கம் 138) என்றமுறையில் நகர்த்த வேண்டும்.

### ஜனிதா சாரி

இந்த சாரியில் கடகாமுக முத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 12)யோடு கூடிய ஒரு கையை விலாப்புறத்தில் வைத்துக்கொள்ளவேண்டும். மற்றொருகையால் ரேசிதம் என்ற வெட்டுதல் அல்லது உதறுதல் போன்ற அசைவுகளை வேகமாகச் செய்யவேண்டும். பாதங்களை அக்ரதலஸஞ்சரம் (பாதவகைகள் நெ. 4, பக்கம். 144) என்ற முறைப்படி நகர்த்தவேண்டும்.

## ५. अर्धकुञ्चितम् ।

खटकामुखहस्तौ स्याच्चालितौ च पुनः पुनः ।
वामांघ्रिः कुंचितस्तिर्यग्दक्षिणां जंघिकां गतः ॥ ८५७ ॥
वीक्षणं वामभागे स्यादर्धकुंचितताण्डवे ।

एतस्य कोकिलप्रियताळो यथा —

कोकिलप्रियनाम्नी तु गलपाः स्युः (S I S) ।

— इति कोकिलप्रियः ।

तस्य शब्दाः —

जगगककिथा- झंतककुझं किणगथा ।

एतस्य सारिका गतिर्यथा —

### सारिका गतिः ।

दक्षिणोऽप्यर्धचंद्रः स्याद्वामपाणिः शुकाननः ॥ ८५८ ॥
वैशाखस्थानकेनैव स्थित्वा दक्षिणपादकम् ।
अभिमर्शौ वामबाहोर्निवेश्य तदनन्तरम् ॥ ८५९ ॥
सरणं वामपादेन सैषा सारी गतिर्मता ।

एतस्य ताळो यथा —

सारिकागतिभेदस्य कंदर्पः परिकीर्तितः ॥ ८६० ॥
द्वौ यगणस्तथा कंदर्पताळस्तस्यैव पर्यायः स्यात्परिक्रमः ।

(0 0 1 S S) — इति कंदर्पः ।

तस्य शब्दाः —

तगुजगुतरिथों–तकिण्ण तटाकिगथा ।

एतस्य चांद्रकरणं यथा —

चांद्रकरणं ।

यत्राञ्चिता भवेच्चारी संयुक्ता स्खलिता यदि ।
हस्तौ मंडलिनौ शीघ्रं रेचितौ चांद्रसंज्ञके ॥ ८६१ ॥

शकटास्या चारिः ।

प्रसारिताग्रचरणं चारेरंगं ससौष्ठवम् ।
भवेद्यस्यामियं चारी शकटास्याऽभिधीयते ।
इत्येवं देशिनाट्यस्य लक्षणं कथितं मया ॥ ८६२ ॥

5. ARDHA KUÑCITA

(857–862) In this Tāṇḍava the hands holding Khaṭakā mukha mudra (Asamyuta hasta No. 12) are repeatedly shaken, the left leg is bent obliquely and rests on the other knee and the look is directed to the left side.

The tāla for this Tāṇḍava is Kokilapriya. It is composed of a guru, a laghu and a pluta making 6 mātras. The dance syllables are :—

jagaṇakakithā – jhēmkakujhēmkiṇṇathā

The gati for this combination is Sārika and the karaṇa is cāndram and the cāri is S'akaṭāsya.

SĀRIKĀ GATI

In this gati, the right hand holds Ardha Candra mudra (Asamyuta hasta No. 6) and the left S'ukatuṇḍa mudra (Asamyuta hasta No. 8). Starting from Vaisākha sthānaka (sthānaka No. 10) the right foot is

placed at the contact of the left hand with the body. In this pose the left foot moves in contact with the ground.

The tāla for this gati is Kandarpa which is composed of two drutas one laghu and two gurus making 4 mātras. An alternative tāla is Parikrama (which is composed of two drutas, two laghus and one guru). The dance-syllables are :—

tagujagutarithōm – takiṇṇa taṭakiṇathā.

## CĀNDRA KARAṆA

This karaṇa starts with Aḍḍitā cāri followed by Skhalita pāda (pāda bhēda No. 21, p. 154). The hands assume Ūrdhva Maṇḍali mudra (Nṛtta ·hasta No. 17) and then perform cutting or throwing movements in quick succession.

## S'AKAṬĀSYA CĀRI

In this cāri the fore-foot is extended and the body is held in Sousṭhava pose i. e., erect pose so as to show off the features.

Thus are described by me the features of Dēs'ini Nāṭya.

## 5. அர்த்த குஞ்சிதம்

*(857–862) இந்தத் தாண்டவத்தில் கடகா முக முத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 12) யோடு கூடிய கைகளை அடிக்கடி அசைக்கவேண்டும். இடது பாதத்தை வளைத்துக் குறுக்காக மற்றொரு முழங்காலின்மீது வைத்துக்கொள்ள வேண்டும். பார்வை வலப்புறமாக இருக்க வேண்டும்.*

இந்தத் தாண்டவத்தின் தாளம் கோகிலப்ரியா. இது ஒரு குரு, ஒரு லகு, ஒரு ப்லுதம் கொண்டது. மாத்திரைகள் 6.

இந்தத் தாளத்தின் சொல்லுக்கட்டு வருமாறு :—

ஜகணககிதா—ஜேம் கருஜேம் கிண்ணதா.

இந்தத் தொகுப்பில் ஸாரிகா கதியும், சாந்திர கரணமும், சகடாஸ்ய சாரியும் உபயோகப்படுத்தவேண்டும்.

### ஸாரிகா கதி

இந்த கதியில் வலது கையில் அர்த்த சந்திர முத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 6) யும் இடது கையில் சுகதுண்ட முத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 8) யும் பிடிக்க வேண்டும். வைசாக ஸ்தானகத்தில் நின்றுகொண்டு வலது பாதத்தை இடதுகை உடம்போடு சேருமிடத்தில் வைத்துக் கொள்ளவேண்டும். இந்த நிலையில் இடது பாதத்தைத் தரையினின்றும் எடுக்காமலேயே நகர்த்தவேண்டும்.

இந்த கதிக்கான தாளம் கந்தர்ப்பம். இது இரண்டு த்ருதங்களும், ஒரு லகுவும் இரண்டு குருவும் கொண்டது. மாத்திரைகள் 6.

கந்தர்ப்ப தாளத்திற்குப் பதிலாக விக்ரமதாளத்தை உபயோகப்படுத்தலாம். இது இரண்டு த்ருதங்களும், இரண்டு லகுக்களும் ஒரு குருவும் கொண்டது. மாத்திரைகள் 5.

இந்தத் தாளத்தின் சொல்லுக்கட்டு :—

தகு ஜகு தரிதோம்—தகிண்ண தடகிணதா.

### சாந்த்ர கரணம்

இந்தக் கரணம் முதலில் அட்டிதா சாரியோடும் பிறகு ஸ்கலித பாதத்தோடும் (பாதபேதம் நெ. 21) ஆரம்பிக்க

வேண்டும். கைகளை ஊர்த்வமண்டலி முத்திரை (ந்ருத்த ஹஸ்தம் செ. 17) யோடு வேகமாக உதறுவதுபோன்று அசைக்கவேண்டும்.

**சகடாஸ்யா சாரி**

இந்த சாரியில் முன்னங்காலை நீட்டி 'ஸௌஷ்டவம்', அதாவது, அங்க அமைப்பின் எழிலை எடுத்துக் காட்டும் முறையில் நிற்க வேண்டும்.

இவ்வாறு தேசினி தாண்டவத்தின் அங்கங்கள் விவரிக்கப்பட்டன.

## पेरुण्यादिकलशान्तनर्तनानि ।

चार्यलंकारनटनं प्राहुः शुद्धञ्च देशिनीम् ।
पेरुणीकलशान्तानां लक्षणं कथ्यते क्रमात् ॥ ८६३ ॥
पेरुणीकलशान्तानां केवलं शब्दनाटिका ।
अंते करणचारीभ्यां योजनां परिभावयेत् ॥ ८६४ ॥

## DANCES PĒRUṆI TO KALAS'A

(863–864) Of the seven varieties of Cāriyalaṅkāra Naṭana the first two namely S'uddha and Dēs'ini have now been dealt with. The other five beginning with Pēruṇi and ending with Kalas'a are now described in detail.

In these five varieties, the Naṭana is mainly guided by the S'abdas or dance-syllables. At the end are added the Karaṇa and Cāri.

**பேருணி முதல் கலசம்வரையுள்ள நர்த்தனங்கள்**

*(863—864)* ஏழுவித சாரியலங்கார நடனங்களில் சுத்தம், தேசினி என்ற முதலிரண்டு வகைகளும் இதுவரை

விவரிக்கப்பட்டன. பேருணியிலிருந்து ஆரம்பித்துக் கலசத்தில் முடியும் மற்ற ஐந்து வகைகளும் இனி விரிவாக விவரிக்கப்படுகின்றன.

இந்த ஐந்துவித நாட்டியங்களும் பெரும்பாலும் சொல்லுக்கட்டுக்களுக்குத் தகுந்தாற்போலவே ஆடப்படும். கடைசியில் கரணமும், சாரியும் சேர்க்கப்படும்.

## பேருணி ।

ब्रह्मानन्दाख्यतालेन पेरुणीं परिनर्तयेत् ।

तस्य शब्दाः —

धरिकुकुकुणांझणकुकुकुथा— किटतरिजगणांतोथरि — कुथझंकिटतक-तकझें — किटथोंगथा — तकजककुकुणककुथा — जहकिटतकजनकुंझें — जक-तकजनझेंझेझें किटातत्ततकुथरिकिणथा — तकिटंतलंगिकिण्णतनुजगनटझें — किण्णकिटथोंगाकिता:टकुकुजे — थरिकिणकिगाकिटकुकुथा ।

एवंप्रकारशब्दानां नटनादौ तदंतके ॥ ८६५ ॥
स्थानकं ब्राह्ममादाय कपित्थशिखरौ करौ ।

अनन्तरं करणचारी कथं ? हैरम्बकरणं यथा —

## हैरम्बकरणम् ।

निवेशितौ हृदि करौ पार्श्वमण्डलिनौ यदि ॥ ८६६ ॥
वामदक्षिणयोः शीघ्रं देहं तदनुगं भवेत् ।
एतद्धैरंबकरणं प्रोक्तं हरिमहीभुजा ॥ ८६७ ॥

## अपस्यन्दिता चारी ।

स्यंदितायाः विपर्यासात्स्यादपस्यंदिता मता ।

## PĒRUṆI

(865–868) In this dance S'abda Nāṭya with the following S'abda or dance syllables has to be performed at the beginning and at the end. The tāla for this dance is Brhmānanda tāla. The dance syllables are the following :—

Dhari kuku kunām jhaṇakukukuthā – Kiṭatarijagaṇām to tharikuthajhamkiṭatakatakajhēm–Kiṭathōnga thā – takajaka kukuṇa kakuthā – Jahakiṭatakajanakum jhēm – Jakataka takajana jhēm jhē jhēm kiṭātattataku tharikiṇathā – taki ṭantaḷamgi kiṇṇatanu jaganaṭa jhēm – Kiṇṇakiṭathōnga kitakiṭakukujhē – tharikiṇa ki ṇakiṭa kukuthā.

Nartanas with these dance syllables are performed. And in the Nartana the Sthānaka used is Brāhma ( sthānaka No. 25 ) and the hands assume Kapittha (Asamyuta hasta No. 11) and S'ikhara (Asamyuta No. 10) respectively. Then follow Hairamba Karaṇa and Apasyanditā Cāri.

## HAIRAMBA KARAṆA

In this karaṇa the hands are first laid at the heart and are then held in the pose of Pārs'vamaṇḍali (Nṛtta hasta No. 18) on either side successively and the body moves in the same direction as the hand.

## APASYANDITĀ CĀRI

Apasyanditā is the exact reverse of Syanditā Cāri in which the left foot is placed in the normal

position, the weight of the body is rested on it and the other foot is extended in an oblique direction to a distance of five spans.

### பேருணி

(855–868) இந்த நாட்டியத்தில் பின்வரும் சொல்லுக் கட்டுக்களுக்குத் தகுந்தாற்போல் முதலிலும் கடைசியிலும் ஆடவேண்டும். இந்த நாட்டியத்திற்கான தாளம் ப்ரம்மானந்தம்.

இந்த நாட்டியத்திற்கான சொல்லுக்கட்டு :—

தரிகுகுகுணும் ஜணகுகுகுதா – கிடதரிஜகணங்தோதரி குதஜம்கிடதகதகஜேம் – கிடதோங்கதா–தகஜககுகுணககுதா – ஜஹகிடதகஜனகுஜேம் – ஜக தக தக ஜனஜேம்ஜேஜேம்கிடதத்த தகுதரிகிணதா– தகிடங்தளாங்கிகிண்ணதனு ஜகநதட ஜேம் – கிண்ணகிடதோங்ககிட கிட குகு ஜே–தரி கிணகிணகிடகுகுதா.

இந்தச் சொல்லுக் கட்டுக்குத் தகுந்தாற்போல் நர்த்தனம் செய்யவேண்டும். நர்த்தனத்தில் ப்ராம்ஹம் (ஸ்தானகம் நெ. 25) என்ற நிற்கும் நிலையிலும், கைகளில் முறையே கபித்தமும் (அஸம்யுத ஹஸ்தம் நெ. 11), சிகர முத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 10) யோடும் இருக்க வேண்டும். பிறகு ஹைரம்ப கரணத்தையும் அபஸ்யந்திதா சாரியையும் ப்ரயோகிக்க வேண்டும்.

### ஹைரம்ப கரணம்

இந்த கரணத்தில் கைகளை முதலில் மார்பிலும், பிறகு பார்ச்வ மண்டலி (ந்ருத்த ஹஸ்தம் நெ. 18) முத்திரையை இரு பக்கங்களிலும் மாற்றி மாற்றி வைத்துக்கொள்ள வேண்டும். கையின் போக்குக்குத் தகுந்தபடி உடலை அசைக்கவேண்டும்.

**அபஸ்யந்திகா சாரி**

வலது பாதத்தை சாதாரண நிலையில் ஊன்றி, அதன் மேல் உடம்பின் பாரத்தை நிறுத்தி, இடது பாதத்தைக் குறுக்காக ஐந்து சாண் தூரம் நீட்டினால் அது அபஸ்யந்திகா சாரியாகும்.

## प्रेंखणी ।

पश्चात्प्रेंखणी यथा —

राजविद्याधरो भवेत् ( 1800 ) – इति राजविद्याधरः ।

तस्य शब्दाः —

था तत्ततकुकुंझें – जकतरितटझे – जककुंजककुंथरिजनकुथा – जह्यकिण्णुकिट्टथा – झेंझें तरिकिटा – तकुतलंगितधिकुकुणांतक्कुं–थरिजंतरिकुकुथा किटझे ।

कपित्थशिखराख्याभ्यां कराभ्यां परिशोभिता ॥ ८६८ ॥

प्रेंखणीनटनं चक्रे शारदा हरसंनिधौ ।

एतस्य शंखकरणं समोत्सरितचारी च यथा —

## शङ्खकरणम् ।

स्थानं ब्राह्मं करौ यत्र संदंशौ रेचितौ पुनः ॥ ८६९ ॥

आकेशपाशाल्लुठितौ करणं शंखनामकम् ।

## समोत्सरितमत्तल्ली ।

पादाभ्यां सरणं शीघ्रं चरणौ चोपसर्पणे ॥ ८७० ॥

समोत्सरितमत्तल्ली चारीयं परिकीर्तिता ।

## PRĒṄKHAṆĪ

(868–871) The tāla for this dance is Rājavidyādhara. It is composed of one Laghu, one Guru and two Drutas making four mātras.

The dance syllables are :—

Thā – tattatakukunjhēm – Jaka tari taṭajhē – Jaka kumjakakum tharijanakuthā – jahākiṇṇukiṭṭatha – jhēm jhēm tarikiṭa– takutalangitadhikukuṇāmthakakumthari jantarikukuthā – Kiṭajhē

In this dance which was first performed by S'ri Saraswati Dēvi in the presence of Lord Paramas'iva, the hands assume the mudras of Kapittha (Asamyuta hasta No. 11) and S'ikhara (Asamyuta No. 10) respectively. The Karaṇa that follows is S'aṅkha Karaṇa and the cāri is Samōtsarita Mattalli.

## S'AṄKA KARAṆA

In this Karaṇa the standing posture is Brāhma. The hands holding Sandams'a mudra (Asamyuta hasta No. 25) are given a quick throwing or cutting motion alternated by a wallowing motion beginning from the tresses of hair.

## SAMŌTSARITA MATTALLI CĀRĪ

In this Cāri the feet are first slowly moved and then quick steps are taken by way of approach.

## ப்ரேங்கணி

*(868–871)* இந்த நாட்டியத்திற்கான தாளம் ராஜ

வித்யாதரம். இது ஒரு லகு, ஒரு குரு, இரண்டு த்ருதங்கள் கொண்டது. மாத்திரைகள் நான்கு.

இந்த நாட்டியத்தின் சொல்லுக்கட்டு வருமாறு :—

தா – தத்தகுகும் ஜேம் – ஜகதரிதடஜே – ஜககும் ஜககும்தரிஜனகுதா – ஜஹாகிண்ணுகிட்டதா – ஜேம்ஜேம்தரிகிடா – தகுதளம்கிததிகுகுணும்தககும் தரிஜம் தரி குகுதா–கிடஜே.

ஸ்ரீஸரஸ்வதி தேவியால் முதன்முதலில் பரமசிவனுக்கு முன்னல் ஆடப்பட்ட இந்த நாட்டியத்தில் கைகளில் முறையே கபித்த (அஸம்யுத ஹஸ்தம் நெ. 11), கடகாமுக (அஸம்யுதம் நெ. 10) முத்திரைகளைப் பிடிக்கவேண்டும். இதில் உபயோகப்படும் கரணம் சங்ககரணம். சாரி ஸமோத்ஸரிதமத்தல்லீயாகும்.

**சங்ககரணம்**

இந்த கரணத்தில் ப்ராம்ஹஸ்தானக் (ஸ்தானகம் நெ. 25)த்தில் நின்றுகொண்டு, ஸந்தம்ச முத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 25) யோடு கூடிய கைகளை ரேசித முறைப்படி உதறுவது போன்று அசைக்கவேண்டும். பிறகு தலையில் இருந்து ஆரம்பித்து கையை நெளிவதுபோல் திருப்பவேண்டும். இந்த இரண்டு அசைவுகளையும் மாற்றி மாற்றிச் செய்யவேண்டும்.

**ஸமோத்ஸரித மத்தல்லீ**

இந்த சாரியில் பாதங்களை மெதுவாக நகர்த்திப் பிறகு வேகமாக நடக்க அடிவைக்க வேண்டும்.

**कुण्डली ।**

**कुण्डलीनाख्यभेदस्य लक्षणं समुदीरितम् ॥ ८७१ ॥**

उत्तानवंचितौ हस्तौ वैष्णवं स्थानकं भवेत् ।
वरदाभयहस्तौ च पर्यायेण तयोरमू ॥ ८७२ ॥

पादाभ्यां निर्णयं कुर्यात्तालशब्दोऽयमिष्यते ।
कुण्डलीनाट्यशब्दस्य तालो लक्ष्मीशनायकः ॥ ८७३ ॥

तस्य शब्दाः —

जहकिटथों — थरिकुंथकझें — किण्णांकुतटकुझें ।

एतस्य नारायणं करणं मत्तल्लिका चारी यथा —

## नारायणकरणम् ।

उत्तानवंचितौ हस्तौ वैष्णवस्थानकं भवेत् ।
नारायणाख्यकरणं कथितं पूर्वसूरिभिः ॥ ८७४ ॥

## मत्तल्लिका चारी ।

पदद्वयस्य चलनाद्यत्र स्यादुपसर्पणे ।
वरदाभयहस्तौ च चारी मत्तल्लिकाभिधा ॥ ८७५ ॥

ननर्त्त नटनं साक्षात्कुण्डलीं पुरुषोत्तमः ।

## KUṆḌALI

(871–876) In Kuṇḍali Nāṭya the hands are placed in pose of Uttānavañcita and the standing posture assumed is Vaiṣṇava Sthānaka. The hands are alternately changed to Varada and Abhaya and the feet register by their movements, the change of hasta mudras and follow the dance syllables. The tāla for this Nāṭya is Lakṣmīs'a tāla. It is composed of a druta and Laghus on either side making 2½ mātras.

The dance syllables are :—

Jahakiṭathōm – tharikum thakajhēm– Kiṇṇāmkuta ṭaku jhēm.

The Karaṇa for this Nāṭya is Nārāyaṇa Karaṇa and the cāri is Mattallika.

## NĀRĀYAṆA KARAṆA

In this karaṇa the hands hold Uttānavañcita hasta ( Saṃyuta hasta No. 10 ) and the standing posture assumed is Vaiṣṇava (Sthānaka No. 26).

## MATTALLIKĀ CĀRI

In this cāri both the feet are moved forward in a shaky manner while the hands hold Varada and Abhaya mudra.

This Nāṭya was first performed by Mahā Viṣṇu.

## குண்டலி

*(871—876) குண்டலி நாட்டியத்தில் கைகளில் உத்தானவஞ்சித முத்திரை (ஸம்யுத ஹஸ்தம் நெ. 10) யோடு வைஷ்ணவ ஸ்தானகத்தில் நிற்கவேண்டும். கைகளை வரதாபய முத்திரைக்கு மாற்றிக்கொள்ள வேண்டும். பாதங்களை கைகளின் முத்திரைக்குத் தகுந்தவாறும், சொல்லுக் கட்டுக்களுக்குத் தகுந்தாற்போலவும் அசைக்க வேண்டும்.*

*இந்த நாட்டியத்தில் உபயோகப்படுவது லக்ஷ்மீச தாளம்.*

*இந்தத் தாளத்தின் சொல்லுக்கட்டு :—*

*ஜஹகிடதோம்——தரிகும்தகஜேம்——கிண்ணாம்குதடகு ஜேம்.*

இந்த நாட்டியத்தில் நாராயண கரணமும், மத்தல்லிகா சாரியும் உபயோகப்படும்.

### நாராயண கரணம்

இந்தக் கரணத்தில் கைகளில் உத்தானவஞ்சித (ஸம்யுத ஹஸ்தம் நெ. 10) முத்திரையோடு வைஷ்ணவ ஸ்தானக (ஸ்தானகம் நெ. 26) த்தில் நிற்கவேண்டும்.

### மத்தல்லி சாரி

இந்த சாரியில் கைகளில் வரதாபய முத்திரையோடு பாதங்கள் இரண்டையும் அசைத்துக்கொண்டு முன்னே செல்லவேண்டும்.

இந்த நாட்டியம் முதலில் மஹாவிஷ்ணுவால் ஆடப்பட்டது.

### दण्डिका ।

नाट्ययोर्लक्षणं वक्ष्ये दण्डिकाकलशाख्ययोः ॥ ८७६ ॥

प्रागुक्तं दंडिकालक्षणं यथा —

कपित्थहस्तौ कथितौ स्थानं वैशाखमेव च ।
पादाग्राभ्यां तु सरणं पंचधा नृत्यभावना ॥ ८७७ ॥
विजयानंदतालेन दण्डिकानटनं भवेत् ।
विजयानंदताले तु लघुद्वयगुरुत्रयम् ॥ ८७८ ॥

(1 1 S S S)—इति विजयानंदतालः ।

तस्य शब्दाः —

थोजनकुलगुणककुढिं ढिंकुढिकुढिकुकु तदकिणं तरिकु जकातद्धिक-कुकिटतकथिझें ।

एतस्य विष्णुक्रांतकरणमध्यर्धिका चारी च यथा —

## अध्यर्धिका चारी ।

पश्चाद्दक्षिणपादस्य गमनादितरस्य तु ।
अपसर्पणयोगेन भवेदध्यर्धिका मता ॥ ८७९ ॥
दण्डिकाभिधनाट्यस्य चार्यंते करणं भवेत ।
इतीव वचनात्पश्चाल्लिखितं करणं मतम् ॥ ८८० ॥
तत्कथमिति चेत्,

## विष्णुक्रांतकरणम् ।

गगनोन्मुखमंघ्रिं स्याद्दक्षिणोऽन्यो महीं गतः ।
हस्तौ तु रेचिताकारौ विष्णुक्रांतं विदुर्बुधाः ॥ ८८१ ॥
दंडिकानाट्यकलनां चक्रे कमलमंदिरा ।

### DAṆḌIKĀ

(876–882) In Daṇḍikā Naṭana the dancer stands in Vaiśākha Sthānaka (Sthānaka No. 10) holding Kapittha mudra (Asamyuta hasta No. 11) holding the sticks and move with short steps on the fore-feet. The movements in the Nāṭya are repeated five times.

The Tāla for this Nāṭya is Vijayānanda. It is composed of two laghus and three gurus making eight mātras. The dance-syllables are :—

Tho janaku taguṇakakuḍhim ḍhimkuḍhikuḍhi kuku taha kiṇam tharikujakātaddhikakukiṭa takakijhe.

The karaṇa that has to follow is Viṣṇukrānta and cāri is Adyardhika. But the cāri comes first and then the karaṇa.

## ADHYARDHIKA CĀRI

If the right foot is placed behind the left as if in an attempt to go back, the cāri is called Adhyardhika.

## VIṢṆUKRĀNTA KARAṆA

In this karaṇa the dancer stands on the left foot, lifts the right foot pointing to the sky and the hands hold the pose of Recita (Nṛtta hasta No. 7).

This Nāṭya was first performed by Mahālakṣmi.

### தண்டிகா

(876—882) தண்டிகா நாட்டியத்தில் வைசாக ஸ்தானக (ஸ்தானகம் நெ. 10) த்தில் நின்றுகொண்டு கைகளில் கபித்த முத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 11) யுடன் கைகளில் கோலாட்டக் கழிகள் தாங்கி முன்னங் கால்களால் சிறிய சிறிய அடியாக வைக்கவேண்டும். இந்த நாட்டியத்தில் ஐந்து முறை இம்மாதிரி ஆடவேண்டும்.

இந்த நாட்டியத்திற்கான தாளம் விஜயாநந்தம். இது இரண்டு லகுக்களும், மூன்று குருவும் கொண்டது. மாத்திரைகள் 8.

நாட்டியத்திற்கானச் சொல்லுக்கட்டு :—

தோஜனகு தகுணக குடிம் டிம் குடிகுடிகுகு தஹ கிணம் தரிகுஜகா தத்திககுகிட தககிஜே.

இந்த நாட்டியத்தில் விஷ்ணுக்ராந்த கரணமும், அத்யர்த்திகா சாரியும் உபயோகப்படுத்தப்பட வேண்டும். ஆனால் இதில் சாரி முதலிலும், கரணம் கடைசியிலும் வர வேண்டும்

### அக்யர்த்திகா சாரி

பின்னால் செல்ல யத்தனிப்பதுபோல் வலது பாதத்தை இடது பாதத்தின் பின்புறமாக வைத்தால் அதற்கு 'அத்யர்த்திகா சாரி' என்று பெயர்.

### விஷ்ணுக்ராந்த கரணம்

இந்த கரணத்தில் இடது காலில் நின்றுகொண்டு வலது பாதத்தை உயரத்தூக்க வேண்டும். கைகளில் ரேசித முத்திரை (ந்ருத்த ஹஸ்தம் நெ. 7) யோடு இருக்க வேண்டும்

இந்த நாட்டியம் முதன் முதலில் மஹாலக்ஷ்மியால் ஆடப் பட்டது.

### कलशः ।

तस्याश्च कलशं नृत्तं लक्षणं सम्यगुच्यते ॥ ८८२ ॥

जयमंगळतालेन कलशं परिनर्तयेत् ।
सगणद्वितयं यत्र स ताळो जयमंगळः ॥ ८८३ ॥

(1 1 S 1 1 S) — इति जयमंगळः ।

तस्य शब्दाः —

झककिटक— जककिटताझेझें— किण्णंकिटकुकुझें— थोंकणकुतटाकिणक-तककुढिकुतधींझे ।

एतस्य गरुडप्लुतकरणं यथा —

### गरुडप्लुतकरणं ।

पादः प्रसारितः पश्चाद्दक्षिणस्तत्रांतमुन्नतम् ।
प्रसारितौ पताकौ च करणे गरुडप्लुते ॥ ८८४ ॥

## एडकाक्रीडिता चारी ।

पादयोस्सरणे यत्र भवेदुत्प्लुतितौ यदि ।
एडकाक्रीडिता प्रोक्ता नृत्तकर्मविशारदैः ॥ ८८५ ॥

इत्येवं कलशं नाट्यं ननर्त नळिनालया ।
पेरुणीकलशांतानामित्येवं मेळनक्रमात् ॥ ८८६ ॥

चारीदर्पणमित्याहुः नाट्यशास्त्रविशारदाः ।
मेळनात्सप्तलास्यानां गतिनांडवभाविनाम् ॥ ८८७ ॥

चारीकरणयुक्तानां चारीभूषणमेव तत् ।
एतानि सप्त लास्यानि सुमते सम्यगाचर ॥ ८८८ ॥

इति श्रीनन्दिकेश्वरविरचिते भरतार्णवे नाट्यार्णवे
सुमतिबोधके सप्तलास्यप्रकरणं नाम
चतुर्दशोऽध्यायः ॥

---

## KALAS'A

(882–888) The tāla for this Nāṭya is Jayamaṅgala. It is composed of two laghus and a guru and then two laghus and a guru making 8 mātras.

The dance-syllables are :—

jhakakiṭaka – jakakiṭatājhējhōm – kiṇṇamkiṭakukujhē – thōm kaṇakutaṭakiṇaka takakuḍhikutadhīmjhē.

The karaṇa that has to follow is Garuḍa pluta and the cāri is Ēḍakākrīḍita.

## GARUḌAPLUTA KARAṆA

The right foot is extended backward and raised

while the hands holding Patāka mudra (Asamyuta hasta No. 1) are extended forward.

## ĒḌAKĀKRĪḌITA CĀRI

When the feet first move slowly and then step forward with a bound the cāri is called Ēḍakākrīḍita.

Thus did Mahālakṣmi perform the dance Kalas'a. These combinations from Pēruṇi to Kalas'a is called Cāri Darpaṇam. The name of Cāri Bhūṣaṇa is given to all the combinations in Sapta Lāsya of Tāṇḍava, Gati, Karaṇa and Cāri.

Oh! Sumati! Observe these rules and perform the Sapta Lāsya with all its elegance.

Here ends the Chapter XIV of Bharatārṇava of Nandikēśwara addressed to Sumati dealing with Sapta Lāsya.

---

## கலசம்

(882—888) இந்த நாட்டியத்திற்கான தாளம் ஜய மங்களம். இது முதலில் இரண்டு லகுக்களும், ஒரு குருவும் பிறகு இரண்டு லகுக்களும் ஒரு குருவும் கொண்டது. மாத்திரைகள் 8.

இந்த நாட்டியத்தின் சொல்லுக்கட்டு வருமாறு:—

ஜகஙிடக—ஜகஙிடதா ஜேஜேம்—ஙிண்ணாம் கிடகுகுஜே—தோம்கணகுதடகிணக தககுடிகுத தீம் ஜே.

இந்த நாட்டியத்தில் கருடப்லுத கரணமும், ஏடகாக்ரீடித சாரியும் உபயோகிக்க வேண்டும்.

**கருடப்லுத கரணம்**

பதாக முத்திரை (அஸம்யுத ஹஸ்தம் நெ. 1) களோடு கூடிய கைகளை முன்னே நீட்டி வலது காலைப் பின்புறமாக வளைத்து உயர்த்தி நிற்கவேண்டும்.

**ஏடகாக்ரீடித சாரி**

பாதங்களை மெதுவாக நகர்த்திப் பிறகு குதித்துச் சென்றால் அதற்கு 'ஏடகா க்ரீடிதம்' என்று பெயர்.

இவ்விதமாக மஹாலக்ஷ்மியால் முதன் முதலில் கலச நாட்டியம் ஆடப் பட்டது. பேருணி முதல் கலசம் வரையிலுமுள்ள இந்தத் தொகுப்புக்களுக்கு 'சாரீ தர்ப்பணம்' என்று பெயர். 'சாரிபூஷணம்' என்ற பெயர் தாண்டவம், கதி, கரணம், சாரி முதலியவைகள் சேர்ந்த எல்லா தொகுப்புகளுக்கும் கொடுக்கப்பட்டிருக்கிறது.

சுமதி! இந்த விதிகளை நன்குணர்ந்து ஸப்த லாஸ்யங்களை அவற்றின் பூரண எழிலுடன் ஆடுவாயாக!'' என்றார் நந்திகேசுவரர்.

**இதனோடு சுமதிக்கு நந்திகேசுவரரால் அருளப்பட்ட பரதார்ணவத்தில் ஸப்தலாஸ்யங்களைப்பற்றி விவரிக்கும் 14-வது அத்தியாயம் முற்றுப்பெற்றது.**

---

**पञ्चदशोऽध्यायः ।**

**पुष्पाञ्जलिः ।**

कथं वा सप्तलास्यानां मेळनक्रमचातुरी ।
आदौ वा नंदिकेशान नृतिमध्येप्यधः कृताः ॥ ८८९ ॥

अन्ते वा कल्पनीयः स्यात् ख्यातः पुष्पांजलिक्रमः ।
सुमते श्रूयतां तत्र द्विविधा नाट्यकल्पना ॥ ८९० ॥

दैविकं मानुषं पश्चादिति द्विविधमीरितम् ।
दैविकस्य कथं लक्ष्म मानुषस्य तु मे वद ॥ ८९१ ॥

पुष्पांजलिनृतिः पूर्वं पश्चादागमनर्तनम् ।
एवंविधगुणैर्युक्तं दैविकं परिकीर्तितम् ॥ ८९२ ॥

पुष्पांजलिक्रमः पूर्वं पश्चात्तु मुखचालयः ।
एवंविधगुणैर्युक्तं मानुषं नटनं भवेत् ॥ ८९३ ॥

आदावेतद्द्वयं कुर्याच्छृंगनाट्यं ततो भवेत् ।
दैविकं देवताः कुर्युर्मर्त्याः कुर्युश्च मानुषम् ॥ ८९४ ॥

दैविके मानुषे चापि देवानां चास्ति योग्यता ।
दैविके नटने भूमौ राज्ञश्चेत्प्रीतिराशयः ॥ ८९५ ॥

अंगपूजाविधिं कृत्वा ततो दैविकमाश्रयेत ।
मानुषे च नराः सर्वे कुर्युः शंकरपूजनम् ॥ ८९६ ॥

पार्वत्यास्तु ततः कुर्यात्सप्तलास्यादिनर्तने ।
एवंविधानसहितं तन्नाट्यं सफलं भवेत ॥ ८९७ ॥

एतद्विधानरहितं तन्नाट्यं विफलं भवेत् ।

## CHAPTER XV

### PUṢPĀÑJALI – THE PRELIMINARY OFFERING OF FLOWERS

### THE TWO KINDS

(889–898) Sumati asked, 'When is Puṣpāñjali to be offered? Is it in the beginning, in the middle or at the end of Sapta Lāsya?'

Nandikēśwara replied: 'Puṣpāñjali is to be offered at the beginning of Sapta Lāsya. There are two

modes of performing the Puṣpāñjali dance. They are severally called Daivika (celestial) and Mānuṣa (human)'.

Sumati then requested Nandikes'wara to explain the two modes.

Nandikēs'wara explained 'In the Daivika mode Puṣpāñjali Naṭana is first performed and then the dance according to original texts. In the Mānuṣa mode, after the Puṣpāñjali Naṭana, the dances known as Mukha Cāli are to be performed. In Sṛṅga Nāṭya both these modes are performed in the beginning. But in general the Daivika mode is to be performed by celestials and Mānuṣa mode is to be performed by human beings.

The celestials are competent to use either mode. If Daivika Naṭana is desired by the king, then it can be performed after going, through the ceremonies of Aṅgapūja or the worship prescribed as part of Puṣpāñjali.

In the Mānuṣa mode men shall always do the worship of Lord Paramas'iva and of Pārvati and then begin the dances like Sapta Lāsyas. It is only if the Nāṭya is performed in this manner it will be a success yielding its beneficial results; otherwise it will be a failure.

அத்தியாயம் 15

புஷ்பாஞ்சலி

இருவகைகள்

*(889–898)* "புஷ்பாஞ்சலி நடனத்தை ஸப்தலாஸ்

யங்களின் ஆரம்பத்திலா, இடையிலா அல்லது கடைசியிலா ஆடவேண்டும்" என்று ஸுமதி கேட்டார்.

நந்திகேசுவரர் "புஷ்பாஞ்சலியை ஸப்தலாஸ்யங்களை ஆடுவதற்கு முதலிலேயே நடத்த வேண்டும். புஷ்பாஞ்சலி நாட்டியத்தில் இருவகையுண்டு. அவைகள் தைவிகம், மானுஷம் என்பவையாகும்." என்றார்.

ஸுமதி அவ்விரண்டு வகைகளையும் விவரிக்கும்படி கேட்டுக்கொண்டார்.

நந்திகேசுவரர் பின்வருமாறு விளக்கினார்; "தைவிக புஷ்பாஞ்சலியில் அதற்குரிய நடனத்தை முதலில் செய்த பிறகு நாட்டிய சாஸ்திரத்தில் விவரிக்கப்பட்டிருக்கும் நாட்டிய வகைகளை ஆடவேண்டும். 'மானுஷம்'. என்ற புஷ்பாஞ்சலி நடனத்திற்குப் பிறகு 'முகசாலி' என்ற நாட்டியங்களை ஆடவேண்டும். ச்ருங்கநாட்டியத்தின் ஆரம்பத்தில் இந்த இருவகை புஷ்பாஞ்சாலிகளையும் ஆரம்பத்தில் செய்ய வேண்டும். ஆனால் பொதுவாக 'தைவிகம்' தேவர்களாலும் 'மானுஷம்' மானிடர்களாலுமே அனுஷ்டிக்கப்படல் வேண்டும்.

தேவர்கள் இந்த இருவகை புஷ்பாஞ்சலிகளையும் நடத்தலாம். ஆனால் 'தைவிக' புஷ்பாஞ்சலி நடனத்தைக் காண அரசன் விரும்பினால் அங்கபூஜை முதலியவைகளைச் செய்தபிறகு அதை ஆடலாம்.

'மானுஷ' புஷ்பாஞ்சலியில் பரமசிவனையும் பார்வதியையும் அவசியம் வழிபடல் வேண்டும். பிறகு ஸப்தலாஸ்யம் முதலியவைகளை ஆரம்பிக்கவேண்டும். இந்த முறையில் நாட்டியம் செய்தால்தான் நாட்டியம் வெற்றிகரமாக அமைந்து அதன் பலனையளிக்கும். இல்லாவிடில் பயனற்றுப் போகும்.

## दिक्पालपुष्पाञ्जलिविधिः ।

भगवन्नंदिकेशान पुरा मां प्रति वामव्रः ॥ ८९८ ॥

पुष्पांजलिविधिः सोऽयं अष्टदिक्पालमान्कृतः ।
इति प्रोवाच हर्षेण तद्रहस्यं वदस्व भो ॥ ८९९ ॥

तत्रापि यदि वांछा स्यात सुमने शृणु सादरम् ।
शुद्धलास्योद्यते देवे विबुधा वासवादयः ॥ ९०० ॥

विकीर्य दिव्यपुष्पाणि यत्र यत्रापि शंकरः ।
तांडवभ्रमणं चक्रे तत्र तत्रापि ते क्रमात् ॥ ९०१ ॥

देव भक्तजनाधार पंचकृत्यावलंबन ।
वयं कृतार्थाः स्मो नाथैः पार्वतीप्राणवल्लभ ॥ ९०२ ॥

इति स्तोत्रविधिं चक्रे शक्राद्यमरमंडलः ।
तदा प्रसन्नहृदयस्तान्प्राह परमेश्वरः ॥ ९०३ ॥

आरंभे सप्तलास्यानामधुना कल्प्यते मया ।
भुवि वाऽमर्त्यलोके वा सप्तलास्यमितः परम् ॥ ९०४ ॥

न वै नटतु यो युष्मत्पूजां नादौ भजन्क्रमात् ।
तत्र किंचिद्विशेषोस्ति श्रूयतां मुनिपुंगवाः ॥ ९०५ ॥

मम वा माधवस्यापि विधेर्वा सर्वदेवताः ।
विघ्नेशस्कन्दयोस्सप्तमातृणामपि तादृशाम् ॥ ९०६ ॥

पार्वत्यास्तु सरस्वत्याः कमलाया यदा नटाः ।
अग्रभागे सप्तलास्यं नटंति क्रमवेदिनः ॥ ९०७ ॥

तदा नास्तीह वः पूजा पश्चादन्यत्र संसदि ।
युष्मत्पूजा विधातव्या पुष्पांजलिविवेकिभिः ॥ ९०८ ॥

सभायामस्मदादीनामस्मत्पूजाविधिर्भवेत ।
अन्येषां देवतानाञ्च यक्षगंधर्वमंमदाम ॥ ९०९ ॥
तद्वन्मनुष्यलोकानां सभायां युष्मदर्चनम ।
विधेयं नर्त्तकैर्दैवं नृत्यविघ्नोपशांतये ॥ ९१० ॥

## THE RULE ABOUT DIKPĀLAS' WORSHIP

(898–910) Sumati then said to Nandikes'wara "My master Indra has told me that in the ceremony of Puṣpāñjali, Dikpālas (the presiding deities of the eight quarters) are to be propitiated. (But you have not told me so). Please tell me if there is any secret reason for this".

Nandikes'wara then explained as follows:–"When Lord Paramas'iva performed his wonderful dance of S'uddha Lāsya, the celestials showered the heavenly flowers at every place where the Lord performed the rotatory dances and extolled him saying "Oh Lord! ever loved by Sri Pārvati as her very life! you are the support of the celestials and Devotees. The five-fold cosmic activity (of creation, protection, destruction, concealment and grace) are entirely in your hands. We all feel that we have achieved our long cherished object in life after witnessing your wonderful dance".

Hearing these words of sincere laudation the Lord granted the celestials that whenever the Sapta Lāsya dance then created by him is performed on the earth or in the celestial world, the dancer shall propitiate the Devas first. Otherwise he shall not perform the dance. There is however a proviso to this

rule, that is, if this dance should be performed in His presence or in the presence of Mahāviṣṇu or of Brahma or Mahī Gaṇapati, Skanda, the Seven Mothers, Pārvati, Saraswati or Lakṣmi, then they alone are to be propitiated and not the other Dēvatas. When Dances take place in other places the Devas will have the propitiation. Where the performance is before other deities than the principal ones or before Yakṣas, Gāndharvas not to speak of human beings, such a propitiation is necessary and will bring about the disappearance of all obstacles.

## திக்பாலகர்களுக்குப் புஷ்பாஞ்சலி சமர்ப்பிப்பதைப் பற்றிய விதி

*(898–910) ஸுமதி நந்திகேசுவரரிடம் பின்வருமாறு கேட்டார் "என்னுடைய குரு இந்திரன் நாட்டியத்தில் திக்பாலகர்களுக்கு புஷ்பாஞ்சலி செய்யவேண்டும் என்று சொல்லியிருக்கிறார். ஆனால் தாங்கள் அதைப்பற்றி இது வரை ஒன்றும் சொல்லவில்லை. அதற்கு ஏதேனும் விசேஷ காரணம் உண்டோ?"*

*நந்திகேசுவரர் பின்வருமாறு பதிலளித்தார் :—*

*"பரமசிவன் தன்னுடைய அற்புத நடனமாகிய சுத்த லாஸ்யத்தை ஆடுகையில் தேவர்கள் ஆங்காங்கு பரமசிவன் தாண்டவ ப்ரமணங்களைச் செய்தவிடங்களில் புஷ்பாஞ்சலி செய்து இவ்விதம் பரமசிவனைத் துதித்தனர்; 'பிரபுவே! பார்வதியின் ப்ராணவல்லபரே! நீரே தேவர்களுக்கும், பக்தர்களுக்கும், ஆதாரமானவர். இவ்வுலகத்தை ஆக்கி, அழித்து, நீக்கி, மறைத்து, அருளும் ஐந்தொழிலும் தங்கள் கையிலேயே இருந்துவருகின்றன. உமது அற்புதமான*

நடனத்தைக் கண்டபிறகு நாங்கள் எங்களுடைய வாழ்க்கைக் குறிக்கோளை அடைந்துவிட்டதாக உணர்கிறோம்' என்று துதித்தனர்.

தேவர்களின் இந்த உணர்ச்சிமிக்க பாராட்டுதலைக் கேட்ட பரமசிவன் "என்னால் உண்டாக்கப்பட்ட ஸப்த லாஸ்யங்கள் தேவலோகத்திலோ அல்லது பூவுலகத்திலோ எங்கு நடந்தாலும் நாட்டியம் ஆடுபவர் உங்களுக்குப் புஷ்பாஞ்சலி செய்யவேண்டும். அவ்வாறு செய்யாமல் நாட்டியம் ஆடக்கூடாது என்ற விதியை ஏற்படுத்துகிறேன். ஆனால் இந்த விதிக்கும் ஓர் விலக்கு உண்டு. அதாவது நாட்டியம் என்னுடைய சந்நிதியிலோ, அல்லது மஹாவிஷ்ணுவின் சந்நிதியிலோ, பிரம்மா, மஹாகணபதி, ஸ்கந்தர், ஏழுமாதாக்கள், பார்வதிதேவி, சரஸ்வதி, லக்ஷ்மி முதலியவர்களின் சந்நிதியிலோ நடந்தால் அந்த சந்நிதிக்குரிய தெய்வத்திற்கே புஷ்பாஞ்சலி செய்யவேண்டும். மற்ற இடங்களில் நாட்டியம் நடக்கும்போதே உங்களுக்கு புஷ்பாஞ்சலி செய்யவேண்டும். மற்ற தேவர்கள் சந்நிதியிலும், யக்ஷர்கள், கந்தர்வர்கள் சந்நிதியிலும், மனிதர்களின் சபையிலும் உங்களுக்குப் புஷ்பாஞ்சலிபூஜை உண்டு. இவ்வாறு புஷ்பாஞ்சலி செய்தால் எல்லாவித இடையூறுகளும் விலகிப்போகும்."

## पुष्पाञ्जलि नर्तने स्थानकविधिः ।

परंपरा शंकरेण कृतः पुष्पाञ्जलिक्रमः ।
कथं वा योजनामार्गः कथ्यतां नंदिकेश्वर ॥ ९११ ॥
तथा ते श्रूयतां सम्यक् पुष्पांजलिविवेचनम् ।
एकत्रिंशत्स्थानभेदा दिक्पालांशा इति स्मृताः ॥ ९१२ ॥
तत्रापि किञ्चिद्भेदोऽस्ति स्थानकानां विवेचने ।
वैष्णवं समपादं च वैशाखं मंण्डलं तथा ॥ ९१३ ॥

आलीढं प्रत्यालीढं च स्थानान्येतानि षट् नृणाम् ।
शिवादीनां संनिधौ चेत्पुष्पांजलिरिति क्रमः ॥ ९१४ ॥

नटतस्तत्र योज्यानि पुष्पांजलिविवेकिभिः ।
आयतं चावहित्थं स्यादश्वक्रांतं च मोटितम् ॥ ९१५ ॥

विनिवृत्तं तथा चैन्द्रं चांडिकं परिकीर्तितम् ।
एतानि सप्त स्थानानि स्त्रीलिंगेषु कृतानि च ॥ ९१६ ॥

एतानि सप्तस्थानानि दिक्पालानां नृतिक्रमे ।
योज्यानि नाट्यकुशलैः क्रमशो वा क्रमम् विना ॥ ९१७ ॥

साम्यपादं स्वस्तिकं च वर्धमानमतः परम् ।
नन्द्यावर्त्तं पार्ष्णिपीडमेकपार्श्वाभिधानकम् ॥ ९१८ ॥

एकजानुस्थानकं च परिवृत्ताभिधं ततः ।
पृष्ठोत्तानतळं चैकपादस्थानकमेव च ॥ ९१९ ॥

ब्राह्मं च वैष्णवं शैवं गारुडं समसूचिकम् ।
पश्चाद्विषमसूचीति स्थानकं कथितं पुरा ॥ ९२० ॥

कूर्मासनं नागबंधं स्थानान्यष्टादश क्रमात् ।
नपुंसकस्थानकानि सुमते कथितानि च ॥ ९२१ ॥

शिवादीनामग्रभागे विष्ण्वादीनां च नर्त्तने ।
क्रमेणैवाक्रमेण स्याद्योज्यानि सुरनर्तके ॥ ९२२ ॥

एवं त्रिविधरूपाणां स्थानकानां विवेचने ।
नंदिकेश दयाशालिन्पुरुषस्थानकानि षट् ॥ ९२३ ॥

अष्टदिक्षु कथं तानि योजनीयानि च क्रमात् ।
तथा चेत्तद्रहस्यं ते सुमते कथयाम्यहं ॥ ९२४ ॥

स्त्रीस्थानकानि पुरुषस्थानकैः सह दिङ्नृतैः ।
यत्र कुत्रापि योज्यानि सेयं शंकरसंमतिः ॥ १२५ ॥

त्रिविधानां स्थानकानामितरेतरयोजना ।
कार्या शिवाग्रभागे चेदिति गौरीमतोदिता ॥ १२६ ॥

नपुंसकस्थानकानि स्वैः स्वैरेव तथा नृतौ ।
योजनीयानि तान्येव कदाचित्तेन वा न वा ॥ १२७ ॥

## STANDING POSES FOR PUṢPĀÑJALI

(911–927) Sumati then asked about the standing poses appropriate to Puṣpāñjali. Nandikēs'wara replied 'all the thirty-one standing poses that have been detailed before have to do with the Dikpālas in their origin. But there is a slight distinction in their use. The six masculine standing poses namely Vaiṣṇava, Samapāda, Vais'ākha, Maṇḍala, Ālīḍhā and Pratyālīḍha are to be used when the performance is before Paramas'iva and other principal deities. The seven feminine standing poses namely Āyata, Avahittha, As'wakrānta, Mōṭita, Vinivṛtta, Aindra and Cāṇḍika have to be employed in other cases, that is, where the propitiation of the Dikpālas has to be made. These can be employed in their order or out of order. The eighteen neutral poses namely Sāmya pāda, Swastika, Vardhamāna, Nandyāvarta, Pārṣṇipīḍa, Ēkapārs'va, Ēkajānu, Parivṛtta, Pṛṣṭhōttāna tala, Ēka pāda, Brāhma, Vaiṣṇava, S'aiva, Gāruḍa, Samasūci, Viṣamasūci, Kūrmāsana and Nāgabandha are to be used both when the dance takes place before the

principal duties like S'iva, Viṣnu and also in other places either in the order or out of order.

Sumati then asked how the six masculine standing poses are to be distributed among the eight directions where the deities are invoked. Nandikēs'wara then replied that it is Lord S'ankara's view that in dances facing the several quarters, both the masculine and the feminine standing poses may be employed; and according to Sri Pārvati all the three classes of standing poses can be employed indifferently in the dances before Lord S'ankara. Further, the neutral poses may be employed generally for the deities connected with the poses; but sometimes they are employed in other cases also.

### புஷ்பாஞ்சலியில் ஸ்தானகங்களை உபயோகப் படுத்தும் முறை

*(911—927)* புஷ்பாஞ்சலிக்குரிய ஸ்தானகங்களைப் (நிற்கும்நிலைகள்) பற்றி சுமதி வினவ, நந்திகேசுவரர் சொல்லுகிறார். "முன் விவரிக்கப்பட்ட முப்பத்தொரு ஸ்தானகங்களும், அவற்றின் உற்பத்தியில் திக்பாலர்களுக்குச்சம்பந்தப்பட்டவையே. ஆனால் அவைகளைப் பிரயோகிப்பதில் சில விதிகள் இருக்கின்றன. அதாவது ஆடவர் நிலைகள் ஆறும் அதாவது வைஷ்ணவம், ஸமபாதம், வைசாகம், மண்டலம், ஆலீடம், ப்ரத்யாலீடம் என்பவை பரமசிவன் முதலிய முக்யமான தேவர்கள் முன்பு நாட்டியமாடுகையில் உபயோகிக்க வேண்டியவை. மகளிர் நிற்கும் நிலைகள் ஏழும் அதாவது ஆயதம், அவஹித்தம், அச்வக்ராந்தம், மோடிதம், விநிவ்ருத்தம், ஐந்த்ரம், சாண்டிகம் என்பவை மற்ற சமயங்களில் உபயோகிக்கத்தக்கவை அதாவது திக்பாலகர்களுக்குப் புஷ்பாஞ்சலி செய்யும்போது உபயோகிக்க

